# இன்பத் தமிழ் வாசகம்

## மூன்றாம் புத்தகம் - மூன்றாம் படிவம்

## முதல் பாகம்

[1951-ஆம் வருடத்திய திருத்திய பாடத்திட்டப்படி
தயாரிக்கப் பெற்றது]

வித்துவான். பொன். சுப்பிரமணியம்,
புலவர். பா. மகாலிங்கம்,
தமிழாசிரியர்கள், திருவாவடுதுறை ஆதீனம் உயர்நிலைப்பள்ளி,
திருவிடைமருதூர்.




ஜெனரல் புக் கம்பெனி
கும்பகோணம்.

பதிப்புரிமை] 1951 [விலை ரூ. 1—0—0

# முன்னுரை

"இன்பத் தமிழ் வாசகம்" என்ற பெயருடன் வெளிவரும் இப்புத்தகம் அரசியலார் அண்மையில் வெளியிட்ட புதிய பாட திட்டப்படி எழுதப் பெற்றதாகும்.

மூன்ரும் படிவ மாணவர்க்கு உரிய இப் **"பொதுத் தமிழ்"**ப் புத்தகத்தில் (முதற் பாகம்) அவர்களது தகுதிக்கு ஏற்ற செய்யுள், உரை நடைப் பாடங்கள் தொகுக்கப் பெற்றுள்ளன. பாடங்களின் இறுதியில் அருஞ்சொற் பொருளும், உரைக் குறிப்புகளும் சேர்த்துள்ளோம். மாணவர் மொழி வளம் பெறும் வகையில், மொழிப் பயிற்சிகளும், கட்டுரை யாக்கமும் உரைநடைப் பாட இறுதியில் சேர்க்கப்பட்டுள்ளன.

இப்புத்தகத்தில் தங்கள் செய்யுட்களை வெளியிடும் உரிமை வழங்கிய புலவர்களுக்கும், அவற்றை வெளியிட்டவர்களுக்கும் எங்கள் நன்றி உரியதாகும்.

மாணவர் உலகம் இப்புத்தகத்தால் பெரிதும் பயனடையத் தமிழன்னை அருள் புரிவாளாக!

இங்ஙனம்,

திருவிடைமருதூர்.
25—10—51

**பொன். சுப்பிரமணியம்.**
**பா. மகாலிங்கம்.**



# உள்ளுறை

## செய்யுட் பகுதி

**உரை நடைப் பகுதி**

# இன்பத் தமிழ் வாசகம்

(மூன்றும் புத்தகம்)

## [முதற் பாகம்]

## செய்யுட் பகுதி

## I. வாழ்த்து

### 1. தேவாரம்

சங்கநிதி பதுமநிதி யிரண்டுந் தந்து
தரணியொடு வானாளத் தருவ ரேனும்
மங்குவார் அவர்செல்வம் மதிப்போம் அல்லோம்
மாதேவர்க்(கு) ஏகாந்தர் அல்ல ராகில்
அங்கமெலாங் குறைந்தழுகு தொழுநோ யராய்
ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனும்
கங்கைவார் சடைக்கரந்தார்க்(கு) அன்ப ராகில்
அவர் கண்டீர் யாம்வணங்கும் கடவு ளாரே,

திருநாவுக்கரசர்

### 2. பெரிய திருமொழி

கண்ணார் கடல்சூழ் இலங்கைக்(கு) இறைவன்தன்
திண்ஆகம் பிளக்கச் சரஞ்செல உய்த்தாய்!
விண்ணோர் தொழும் வேங்கடமா மலைமேய,
அண்ணா! அடியேன் இடரைக் களையாயே.

திருமங்கை யாழ்வார்

## 3. திருவருட்பா

தடித்தவோர் மகனைத் தந்தைதான் அடித்தால்
　　தாயணைத்(து) இடுவள்தா யடித்தால்
பிடித்(து)ஒரு தந்தை அணைப்பன் ஈங்(கு) எனக்குப்
　　பேசிய தந்தையும் தாயும்
பொடித்திரு மேனி அம்பலத்(து) ஆடும்
　　புனித ! நீ யாதலால் என்னை
அடித்தது போதும் அணைத்திட வேண்டும்
　　அம்மையப் பா ! இனி ஆற்றேன்,

**இராமலிங்க சுவாமிகள்**

## 4. முதுமொழி மாலை

அறநெறி வழுவாத் தவத்துறை வேந்தை
　　அருமறைப் பொருளின்உட் பொருளைத்
தரைதனில் இட்டகாமியம் உதவு
　　சற்குணக் கற்பகா டவியைக்
குறைவில் ஆ னந்தத் துறையிடத்(து) அமர்ந்த
　　கொண்டலை லோகநா யகரை
மறைபுகழ்ந்(து) ஏத்தும் ஞானவா ரிதியை
　　மகம்மதை என்றுகாண் குவனே !

**உமறுப் புலவர்**

## 5. இரட்சணிய யாத்திரிகம்

கன்னி பாலனுய்க் காசினி தனில்அவ தரித்து
மன்னு சீவகோ டிகள்எலாம் வான்கதி மருவத்
தன்னு யிர்ப்பரித் தியாகமும் சிலுவையில் தந்த
என் உபாசன மூர்த்தியை அஞ்சலித் திடுவாம்,

**எச். ஏ. கிருஷ்ணப் பிள்ளை**

குறிப்புரை:

1. தேவாரம்: இத்திருப்பாடல் தேவாரம் என்னும் சைவத் திருமுறையைச் சேர்ந்ததாகும். இதனை இயற்றியவர் திருநாவுக்கரசு சுவாமிகள். இவர்கள் பிறந்தருளிய நாடு-திருமுனைப்பாடி நாடு; ஊர்: திருவாமூர்; குலம்: சைவ வேளாளர்; தந்தை: புகழனர்; தாய்: மாதினியார்; தமக்கை: திலகவதி யம்மையார்; இவர்களது இளமைப் பெயர் மருள்நீக்கியார் என்பது; சமண குருவாய் வாழ்ந்த காலத்து மகேந்திரவர்மனால் 'தருமசேனர் என்ற பெயரும், சூலை நோய் நீங்கிச் சைவ மதத்தைத் தழுவித் தேவாரப் பாடல்களைப் பாடியருளிய பொழுது இறைவனால் 'நாவுக்கரசு' என்ற பெயரும் பெற்றார்கள். காலம் 7-ம் நூற்றாண்டு.

தே+வாரம் - இறைவனைப் பற்றிய இசைப்பாடல்; தே+ஆரம் - தெய்வத்தைப் பற்றிய பாமாலை என்றும் பொருள் கூறுவதுண்டு. சங்கம், பதுமம் - இவை பேர் எண்களைக் குறிக்கும் சொற்கள்; சங்கம் எனவும் பதுமம் எனவும் சொல்லத் தகுந்த பெருஞ் செல்வங்கள்; தரணி - பூமி; வான் - தேவருலகு; மாதேவர் என்றது இறைவனை; ஏகாந்தர் - (இறைவனுக்கு உண்மை அடியவராய்த்) தனி உரிமை பெற்றவர்; தொழுநோய்-குட்டம்; ஆ - பசு; கங்கைவார் சடைக் கரந்தார் - கங்கைப் பேரியாற்றைத் தன் நீண்ட சடையில் மறைத்த சிவபெருமான்,

2, பெரிய திருமொழி: பெருமையை உடைய திருமொழி என்பது பொருள்; அழகிய சிறந்த சொற்களினால் ஆகியதால் திருமொழி எனவும், ஏனைய வைணவப் பெரியார்களது பிரபந்தங்களினும் பெரியது ஆதலால் பெரிய திருமொழி எனவும் பெயர் பெற்றது. இப்பாசுரத்தை இயற்றியவர் திருமங்கை ஆழ்வார் ஆவர்; பிறந்த நாடு: சோழமண்டலத்துத் திருமங்கை நாடு; ஊர் - திருக்குறையலூர்; காலம் கி. பி. 8-ம் நூற்றாண்டு.

கண்ஆர் - இடம் அகன்ற; இலங்கை இறைவன் என்றது இராவணனை; திண் ஆகம் - வலி மிக்க மார்பு; சரம் - அம்பு. அண்ணா - பெருமை மிகுந்தவனே; இடர் - துன்பம்.

3. **திருவருட்பா:** சிவபெருமானது அருளின் திறங்களை விளக்கும் பாடல்களைக் கொண்ட நூல் எனவும் இறைவனது திருவருட் பேறுகளை அடைவிக்கும் பாடல்கள் எனவும் பொருள் படும். வலிய மனதையும் கரைந் துருகச் செய்யும் இனிமை நிறைந்த நூல். இந்நூலை இயற்றியவர் இராமலிங்க சுவாமிகள் ஆவார். இவர்கள் பிறப்பிடம் சிதம்பரத்திற்கு அருகில் உள்ள மருதூர்; தந்தை: இராமையா பிள்ளை; தாய்: சின்னம்மை; குலம்: கருணிகர்; காலம்: 15-ம் நூற்றாண்டு.

தடித்த - வணக்கம் இல்லாத; பொடித்திருமேனி - திருநீறு பூசப்பெற்ற அழகிய உடல்; அம்பலம் - பொன்னம்பலம்; ஆற்றேன் - சகியேன்; அணைத்து + இடவேண்டும் - அணைத்திட வேண்டும்.

4. **முதுமொழி மாலை:** பழைய சொற்களால் ஆகிய நூல் என்பது பொருள்; இதனை இயற்றியவர் உமறுப்புலவர் ஆவார். இவர் சேதுபதி மன்னர்க்கு அமைச்சராய்த் திகழ்ந்தவர்; நபிகள் நாயகத்தின் வரலாற்று நூல் இயற்றவிரும்பி, 'நபிகளே நூலுக்கு அடியெடுத்துக் கொடுக்கவேண்டும்' என வேண்டிப் பாடிய பாடல்களின் தொகுதியே முதுமொழி மாலையாகும். காலம்: 17-ம் நூற்றாண்டு எனலாம்.

வழுவா - நீங்காத; தவத்துறை வேந்து - நபிகள் நாயகம் (முகமது நபி); தரை - உலகம்; இட்ட காமியம் – விரும்பிய பொருள்; கற்பகம் - பெற நினைத்த பொருள்களை உடன் அடை விக்கும் ஒரு மரம்; அடவி - காடு; கற்பக + அடவி - கற்பகாடவி; கொண்டல் – மேகம்; வாரிதி – கடல்.

5. **இரட்சணிய யாத்திரிகம்:** கிறித்துவ காப்பியம்; நூல் ஆசிரியர்: H. A. கிருஷ்ணப் பிள்ளை; தந்தை: சங்கர நாராயண பிள்ளை; தாய்: தெய்வநாயகி அம்மை. இவர் கிறித்துவமதத்தைத் தழுவினர். இவரது காலம்: 19-ம் நூற்றாண்டு.

கன்னி – மேரி அம்மை: காசினி – உலகம்; மன்னுதல் – நிலை பெறுதல்; பரித்தியாகம் - பிறர்க்குக் கொடுத்த; உபாசனை மூர்த்தி - வழிபடுகடவுள்

# II. அறவுரை

## 1. திருக்குறள்

### இறைவனை நினைத்தல்

மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார். 1

### நீத்தாரது பெருமை

செயற்கரிய செய்வார் பெரியர்; சிறியர்
செயற்கரிய செய்கலா தார். 2

### இல்லறத்தான் அறம் செய்யும் வழி

அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது. 3

### தந்தை புதல்வற்குச் செய்யும் உதவி

தந்தை மகற்காற்றும் நன்றி அவையத்து
முந்தி யிருப்பச் செயல். 4

### அன்பினது சிறப்பு

அறத்திற்கே அன்புசார்(பு) என்ப அறியார்;
மறத்திற்கும் அஃதே துணை. 5

### விருந்தினர்க்கு இன்முகம் காட்டல்

மோப்பக் குழையும் அனிச்சம்; முகம்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து. 6

### இன்னாத கூறலின் குற்றம்

இனிய உளவாக இன்னாத் கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று. 7

### நடுவு நிலைமையின்றி வந்த செல்வம்

நன்றே தரினும் நடுவிகந்தாம் ஆக்கத்தை
அன்றே ஒழிய விடல். 8

### நாவினை அடக்குதல்

யாகாவார் ஆயினும் நாகாக்க; காவாக்கால்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு. 9

### ஒழுக்க முடைமை

உலகத்தோடு ஒட்ட ஒழுகல் பலகற்றுங்
கல்லார் அறிவிலா தார். 10

### பொறை யுடைமையது சிறப்பு

பொறுத்தல் இறப்பினை என்றும்; அதனை
மறத்தல் அதனினும் நன்று. 11

### வெஃகுதலின் குற்றம்

இலமென்று வெஃகுதல் செய்யார் புலம் வென்ற
புன்மையில் காட்சி யவர். 12

### புறங் கூற்றினது கொடுமை

கண்ணின்று கண்ணறச் சொல்லினுஞ் சொல்லற்க
முன் இன்று பின்னோக்காச் சொல். 13

### சொல்லப்படுவனவும் படாதனவும்

சொல்லுக சொல்லின் பயனுடைய; சொல்லற்க
சொல்லிற் பயனிலாச் சொல். 14

### வறுமையிலும் ஒப்புரவு ஆற்றல்

இடனில் பருவத்தும் ஒப்புரவிற்(கு) ஒல்கார்
கடனறி காட்சி யவர். 15

### ஈதலின் சிறப்பு

ஆற்றுவார் ஆற்றல் பசியாற்றல்; அப்பசியை
மாற்றுவார் ஆற்றலின் பின். 16

### கூடா ஒழுக்கம் இல்லாதவரது சிறப்பு

மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம்
பழித்தது ஒழித்து விடின். 17

### பொய்ம்மையது தீமை

தன்நெஞ்(சு)அறிவது பொய்யற்க; பொய்த்தபின்
தன்நெஞ்சே தன்னைச் சுடும். 18

### வெகுளியது தீங்கு

நகையும் உவகையும் கொல்லும் சினத்தில்
பகையும் உளவோ பிற 19

**இன்னா செய்யாமை**

இன்னாசெய் தாரை யொறுத்தல் அவர்நாண
நன்னயஞ் செய்து விடல். 20

**இறைவன் மாண்பு**

முறைசெய்து காப்பாற்று மன்னவன் மக்கட்(கு)
இறையென்று வைக்கப் படும். 21

**கல்வியது சிறப்பு**

கேடில் விழுச்செல்வம் கல்வி யொருவற்கு;
மாடல்ல மற்றை யவை. 22

**கல்லாதார் மக்கட் பிறவியால் பயனெய்தாமை**

விலங்கொடு மக்கள் அனையர் இலங்குநூல்
கற்றாரோ(டு) ஏனை யவர். 23

**அறிவுடைமையது இலக்கணம்**

எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு. 24

**குற்றம் கடிதல்**

தினைத்துணையாங் குற்றம் வரினும் பனைத்துணையாக்
கொள்வர் பழிநாணு வார். 25

**சிற்றினம் சேராமையது சிறப்பு**

மனநலம் நன்குடைய ராயினுஞ் சான்றோர்க்(கு)
இனநலம் ஏமாப்பு உடைத்து. 26

**தொழில்களைச் செய்யுந் திறம்**

எண்ணித் துணிக கருமம்; துணிந்தபின்
எண்ணுவம் என்பது இழுக்கு, 27

**காலம் அறிதலின் பயன்**

ஞாலம் கருதினும் கைகூடும் காலம்
கருதி யிடத்தாற் செயின். 28

**வினைசெய்தற்கு ஆகும்இடம் அறிதல்**

அஞ்சாமை அல்லால் துணைவேண்டா எஞ்சாமை
எண்ணி யிடத்தாற் செயின் 29

**எல்லோரையும் தெளிதற்காகும் வழி**

குணநாடிக் குற்றமும் நாடி அவற்றுள்
மிகைநாடி மிக்க கொளல். 30

**வினை ஆளுதற்கு உரியானது இலக்கணம்**

அன்பறிவு தேற்றம் அவாவின்மை யிந்நான்கும்
நன்குடையான் கட்டே தெளிவு. 31

**செல்வத்தால் ஆம்பயன் சுற்றத்தாரை அணைத்தல்**

சுற்றத்தால் சுற்றப் படவொழுகல் செல்வந்தான்
பெற்றத்தால் பெற்ற பயன். 32

**பொச்சாப்பு உடையார்க்கு வரும் குற்றம்**

அச்சம் உடையார்க்கு அரணில்லை; ஆங்கில்லை
பொச்சாப்பு உடையார்க்கு நன்கு. 33

**நேரான ஆட்சியாளர் எய்தும் பயன்**

குடி தழீஇக் கோலோச்சும் மாநில மன்னன்
அடிதழீஇ நிற்கும் உலகு. 34

**கொடுங்கோல் ஆட்சி செய்பவனது குற்றம்**

அல்லற்பட்(டு) ஆற்றாது அழுதகண் ணீரன்றே
செல்வத்தைத் தேய்க்கும் படை. 35

**ஊக்கமுடையவரது உயர்வு**

சிதைவிடத்து ஒல்கார் உரவோர்; புதையம்பிற்
பட்டுப்பா(டு) ஊன்றும் களிறு. 36

**மடியிலாதான் அடையும் பயன்**

மடியிலா மன்னவன் எய்தும் அடியளந்தான்
தாஅய(து) எல்லாம் ஒருங்கு. 37

**துன்பம் வந்தாலும் முயற்சியை விடக்கூடாது**

தெய்வத்தான் ஆகாது எனினும் முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும். 38

**ஊழால் வரும் துன்பத்திற்கு அழியாமைக்கு வழி**

இடுக்கண் வருங்கால் நகுக; அதனை
அடுத்தூர்வ(து) அஃதொப்ப(து) இல். 39

**அமைச்சரது குணத்தன்மை**

தெரிதலும் தேர்ந்து செயலும் ஒருதலையாச்
சொல்லலும் வல்ல(து) அமைச்சு. 40

**சொல் சொல்லுமாறு**

சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொல் அச்சொல்லை
வெல்லுஞ்சொ(ல்) இன்மை அறிந்து. 41

**தீவினைகளால் பொருள் தேடலின் தீமை**

சலத்தால் பொருள்செய்தே மார்த்தல் பசுமண்
கலத்துணீர் பெய்திரீஇ யற்று. 42

**வினை செய்யும் வழி**

துன்பம் உறவரினுஞ் செய்க துணிவாற்றி
இன்பம் பயக்கும் வினை. 43

**வலிமை யுடையவன் வினை செய்யும் திறம்**

வினைபகை என்றிரண்டின் எச்சம் நினையுங்கால்
தீயெச்சம் போலத் தெறும். 44

**குறிப்பு அறிவாரது சிறப்பு**

ஐயப் படாஅ தகத்த துணர்வானைத்
தெய்வத்தோ(டு) ஒப்பக் கொளல். 45

**அவை யறிதல்**

அவையறிந்(து) ஆராய்ந்து சொல்லுக சொல்லின்
தொகையறிந்த தூய்மை யவர். 46

**எது நாடு?**

பொறையொருங்கு மேல்வருங்கால் தாங்கி இறைவற்(கு)
இறையொருங்கு நேர்வது நாடு. 47

**படையின் இலக்கணம்**

கூற்றுடன்று மேல்வரினுங் கூடி யெதிர்நிற்கும்
ஆற்ற லதுவே படை. 48

**படைவீரர் அஞ்சாமை**

விழித்தகண் வேல்கொண்டெறிய அழித்திமைப்பின்
ஒட்டன்றோ வன்க ணவர்க்கு. 49

**நட்பின் இலக்கணம்**

முகநக நட்பது நட்பன்று; நெஞ்சத்(து)
அகநக நட்பது நட்பு. 50

**நட்புச் செய்யத் தகாதவர்**

உள்ளற்க உள்ளம் சிறுகுவ; கொள்ளற்க
அல்லற்கண் ஆற்றறுப்பார் நட்பு. 51

**பழையார் நட்பு விடற்பாலதன்று**

அழிவந்த செய்யினும் அன்பறார் அன்பின்
வழிவந்த கேண்மை யவர். 52

**போரில் துணை செய்யாத நட்பின் தீமை**

அமரகத்(து) ஆற்றறுக்கும் கல்லாமா அன்னார்
தமரில் தனிமை தலை. 53

**கூடாநட்பைச் சொல்லால் தெளிதல் ஒண்ணாது**

சொல்வணக்கம் ஒன்னார்கண் கொள்ளற்க வில்வணக்கம்
தீங்கு குறித்தமை யான். 54

**குடிப் பிறந்தாரது இயல்பு**

ஒழுக்கமும் வாய்மையும் நாணுமிம் மூன்றும்
இழுக்கார் குடிப்பிறந் தார். 55

**தாழ்வதற்கு ஏதுவானவற்றைச் செய்தலின் குற்றம்**

குன்றின் அனையாருங் குன்றுவர் குன்றுவ
குன்றி யனைய செயின். 56

**பெருமை உடையாரது செயல்**

பெருமை யுடையவர் ஆற்றுவார் ஆற்றின்
அருமை யுடைய செயல். 57

**சான்றாண்மைக் குணங்கள் நிறைந்தவரது சிறப்பு**

ஊழி பெயரினும் தாம்பெயரார் சான்றாண்மைக்(கு)
ஆழி யெனப்படு வார் 58

**தன் குடியை உயர்த்துபவனுக்குத் துணை**

குடிசெய்வல் என்னும் ஒருவற்குத் தெய்வம்
மடிதற்றுத் தான்முந் துறும். 59

**உழவு செய்யாவிடின் உண்டாகும் குற்றம்**

இலமென் றசைஇ யிருப்பாரைக் காணின்
நிலமென்னும் நல்லாள் நகும். 60

## 2. நாலடியார்

### கல்விச் சிறப்பு

வைப்புழிக் கோட்படா; வாய்த்தீயின் கேடில்லை;
மிக்க சிறப்பின் அரசர் செறின்வவ்வார்;
எச்சம் எனஒருவன் மக்கட்குச் செய்வன
விச்சை; மற்(று) அல்ல பிற. (1)

### கற்றூர் உயர்வு

களர்நிலத் துப்பிறந்த உப்பினைச் சான்றோர்
விளைநிலத்து நெல்லின் விழுமிதாக் கொள்வர்;
கடைநிலத்தோர் ஆயினும், கற்றுணர்ந் தோரைத்
தலை நிலத்து வைக்கப் படும். (2)

### குடிப்பிறந்தார் தன்மை

ஒருபுடை பாம்பு கொளினும், ஒருபுடை
அங்கண்மா ஞாலம் விளக்குறூஉந் திங்கள்போல்
செல்லாமை செவ்வனேர் நிற்பினும் ஒப்புரவிற்(கு)
ஒல்கார் குடிப்பிறந் தார், (3)

### சிற்றறி வுடையார் தன்மை

தாமேயும் இன்புறூர்; தக்கார்க்கும் நன்றாற்றூர்;
ஏமஞ்சார் நன்னெறியுஞ் சேர்கலார்;—தாமயங்கி
ஆக்கத்துள் தூங்கி அவத்தமே வாழ்நாளைப்
போக்குவார் புல்லறிவி னர், (4)

### தானே தன் உயர்வுக்குக் காரணம்

நன்னிலைக்கண் தன்னை நிறுப்பானும், தன்னை
நிலைகலக்கிக் கீழிடு வானும்,—நிலையினும்
மென்மேல் உயர்த்து நிறுப்பானும், தன்னைத்
தலையாகச் செய்வானும் தான். (5)

சமணமுனிவர்

## 3. ஆசாரக் கோவை

### ஆசாரவித்து

நன்றி அறிதல், பொறையுடைமை, இன்சொல்லோ(டு)
இன்னாத எவ்வுயிர்க்குஞ் செய்யாமை, கல்வியோ(டு)
ஒப்புர(வு) ஆற்ற அறிதல், அறிவுடைமை,
நல்லினத் தாரோடு நட்டல் இவையெட்டும்
சொல்லிய ஆசார வித்து. (1)

### திறமுடையார் செய்கை

துன்பத்துள் துன்புற்று வாழ்தலும், இன்பத்துள்
இன்ப வகையான் ஒழுகலும்,—அன்பிற்
செறப்பட்டார் இல்லம் புகாமை இம்மூன்றும்
திறப்பட்டார் கண்ணே உள. (2)

### பிறரிடம் பேசும் முறை

விரைந்துரையார்; மேன்மேல் உரையார்; பொய்யாய
பரந்துரையார்; பாரித்(து) உரையார்;—ஒருங்(கு) எனைத்தும்
சில்லெழுத்தி னாலே பொருளடங்கக் காலத்தால்
சொல்லுக செவ்வி அறிந்து. (3)

### புகலாகாத இடங்கள்

சூதர் கழகம் அரவம் அறுக்களம்
பேதைகள் அல்லார் புகாஅர்; புகுபவேல்
ஏதம் பலவும் தரும். (4)

### ஒருவர் செய்யத் தகாதவை

எழுச்சிக்கண் பிற்கூவார்; தும்மார், வழுக்கியும்
எங்குற்றுச் சேறிரோ என்னாரே;—முன்புக்கு
எதிர்முகமா நின்றும் உரையார்; இருசார்வும்
கொள்வார் குரவர் வலம். (5)

பெருவாயின் முள்ளியார்

## 4. திரிகடுகம்

### புகழுடம்பு எய்தியவர்

மண்ணின்மேல் வான்புகழ் நட்டானும், மாசில் சீர்ப்
பெண்ணினுள் கற்புடையாள் பெற்றானும்,—உண்ணும்நீர்
கூவல் குறைவின்றித் தொட்டானும் இம்மூவர்
சாவா உடம்பெய்தி னார். (1)

### செல்வத்தை உடைக்கும் படை

தன்னை வியந்து தருக்கலும், தாழ்வின்றிக்
கொன்னே வெகுளி பெருக்கலும்,—முன்னிய
பல்பொருள் வெஃகும் சிறுமையும் இம்மூன்றும்
செல்வம் உடைக்கும் படை. (2)

### அழியாப்புகழுடையவர்

தன்நச்சிச் சென்றாரை எள்ளா ஒருவனும்,
மன்னிய செல்வத்துப் பொச்சாப்பு நீத்தானும்,
என்றும் அழுக்கா(று) இகந்தானும் இம்மூவர்
நின்ற புகழுடை யார். (3)

### தோன்றி அழிவன

கிளைஞர்க்(கு) உதவாதான் செல்வமும், பைங்கூழ்
விளைவின்கண் போற்றான் உழவும்,—இளையனாய்க்
கள்ளுண்டு வாழ்வான் குடிமையும் இம்மூன்றும்
உள்ளன போலக் கெடும். (4)

### எச்சமிழந்து வாழ்பவர்கள்

நன்றிப் பயன்தூக்கா நாணிலியும், சான்றோர்முன்
மன்றில் கொடும்பா(டு) உரைப்பானும்—நன்று இன்றி
வைத்த அடைக்கலங் கொள்வானும் இம்மூவர்
எச்சம் இழந்துவாழ் வார். (5)

நல்லாதனார்.

## 5. நான் மணிக் கடிகை

நிலத்துக்கு அணி என்ப நெல்லும் கரும்பும்;
குளத்துக்கு அணிஎன்ப தாமரை; பெண்மை
நலத்துக்கு அணிஎன்ப நாணம்; தனக்கு அணி
தான்செல் உலகத்து அறம். (1)

கந்தில் பிணிப்பர் களிற்றை; கதம் தவிர
மந்திரத்தி னால்பிணிப்பர் மாநாகம்; கொந்தி
இரும்பில் பிணிப்பர் கயத்தை; சான்றோரை
நயத்தில் பிணித்து விடல். (2)

கன்றாமை வேண்டும் கடிய; பிறர்செய்த
நன்றியை நன்றாக் கொளல்வேண்டும்; என்றும்
விடல்வேண்டும் தன்கண் வெகுளி; அடல்வேண்டும்
ஆக்கஞ் சிதைக்கும் வினை. (3)

இன்னாமை வேண்டின் இரவுஎழுக; இந்நிலத்து
மன்னுதல் வேண்டின் இசைநடுக; தன்னோடு
செல்வது வேண்டின் அறஞ்செய்க; வெல்வது
வேண்டின் வெகுளி விடல். (4)

கடற்குட்டம் போழ்வர் கலவர்; படைக்குட்டம்
பாய்மா உடையான் உடைக்கிற்கும்; தோமில்
தவக்குட்டம் தன்னுடையான் நீந்தும்; அவைக்குட்டம்
கற்றான் கடந்து விடும். (5)

விளம்பிநாகனார்

## அறவுரை

அறத்தைப்பற்றி யுரைப்பது அறவுரை. அறம்+உரை.

1. **திருக்குறள் :** சிறந்த குறள் வெண்பாக்களினு லாகிய நூல், திருக்குறள்; திரு+குறள். குறள் என்பது இரண்டடியி னுலாகிய வெண்பா. இவ் வெண்பாவினு லாகிய நூ லுக்குக் கருவியாகு பெயர்.

திருக்குறள் பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் ஒன்று; அறம், பொருள், இன்பம் ஆகிய மூன்றையும் தெரிவிப்பது; சாதி, மத, கால, நாடு வேறுபாடின்றி நீதி புகல்வது; ஜீ. யு. போப் என்னும் பாதிரியாரால் ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட்டது.

இதன் ஆசிரியர் திருவள்ளுவர். இவர் தோன்றிய இடம் மயிலை என்று கூறுவர். பொய்யில் புலவன் என்று மணிமேகலை ஆசிரியரால் சிறப்பிக்கப்பட்டவர். இவர் காலம் கி. பி. இரண் டாம் நூற்ருண்டிற்கு முற்பட்டதெனத் தெரிகிறது.

அருஞ்சொற் பொருள் :

1. மலர் மிசை ஏகினுன் - மலரிடத்தே சென்றவன்; (அருகக் கடவுளைச் சாரும்) மாண்+அடி.
2. அரிய - அரிய செயல்கள்.
3. பண்பு - மேன்மை; பயன் - பிரயோசனம்.
4. நன்றி - உதவி; அவையிடத்து - சபையிடத்து.
5. மறம் - தீவினை; அறம்×மறம்.
6. குழையும் - வாடும்; அனிச்சம் - அனிச்சப்பூ; திரிந்து - வேறுபட்டு; நோக்க - பார்க்க; விருந்து - புதியராய் நம் இல்லத்திற்கு வந்தோர்.
7. இனிய - இனிய சொற்கள்; இன்னு - கடுஞ்சொற்கள்,
8. நன்று - நன்மை; நடுவு - நடுவுநிலைமை; இகந்து – நீங்கி; ஆக்கம் - செல்வம்.
9. சோகாப்பர் – துன்ப முறுவர்; இழுக்கு - குற்றம்.
10. உலகம்-உயர்ந்தோர்; ஒட்ட-பொருந்த; ஒழுகல்-நடத்தல்
11. இறப்பு - மிகுதி; மறத்தல் – மறந்து விடுதல்.

12. இலம் – வறுமை; வெஃகுதல் - பிறர் பொருளை விரும்புதல்; புலம் - ஐம்புலன்கள்; புன்மை – குற்றம்; காட்சியவர் – அறிவினை யுடையார்.
13. கண் நின்று - நேராக நின்று; கண் அற - தாட்சண்யம் இல்லாது; முன் இன்று – எதிரில் இல்லாமல்.
14. பயன் – பிரயோசனம்; சொல்லற்க - சொல்லா தொழிக.
15. இடன் – செல்வம்; பருவம் - காலம்; ஒப்புரவு - உபகாரம்; ஒல்கார் - தளரார்; காட்சியவர் - தெளிவினை உடையார்.
16. ஆற்றுவார் – பெரியோர்; ஆற்றல் - வலிமை; பசி ஆற்றல்– பசியைப் பொறுத்தல்; மாற்றுவார் - தீர்ப்பார்.
17. பழித்தது - குற்றம் கூறியது; மழித்தல் - மொட்டையடித்தல்; நீட்டல் - சடை முடியாக வளர்த்தல்.
18. நெஞ்சு - மனம்; சுடும் - வருத்தும்.
19. உவகை – மகிழ்ச்சி; சினம் - கோபம்.
20. இன்னா–துன்பம்; ஒறுத்தல்-தண்டித்தல்; நயம்-செயல்கள்.
21. முறை – நீதி; இறை – கடவுள்.
22. கேடில் - அழிவில்லாத; விழுச் செல்வம் – சிறந்த செல்வம்; மாடு – செல்வம்.
23. இலங்கு - விளங்குகின்ற; கற்றார் - கல்வி கற்றவர்.
24. மெய்ப்பொருள் - உண்மைப் பொருள்; அறிவு-அறிவாகும்.
25. பழி நாணுவர் - பழிக்கு அஞ்சுவார்.
26. நலம் – நன்மை; ஏமாப்பு – பாதுகாவல்.
27. கருமம் - செய்யுங் காரியங்கள்; இழுக்கு - குற்றம்.
28. ஞாலம் – உலகம்; கை கூடும் - கிடைக்கும். காலம் – ஏற்ற காலம்
29. எஞ்சாமை எண்ணி - ஒழியாது நினைத்து.
30. நாடி - ஆராய்ந்து; மிக்க - மேம்பட்டவை.
31. தேற்றம் - கலங்காமை; அவா – ஆசை; தெளிவு - தெளிந்த அறிவு.
32. சுற்றம் - கிளைஞர்; பெற்றத்தால் - பெற்றதனால்.

33. அரண் - பாதுகாவல்; பொச்சாப்பு - மறதி; நன்கு - பயன்.

34. தழீஇ – அணைத்து; கோல் - செங்கோல்; மாநிலம் - பெரிய நிலம்.

35. அல்லல்- துன்பம்; தேய்க்கும் - குறைக்கும்; படை-ஆயுதம்.

36. சிதைவு–அழிவு; ஒல்கார் - மனந் தளரார்; பாடு-பெருமை; களிறு - ஆண் யானை.

37. அடியளந்தான் - திருமால்; மடி - சோம்பல்; தாஅயது - தாவி அளந்தது.

38. தெய்வம் - ஊழ்; மெய்வருத்த - உடம்பினைத் துன்புறுத்த.

39. இடுக்கண் - துன்பம்; நகுக - மகிழ்க.

40. தெரிதல் - ஆராய்ந்தறிதல்; ஒருதலை - நிச்சயம்.

41. இன்மை - இல்லாமை.

42. சலம் - தீய வினை; ஏமார்த்தல் - பாது காத்தல்; கலம் - பாத்திரம்; இரீஇயற்று - காத்ததுபோலும்.

43. உற - மிகுதியாக; ஆற்றி - மனம் தளராமல்.

44. எச்சம் - குறை; தீயெச்சம் - நெருப்பின் குறை; தெறும் - கெடுக்கும்.

45. ஐயம் - சந்தேகம்; அகம் - நெஞ்சு.

46. அவை - சபை; சொல்லின் தொகை-சொற்களின் தொகுதி (சேர்க்கை).

47. பொறை - சுமை; நேர்வது - உடம்படுவது.

48. கூற்று - யமன்; உடன்று - கோபித்து; ஆற்றல் - வலிமை.

49. விழித்தகண் - கோபித்த கண்; வன்கணவர் - வீரர்.

50. முகநக - முகம் மலர; நெஞ்சத்து அகம் - மனத்து இடம்.

51. சிறுகுவ – குறைவ; ஆற்றறுப்பார் - கை விடுவார்.

52. அழிவந்த - அழிவு தரத்தக்க; கேண்மை – நட்பு.

53. அமர்-போர்; கல்லா மா - கல்வியில்லாத குதிரை: தமரில் - நட்பைவிட

54. வணக்கம் – வளைவு; ஒன்னார் - பகைவர்.

55. இழுக்கார் - தவற மாட்டார்.

56. குன்று - மலை; குன்றுவ - குறைவு தரும் செயல்; குன்றி – குன்றிமணி.

57. ஆற்றின் – செய்தால்; ஆற்றுவார் - செய்ய வல்லார்.

58. ஆழி – கடல்; சான்றாண்மை - சால்புடைமை.

59. செய்வல் – உயரச் செய்வேன்; தெய்வம் - கடவுள்; மடி தற்று – ஆடையை இறுக உடுத்துக்கொண்டு; முந்துறும் – முன்னே வந்து நிற்கும்.

60. இலம் - வறியோம்; அசைஇ - சோம்பலுற்று; நல்லாள் – மகள்; நகும் - நகைப்பாள்.

குறிப்பு:

2. நாலடியார்: நான்கு அடியுள்ள வெண்பாக்களை யுடைய நூல், நாலடியார்: நான்கு + அடி + ஆர். நாலடி— வெண்பா: ஆர்: சிறப்பு விகுதி. நாலடியார் பதினெண் கீழ்க் கணக்கு நூல்களிலொன்று. இதற்கு "நாலடி நானூறு" என்ற வேறு ஒரு பெயரும் உண்டு. சிறந்த நீதி நூல். ஆசிரியர் - சமண முனிவர்கள் பலர். இந்நூலைத் தொகுத் தார் பதுமனார். காலம். கி. பி. இரண்டாம் நூற்றாண்டாகும்.

அருஞ்சொற்பொருள் :

1. வைப்புழி - வைத்த இடத்தினின்று: கோட்படா - பிறரால் கொள்ளப்படா: செறின் - கோபிக்கின்; வவ்வார் - அபகரிக்க மாட்டார்; எச்சம் - எஞ்சி நிற்கும் பொருள்; விச்சை - வித்தை.

2. களர் நிலம் – உவர் நிலம்; சான்றோர் – மேலோர்: விழுமிது—மேன்மையானது; தலை நிலம் – சிறந்த இடம்.

3. புடை - பக்கம்: அங்கண்மா ஞாலம் - அழகிய இடத்தையுடைய பெரியபூமி; செல்லாமை - வறுமை; ஒப்புரவு - உபகாரம்: ஒல்கார் - தளரார்: விளக்குறாஉம் - இன்னிசையளபெடை.

4. ஏமம் – பாதுகாவல்: ஆக்கம் – செல்வம்: அவத்தமே - வீணுகவே; புல்லறிவினர் - அற்ப அறிவுடையோர்; வாழ்நாள் - வினைத்தொகை.

5. நன்னிலை - உயர்ந்த தன்மை; நிறுப்பான் – நிலைக்கச் செய்பவன்: நிலை கலக்கி - உயர்வினின்றும் குறைவுபடுத்தி; கீழிடுவான் - கீழ்மையான தன்மையை அடையச் செய்வான்.

குறிப்பு :

3. ஆசாரக் கோவை : ஆசாரம் — ஒழுக்கம்: கோவை—மாலை. ஆசாரங்களைக் கோத்த கோவை ஆசாரக்கோவை. இது பதினெண் கீழ்க் கணக்கு நூல்களுள் ஒன்று. ஆசிரியர் பெரு வாயின் முள்ளியார். காலம் கி. பி. இரண்டாம் நூற்றுண்டு.

அருஞ்சொற் பொருள் :

1, பொறை - பொறுமை: ஒப்புரவு - உலக நடை: நட்டல் - சிநேகித்தல்: ஆசாரவித்து - ஒழுக்கத்திற்குக் காரணம்,

2, செறப்பட்டார் - மாறுபட்டவர்; திறப்பட்டார் - திறமையுடையோர்; பெரியோர், இல்லம் - வீடு; புகாமை - செல்லாமை,

3, பாரித்துரையார் - விரித்துச் சொல்லமாட்டார்: சில்லெழுத்து - சில எழுத்து: செவ்வி - காலம்; அழகு,

4, சூதர் கழகம் - சூதாடுவோர் இடம்; அரவம் - பேரொலி; அரு - நீங்காத: களம் - இடம்; ஏதம் - குற்றம்; துன்பம்.

5, எழுச்சிக் கண் - (பிறர்) எழுந்துபோகத் தொடங்கிய பொழுது: கூவார் - அழையார்; வழுக்கியும் - தவறியும்; சார்வு-பக்கம்; குரவர் - பெரியோர்,

4. திரிகடுகம்: சுக்கு, மிளகு, திப்பிலி என்னும் இம் மூன்று பொருள்களுக்குத் திரிகடுகம் என்று பெயர். இவை மூன்றும் சேர்ந்த சூரணம் எப்படி உடல் நோயை நீக்குமோ அதுபோல மும் மூன்று விஷயங்களை உடைய பாட்டு ஒவ்வொன்றும் அறியாமையாகிய நோயை அகற்றும் என்பது கருத்து. திரிகடுகம் பதினெண் கீழ்க் கணக்கு நூல்களுள் ஒன்று, இதன் ஆசிரியர் நல்லாதனார். காலம் கி. பி. இரண்டாம் நூற்றாண் டென்பர்,

அருஞ்சொற்பொருள் :

1, புகழ் நட்டான் - புகழை நிலை நிறுத்தியவன்; கற்பு - ஒழுக்கம்; கூவல் - கிணறு; தொட்டான் - தோண்டினவன்; சாவா உடம்பு - அழியாத உடம்பு; புகழுடம்பு,

2, தருக்கல் - செருக்கடைதல்; கொன்னே - வீணே; வெகுளி - கோபம்; முன்னிய - நினைத்த; வெஃகும் - விரும் பும்; படை – ஆயுதம்,

3, தன் நச்சிச் சென்றார் - தன்னை விரும்பி அடைந்த இரவலர்; எள்ளா - இகழாத; பொச்சாப்பு – மறதி; அழுக் காறு – பொறாமை;

4. கிளைஞர் – உறவினர்; பைங்கூழ் - பயிர்; போற்றான் - பாதுகாவாதவன்;

5. தூக்கா – அளந்தறியாத; கொடும்பாடு – பொய்ச் சொல்; எச்சம் – மகன்.

குறிப்புரை :

5. நான்மணிக்கடிகை: இது பதினெண் கீழ்க் கணக்கு நூல்களுள்ஒன்று. இதன் ஆசிரியர் விளம்பி நாகனார் காலம்: கி. பி. இரண்டாம் நூற்றாண்டென்பர்.

**அருஞ்சொற்பொருள்:**

1. அணி – ஆபரணம்; நலம் – அழகு: நாணம் – வெட்கம்; செல் உலகம் – செல்கின்ற மேல் உலகம்.

2. கந்து – கட்டுத்தறி; பிணிப்பர் – கட்டுவர்; களிறு – யானை; கதம் – கோபம்; மாநாகம் – பெரியபாம்பு; கயம் – கீழோர்; நயம் – அன்பு.

3. கன்றுமை – பிறழாமை; வெகுளி - கோபம்; ஆக்கம் – செல்வம்; சிதைக்கும் – கெடுக்கும்.

4. இன்னுமை – பொல்லாப்பு; எழுக – தொடங்குக; இசை – புகழ்; வெல்வது – வெற்றி பெறுவது.

5. குட்டம் – ஆழம்; கலவர் – நாவாயினை உடையார் பாய்மா – பாய்ந்து செல்லும் குதிரை, தவக்குட்டம் – தவத்தின் அருமை, அவைக்குட்டம் – அவையின் அருமை.

---

# III. கதை

## 1. குசேலோபாக்கியானம்

### சுசீலை இயல்பு

மாசிலாக் குலத்து வந்தாள்
வருவிருந்(து) உவப்ப ஊட்டும்
நேசமிக்(கு) உடையாள் கொண்கன்
நினைப்(பு) அறிந்(து) ஒழுகும் நீராள்
தேசுறு வாய்மை உள்ளாள்
சினந்திடல் என்றும் இல்லாள்
பேசுதின் கற்பு வாய்ந்தாள்
பெற்றதே கொண்டு வப்பாள். 1

### குசேலர் புல்லரிசி கொண்டுவருதல்

இருநிலத்(து) யாவர் கண்ணும்
ஏற்பதை இகழ்ச்சி என்ன
ஒருவிய உளத்தான் காட்டில்
உதிர்ந்துகொள் வாரும் இன்றி
அருகிய நீவா ரப்புல்
தானியம் ஆராய்ந்(து) ஆராய்ந்து
உருவஒள் நகத்தால் கிள்ளி
எடுத்துடன் சேரக் கொண்டு 2

வந்துதன் மனைகைந் நீட்ட
வாங்கிமற்(று) அவற்றைக் குற்றி
அந்தமெல் லியல்பா கம்செய்(து)
அதிதிக்(கு)ஓர் பாகம் வைத்துத்
தந்ததன் பங்(கு) அயின்று
தவலரும் உவகை பூத்து
மந்திர மறைகட்(கு) எட்டா
மாலடி நினைந்(து) இருப்பான். 3

### சுசீலை வருத்தம்

இற்(று)இவன் வாழ்க்கைத் தன்மை
இருபத்தேழ் மைந்த ருக்கு
மற்றஅப் பாகக் கஞ்சி
மட்குழி சியைப்பால் வைத்துப்
பற்றுகோ ரிகையால் மொண்டு
வாக்கிப்பற் றுமை கண்டு
வெற்றுடம்(பு) ஆகி நிற்பாள்
மெலிவள்பின் என்செய் வாளால்! 4

### குழந்தைகளின் செயல்கள்

ஒருமகவுக்(கு) அளித்திடும்போ(து) ஒருமகவு
கைநீட்டும்; உந்தி மேல்வீழ்ந்து
இருமகவும் கைநீட்டும்; மும்மகவும்
கைநீட்டும்; என்செய் வாளால்!
பொருமிஒருமக(வு)அழும்; கண்பிசைந்(து) அழும்மற்(று)
ஒருமகவு; புரண்டு வீழாப்
பெருநிலத்தில் கிடந்தழும்மற்(று) ஒருமகவுஎங்
ஙனம்சகிப்பாள்! பெரிதும் பாவம்! 5

### சுசீலை குழந்தைகளைத் தேற்றல்

இவ்வண்ணம் கலாம்விளைக்கும் மைந்தர்களை
நனிநோக்கி இரங்கி ஏங்கிச்
செவ்வண்ணக் கரதலத்தால் அணைத்துமடித்
தலத்திருத்திச் சிறப்புச் செய்து
மைவண்ணக் கண்ணீரைத் துடைத்தும்முகம்
வெரிந்புறம்தை வந்தும், ஆம்பல்
அவ்வண்ண வாய்முத்தங் கொண்டுநயந்(து)
ஓர்விதத்தில் ஆற்றல் செய்வாள் 6

### சுசீலையின் பெருமைக் குணம்

இவ்வாறு மிடியென்னும் பெருங்கடலுள்
அழுந்தியுந்தற் கினிமை சான்ற
செவ்வாய்மை அந்தணனை வெறுத்(து)உரையாள்
அலர்மொழிகள் சிறிதுஞ் செப்பாள்;
துவ்வாமை மைந்தர்கள்பால் மறந்தும்இயற்
ருள்,அவள்தன் சுகுணம் என்னே!
'எவ்வா(று)இத் துயர்க்கடல்நீந் துவம்'எனுமோர்
எண்ணமுளத்(து) என்றும் உண்டால் 7

### சுசீலை குசேலரிடம் கூறுவன

"கொழுந்துவிட்(டு) எரியும் முத்தழல் வளர்க்கும்
கோதிலா முனிவ!நம் சிறுர்கள்
அழுந்துபட்(டு) ஏங்க எழும்பசி ஒழிக்க
அன்னமிலா(து) உயங்கினர் அந்தோ!
முழங்குமீர் ஒன்பான் புராணம்நன்(கு) ஓர்ந்தோர்
மூரலால் உயிர்நிற்கும் என்று
வழங்குவர்; அச்சொல் மறிதிரைக் கடல்சூழ்
மண்ணிடத்(து) உண்மையே யாமே. 8

"யாதவர் குலத்தில் தோன்றிய அரசர்
யாவர்க்கும் அதிபனும் இணையில்
மாதவன் உடன்நீ பலகலைக் கடலை
வாய்மடுத் தனையென வகுப்பார்;
ஆதலின் அப்பீ தாம்பரன் மருங்கில்
அணைந்(து) அவன் பாற்பெருஞ் செல்வம்
தீ(து) அறக் கொண்டு கொடுத்துநஞ் சிறுவர்
செல்லல் நோய் தவிர்க்குதல் வேண்டும். 9

"கண்ணனைத் துளப மாலிகை நிறத்தில்
கமலைவாழ் தரஅருள் புரிந்த
மண்ணிய மணியைத் தினந்தினம் போற்றும்
மாசறு தவத்தினர் உள்ளத்(து)
எண்ணிய எண்ணி யாங்(கு) அளிப் பவனை
எய்திநஞ் சிறுருயச் செல்வம்
நண்ணிவா" என்று நங்கைசொற் றிடலும்,
நற்றவக் குசேலன் ஈ(து) உரைக்கும். 10

குசேலர் உரை

"மைந்தர்கள் தம்மைப் போற்ற
வளநிதி வேண்டும் என்றாய்!
நந்திய பறவை கானம்
நயந்(து) உறை விலங்கு முன்னும்
வந்தபல் உயிர்க்குச் சேம
வைப்(பு)உண்டோ? வருவாய் உண்டோ?
எந்திடத் தேனும் போய் ஒன்(று)
இரப்பது தானும் உண்டோ? 11

"கல்லினுள் சிறுதே ரைக்கும்
கருப்பையண் டத்(து) உயிர்க்கும்
புல்லுண(வு) அளித்துக் காக்கும்
புனத்துழாய்க் கண்ணி அண்ணல்
ஒல்லும்நின் மைந்தர்க் காவா(து)
ஒழிவனோ? ஒழியான்; உண்மை;
மெல்லியல் கொண்ட துன்பம்
விடுவிடு மறந்தும் எண்ணல் 12

"சிறியரே மதிக்கும் இந்தச்
செல்வம் வந்(து) உற்ற ஞான்றே
வறியபுன் செருக்கு மூடி
வாயுள்ளார் மூகர் ஆவர்;
பறியணி செவியு ளாரும்
பயில்தரு செவிடர் ஆவர்.
குறிபெறு கண்ணு ளாரும்
குருடராய் முடிவர் அன்றே! 13

"தரித்திரம் என்று பல்கால்
சாற்றினை எதிர்ம றுத்தல்
பரித்திடும் அச்சொல் தன்மைப்
பன்மைமுற்(று) ஆக வல்லோர்
விரித்துரை பொருள்நீ சற்றும்
விளங்கிட உணர்ந்தாய் அல்லை;
அரித்தடங் கருங்கண் மாதே!
ஆதலின் நிலைத்த(து) அன்றால். 14

"பாற்கடல் அடுத்த மீன்அப்
பால்விரும் பாது மற்ற
ஏற்குமா விரும்பி னற்போல்
எம்பிரான் திருமுன் சார்ந்தும்
நாற்கதி கடக்கும் இன்பச்
செல்வத்தை நண்ணி டாமல்,
சேற்கருங் கண்ணாய்! துன்பச்
செல்வமோ நண்ணு வேன்யான்! 15

—வல்லூர் தேவராச பிள்ளை

---

## 2. நளவெண்பா

### [நளன் தமயந்தியை விட்டுப் பிரிதல்]

காரிகைதன் வெந்துயரங் காணுமல் நீத்தந்தக்
கூரிருளில் போவான் குறித்(து)எழுந்து – நேரே
இருவர்க்கும் ஒருயிர்போல் எய்திய(து)ஓர் ஆடை
அரிதற்(கு) அவனினைந்தான் ஆங்கு. 1

ஒற்றைத் துகிலும் உயிரும் இரண்டாக
முற்றுந்தன் அன்பை முதலோடும் – பற்றி
அரிந்தான் அரிந்திட்டு அவள்நிலைமை நெஞ்சில்
தெரிந்தான் இருந்தான் திகைத்து. 2

போயொருகால் மீளும் புகுந்(து)ஒருகால் மீண்(டு)ஏகும்
ஆயர் கொணர்ந்த அடுபாலின் – தோயல்
கடைவார்தம் கைபோல ஆயிற்றே காலன்
வடிவாய வேலான் மனம். 3

"தீக்கா னகத்(து)உறையுந் தெய்வங்காள்! வீமன்தன்
கோக்கா தலியைக் குறிக்கொள்மின் – நீக்காத
காதலன்பு மிக்காளைக் காரிருளில் கைவிட்(டு)இன்(று)
ஏதிலன்போல் போகின்றேன் யான்". 4

தாருவெனப் பார்மேல் தருசந் திரன்சுவர்க்கி
மேருவரைத் தோளான் விரவார்போல் – கூரிருளில்
செங்கால் நகஞ்சிதையத் தேவியைவிட்(டு) ஏகினுன்
வெங்கா னகந்தனிலே வேந்து. 5

குறிப்புரை :

குசேலோபாக்கியானம் : குசேலரது வரலாற்றைக் கூறும் நூல்; உபாக்கியானம்—கிளைக்கதை. இந்நூலின் கதை நிகழ்ச்சிகள் பாகவதத்தின் ஒரு சிறு கதையாதலால் இஃது உபாக்கியானம் எனப் பெயர் பெற்றது. இந்நூலை இயற்றியவர் வல்லூர் தேவராசப் பிள்ளை யாவர். பெருஞ் செல்வர். திருவாவடுதுறை ஆதீன மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்களது மாணவர். மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்களே இந்நூலை இயற்றியதாகக் கூறுவதுமுண்டு. காலம் கி. பி. 19-ஆம் நூற்றாண்டு.

அருஞ்சொற் பொருள் :

1. மாசு –குற்றம்; நேசம் - அன்பு; கொண்கன் – கணவன்; நினைப்பு அறிந்து ஒழுகுதல் – குறிப்பறிந்து நடத்தல்; நீராள் – நீர்மையை (தன்மை) உடையவள். தேசு – ஒளி; திண்கற்பு - கலங்காத கற்பு.

2. ஒருவிய - நீங்கிய; கண் என்பது ஏழாம் வேற்றுமை இடப்பொருள் உணர்த்தும் உருபு; அருகிய – அற்பமான; நீவாரப்புல் – காட்டு நெல்.

3. அதிதி - விருந்தினர்; அயின்று – உண்டு; தவலரும் – கெடாத; மறை – வேதம்; மால் – திருமால்.

4. இற்று – இத்தன்மையது; மண்குழிசி – மண்பாண்டம்; கோரிகை - அகப்பை.

5. மகவு - குழந்தை; உந்தி – விரைந்து; பொருமி - தேம்பி; புரண்டு விழா - புரண்டு விழுந்து.

6. கரதலத்தால் - கையால்; வெரிந் – முதுகு; தைவந்து - தடவி; ஆம்பல் - செவ்வாம்பல் மலர்; நயந்து - விரும்பி.

7. மிடி - வறுமை; அந்தணன் என்றது தன் கணவனாகிய குசேலனை. அலர் - பழிச்சொல்; செப்பான் - சொல்லான்; துவ்வாமை-உண்ணாதமைதல்; சு+குணம்—சுகுணம்-நல்லகுணம்

8. கோது – குற்றம்; முத்தழல் - காருகபத்தியம், ஆகவநீயம், தக்ஷிணாக்கினி என்ற மூன்று தீக்கள்; உயங்கினர்– வாடினர்; ஈர் ஒன்பான் - பதினெட்டு; மூரல் - உணவு; என்ன – என்று.

9. இணை இல் - ஒப்புமை இல்லாத; பீதம்+அம்பரன்— பீதாம்பரன் - பொன்னுடை அணிந்த கண்ணபிரான்; மருங்கு – இடம்; செல்லல் - வறுமை,

10. கள்நனை துளபம் - தேனொழுகும் துழாய்; மாலிகை - மாலை; கமலை - திருமகள்; மண்ணிய - கழுவப்பட்ட தூயமணி.

11. வளநிதி – மிகுந்த செல்வம், நந்திய – மிகுந்த, கானம் – காடு, சேமவைப்பு – (தளர்ந்த காலத்து உதவுக எனச்) சேமித்து வைத்த பொருள்.

12. அண்டம் - முட்டை, புல் உணவு - அற்ப உணவு, ஒழிவனோ - நீங்குவனோ.

13. ஞான்று - பொழுது, மூசர் - ஊமையர், பறியணி - பொன்னால் இயன்ற நகை.

14. சாற்றினை - சொன்னாய், அரி - கண்களில் உள்ள செந்நிறக் கோடுகள்,

15. நால்கதி - தேவர், மக்கள், நரகர், விலங்கு என்னும் நால்வகைப் பிறப்பு.

குறிப்புரை :

நளனது வரலாற்றைக் கூறும் வெண்பாவால் இயன்ற நூல். இதனை இயற்றியவர் புகழேந்திப் புலவர். இவர் பொன்

விளைந்த களத்தூரில் பிறந்தவர். சந்திரன் சுவர்க்கி என்னும் மன்னவனால் ஆதரிக்கப்பட்டவர். 'வெண்பா' என்னும் பாவகையைப் பாடுதலில் ஆற்றல் மிக்கவர் ஆதலால் இவர் "வெண்பாவிற் புகழேந்தி" எனச் சிறப்பிக்கப் படுவார்.

அருஞ்சொற்பொருள் :

1. காரிகை – தமயந்தி, வெம்மை + துயர் - வெந்துயர், கூர் இருள் – இருள் நிறைந்த இரவு, போவான் குறித்து - போவதற்கு எண்ணி; இருவர்க்கும் உயிர் ஒன்றுயது போல ஆடையும் ஒன்றுயிற்று.

2. முதலோடு - அடியோடு, திகைத்து - மயங்கி, தெரிந்து - எண்ணி.

3. மீளும் - திரும்பும், ஆயர் - இடையர், அடுபால், - காய்ச்சிய பால், தோயல் - தயிர்.

4. தீக்கானகம் - கொடிய காடு, குறிக்கொள்மின் - பாதுகாவுங்கள், ஏதிலன் - அயலான்,

5. பார்மேல் தாரு என மாற்றுக; தாரு - கற்பக மரம், சிதைய - தேய, மேருவரை - மாமேருமலை, விரவார் - பகைவர்.

---

# IV. வருணனை

## 1. ஆறு

இருபக்கம் மண்மே டிட்டும்,
இடை ஆழ்ந்தும், நீளமான
ஒரு பாதை கண்டேன், அந்தப்
பாதையின் உள் இடத்தில்
உரித்தநற் றாழம் பூவின்
நறும் பொடி உதிர்த்த தைப்போல்
பெருமணல், அதன்மேல் எல்லாங்
கதிரொளிப் பெருக்கம், கண்டேன்!

—பாரதிதாசன்

## 2. மழைக்குறி

சிந்து

கொங்கு மின்னல் ஈழமின்னல்
எங்கும் மின்னுது—கருங்
குயிலொலிக்க மஞ்சள் நிற
வெயிலெ றிக்குது;
தங்கந் திரண் டேயொலிக்கு
தங்கண் விசும்பில்—வரக்
கண்டோம் வெள்ளைப் பூச்சியுங்
கும்பிடு நாச்சியும்;
மங்களமாய்த் திங்கள் தோறும்
எங்கும் மும்மாரி—பெய்ய
வட்டமாக மொட்டைச் சித்தா
வெட்டுது புல்லை;
எங்கள் திரு மலைக் கந்தர்
பொங்கருளினால்—பொய்யா
தின்று நாளைப் பெய்யும் மழை
நன்று பள்ளரே.

—திருமலை முருகன் பள்ளு

## 3. சூரியோதயம்

பொய்கையுட் கமலத் தங்கண் புள்ளெனு முரச மார்ப்ப,
வெய்யவன் கதிர்க ளென்னும் விளங்கொளித் தடக்கை நீட்டி
மையிருட் போர்வை நீக்கி மண்ணக மடந்தை கோலம்
பையவே பரந்து நோக்கிப் பனிவரை நெற்றி சேர்ந்தான்.

—சீவக சிந்தாமணி

குறிப்பு :

1. ஆறு : இதன் ஆசிரியர் பாரதிதாசன். புதுவையில் வாழுகின்றவர். மறு மலர்ச்சிக் கவிஞர். உலக இயலை ஒட்டிப் பாடுதலில் வல்லவர்.

அருஞ்சொற்பொருள் :

இடை - நடு; ஆழ்ந்தும் - தோண்டியும்; கதிர் ஒளி - சூரியன் ஒளி.

2. மழைக் குறி : திருமலை முருகன் பள்ளின் ஆசிரியர் பெரியவன் கவிராயர் என்பவர். பள்ளு என்பது பள்ளர் வாழ்க்கையைச் சித்தரித்துக் கூறும் ஒரு நூல்.

அருஞ் சொற் பொருள் :

கொங்குமின்னல் - மேல்திசையில் தோன்றும் மின்னல்; ஈழமின்னல் - தென் திசையில் தோன்றும் மின்னல்; கங்கம் - பருந்து; விசும்பு - ஆகாயம்; இப்பாடலுள் வந்துள்ள பூச்சிகளின் பெயர்கள்:-வெள்ளைப்பூச்சி, கும்பிடு, நாச்சி, சித்தா.

3. சூரியோதயம் : இதன் ஆசிரியர் திருத்தக்க தேவர். சிந்தாமணி ஐம்பெருங் காப்பியங்களுள் ஒன்று.

அருஞ்சொற்பொருள் :

பொய்கை - குளம்; கமலத் தங்கண் - தாமரை மலரில்; புள் - வண்டு; வெய்யவன் - சூரியன்; மை - கருமை; கோலம் - அழகு; பனிவரை - உதயகிரி; நெற்றி - உச்சி.

## V. பல் சுவை

### 1. வேனிற்கால வெப்பமிகுதி

சூரியா! நின்பரிகள் சோம்பன்மேற் கொண்டனவோ
ஆரியத்தே(ர்) அச்சாணி அற்றதோ — ஓரிமையிற்
செல்லென்றுற் செல்லாமல் தீமாரி பெய்துநின்றுய்
நில்லென்றுர் சொன்னுர் நினை. 1

—வேதநாயகம் பிள்ளை

### 2. வரதராஜர் துதி

பெருமாளு நல்ல பெருமா ளவர்தம்
திருநாளு நல்ல திருநாள் — பெருமாள்
இருந்திடத்திற் சும்மா யிராமையினு லையோ
பருந்தெடுத்துப் போகிறதே பார். 2

—காளமேகப் புலவர்

### 3. நமது கடமை

எளியநடை யில்தமிழ்நூல் எழுதிடவும் வேண்டும்;
இலக்கணநூல் புதிதாக இயற்றுதலும் வேண்டும்;
வெளியுலகில் சிந்தனையில் புதிதுபுதி தாக
விளைந்துள்ள எவற்றினுக்கும் பெயர்களெல்லாங் கண்டு
தெளியுறுத்தும் படங்களொடு சுவடியெலாம் செய்து
செந்தமிழைச் செழுந்தமிழாச் செய்திடவும் வேண்டும்;
எளிமையினுல் ஒருதமிழன் படிப்பில்லை என்றுல்,
இங்குள்ள எல்லோரும் நாணிடவும் வேண்டும். 3

உலகியலின் அடங்கலுக்கும் துறைதோறும் நூல்கள்
ஒருத்தர்தயை இல்லாமல் ஊரறியும் தமிழில்
சலசலென எவ்விடத்தும் பாய்ச்சிவிட வேண்டும்;
தமிழொளியை மதங்களிலே சாய்க்காமை வேண்டும்;
இலவசநூற் கழகங்கள் எவ்விடத்தும் வேண்டும்;
எங்கள்தமிழ் உயர்வென்று நாம்சொல்லிச் சொல்லித்
தலைமுறைகள் பலகழித்தோம்; குறைகளைந்தோ மில்லை;
தகத்தகா யத்தமிழைத் தாபிப்போம் வாரீர். 4

—பாரதிதாசன்

குறிப்பு:

அருஞ்சொற்பொருள் :

*1. பரிகள் – குதிரைகள், தீமாரி - நெருப்பு மழை.*

*2, பருந்து - கருடன். சும்மா இராமை - திருமால் அடியார் கட்கு அவர் இருக்குமிடம் சென்று அருள் செய்தல்.*

*3. சிந்தனை - மன எண்ணம், தெளியுறுத்தும் - விளங்கச் செய்யும், சுவடி - நூல், நாணி – வெட்கமுற்று.*

*4. உலகியல் - உயர்ந்தோர் செல்லும் வழி, ஊரறியும் தமிழ் - வழக்குத் தமிழ், சாய்க்காமை – வீழ்த்தாமை.*

உரை நடைப் பகுதி

## 1. இன்பத் தமிழ் வாழ்வு

நம் நாடு மலை, காடு, கழனி, ஆறு முதலிய வற்றினால் வளம் நிறைந்து திகழ்கின்றது. இறைவன் அளித்த இவ்வியற்கைச் சாதனங்கள் மக்கள் வாழ்க் கைக்குத் தேவையான பல் வகைப் பொருள்களையும் வழங்கின. தமது தேவைகளைக் குறைவு இன்றி எளிதில் பெற்ற மக்கள் பசியும் பிணியும் அறிந் திலர். பசியும், பிணியும் பிற குறையும் இல்லா நாட்டில் அறியாமை ஏது? அறிவொடு பொருந்திய வாழ்வு இன்ப வாழ்வே யன்றோ? அறிவொடு அமைந்த இப்பெரு வாழ்க்கையினைக் கொண்ட நம் முன்னோர்கள் வாழ்வே 'இன்பத் தமிழ் வாழ்வு' ஆகும்.

நமது தமிழ் மொழியில் பலவகை இலக்கிய இலக்கண நூல்கள் இருக்கின்றன. தமிழ் மக்கள் அவற்றுள் கற்கத் தகுந்த நூல்களையும் இன்றியமை யாத நூல்களையுமே ஆழ்ந்து கற்றனர். தவறான கல்வியால் காலமும் முயற்சியும் கெடுவதோடு வாழ்க்கையும் கெடும் அன்றோ? நூல்களைப் பயிலும் பொழுதே, 'நம் வாழ்க்கையில் இவற்றைக் கடைப் பிடிக்க வேண்டும்' என்ற கருத்தோடு ஆராய்ந்து கற்றனர். ஆண் மக்களைப் போலவே பெண்டிரும் கல்வி பயிலும் உரிமை பெற்று விளங்கினர்.

இன்ப வாழ்க்கைக்கு அடிகோலும் கல்வியைப் பயிலுங் காலத்தில் அவர்கள் எவ்வகைக் குறையையுங் கருதுவதில்லை. தமக்கு அறநூல் உரைக்கும் ஆசிரி

யர்க்கு மிகுந்த பொருள் கொடுத்தனர். அவர்களுக்கு வேண்டும் உதவிகளை எல்லாம் செய்து முடித்தனர். 'ஆசிரியர்க்குப் பணிந்து நின்று பயில வேண்டி யிருக்கின்றதே' என்ற மாணு மானம் அவர்பால் இல்லை; தமக்கு அறிவு வழங்கிய ஆசிரியனை இறைவனுகவே எண்ணி வழி பட்டனர். வாணிபம் முதலிய கருதி வேற்று நாட்டுத் தொடர்பு கொள்ளும் அவர்கள் தம் தாய் மொழியொடு பிற மொழி நூல்களையுங் கற்றனர்.

குறைவு நீங்க ஆழ்ந்து கற்ற அறிஞரைச் சமூகம் போற்றியது. அறிவு உடைய பிற நாடுகளும் வேற்றுமை கருதாது அவர்க்குச் சிறப்புகள் செய்தன; அவர்களது அறவுரைகளைக் கொண்டன. கற்ருேர்க்கு எந்நாடும் தம் நாடே! பிறந்த குலங் காரணமாக ஒருவர்க்குச் சிறப்பில்லை; தாழ்வுடையது என எண்ணுங் குலத்தில் ஒருவர் பிறப்பினும் அவர் உயர்ந்த கல்வி வாய்க்கப் பெற்றவராயின் அவர் வழியில் உலகம் சென்றது. அரசர்களும் கல்வி யறிவுடையோரது அறவுரைப்படியே ஆட்சி புரிந்தனர். அறிஞர்கள் தமக்கு அறவுரை கூருது நீங்குதலைப் பெரும் இழப்பாக எண்ணி அரசர்கள் வருந்தினர். அறிவுடைய புலவர்களோடு கூடிவாழும் வாழ்வே பெருவாழ்வு என்று அரசர் முதல் சாதாரண மக்கள் ஈருக வுள்ள அனைவரும் கருதினர். எனவே அனைவர் தம் வாழ்வும் அறிவொடு பட்டது. அவர் தம் வாழ்வில் இன்பம் மலிந்தது.

நூற் கல்வியோடு ஓவியம், சிற்பம், இசை, நடனம் முதலிய கலைகளிலும் பலர் வல்லுநராய்த் திகழ்ந்தனர். பிறர் எல்லாம் இக்கலைகளைப் போற்றி மகிழும் கலை

யுணர்வு நிறைந்தவராய் அமைந்தனர். இக்கலைகள் பொழுது போக்கிற்காக ஏற்படுத்திக் கொண்டவை யல்ல; கல்வியறிவு உடைய ஒருவன் கவிதைகள் நிறைந்த நூல்கள் மூலம் பெறும் அறிவைக் கலையுணர்வு உடையவன் இவ் இசை, நடனம், ஓவியம் முதலிய கலைகள் மூலம் பெற்றுன். எனவே இந் நுண் கலைகளும் (Fine Arts) மக்களுக்கு அறிவு விளக்கத்தை உண்டு பண்ணி அவர்களது நாகரிக வாழ்விற்கு வழிகோலின.

கல்வி கற்பதனுல் ஆகும் பயன் மனிதன் மனிதனுக வாழ அறிவதே. கல்வி யறிவு உடைய தமிழ் மக்கள் கண்ணேட்டம் உடையராய் வாழ்ந்தனர். பழகியோ ரிடத்து நெகிழ்ந்து நடக்கும் பண்பே கண்ணேட்டம் என்று சொல்லப்படும். இப்பண்பே மக்கள் வாழ்க் கைக்கு அடிப்படை; பழகியோரிடத்தும் நெகிழ்ந்து நடக்கும் வாழ்வு இல்லையேல் மக்கள் மக்களாக வாழ்வது எங்ஙனம்? ஒருவரை யொருவர் சீறுவதும் அழிப்பது மாக அன்றே வாழ்க்கை அமையும்? புலிகள் வாழும் காட்டிற்கும் இத்தகையோர் வாழும் நாட்டிற்கும் வேறுபாடு ஏது? எனவே பலரும் தம்முள் பகைமை கொள்ளாது அன்போடு ஒன்றுபட்டு இன்ப வாழ்வு வாழ்ந்தனர். தம்மொடு பழகியோர், உயிரைப் போக் கும் நஞ்சையே தமக்கு உண்ண வழங்கினும் கொடுத் தோரது உள்ளம் வருந்த லாகாதே என்ற எண்ணத்தால் அதனையும் மகிழ்ந்து பெற்று உண்பர்; நஞ்சை உண்ட தால் ஆகுந் துன்பத்தைத் தம்முள் அடக்கி அமைதி யுறுவர். இத்தகைய வாழ்க்கையை உயரிய நாகரிக வாழ்வு எனத் தமிழர் கொண்டனர். மேலும் பல நல்லொழுக்கங்களையும் உழைப்பையும் உறுதியுடன்

கொண்டமையாலேயே அவர்கள் வாழ்க்கையில் ஆற்றல் படைத்தவர்களாகவும் பிறரால் புகழ்ந்து பாராட்டத் தக்கவர்களாகவும் விளங்கினர். அன்பு பொருந்திய மனைவி, மக்களோடு வாழும் இல்லற வாழ்வு மக்களைப் பண்படுத்தி அவர்கள் பால் உயர்ந்த பண்புகளை வளர்த்தது.

கல்விச் செல்வம் கைவரப் பெற்ற அவர்கள், பொருட் செல்வங்களையும் குறைவறப் பெற்றனர். மதிப்பு அற்றவர்களையும் மதிப்பு உடையவர்களாக ஆக்குவது செல்வமே யன்றோ? அறவழியிலே பொருளை ஈட்டினார்கள். வறுமை மிகுந்து பசி மிகுதியால் தன் தாயே வருந்தினும் உயர்ந்தோர் பழித்த வழிகளை மேற்கொண்டு பொருளை ஈட்ட விரும்பார். அறிவுடையோரது பழிப்பு உரைகளை ஏற்றுப் பொருளை ஈட்டுதலினும் வறுமையே நன்று எனக் கருதினர். அறவழியிலே உழைத்துப் பெற்ற அப்பொருளை அருளை வளர்க்கப் பயன் படுத்தினர். வள்ளல்களிடம் தாம் பெற்ற பொருளைத் தம்மை வேண்டி நின்றார்க்கு வழங்கி மகிழ்ந்தனர்.

பழங்காலத்தில் 'குடியாட்சி' அரசியல் இல்லை, முடியுடைய மன்னரே நாட்டை யாண்டனர். எனினும் குடியாட்சி, முடியாட்சி என்ற இருவகை அரசியலிலும் அடிப்படைத் தேவைகளும் முறைகளும் ஒரு தன்மையினவே. குடியாட்சியில் நாம் அடைய விரும்பும் பல்வகைப் பண்புகளும் முடியாட்சியிலும் காண இயலும். மன்னர் பொது மக்களின் நலனைக் கருதியே நாட்டை ஆண்டனர். பகைவரை யொடுக்கிப் பசியும்

பிணியும் நாட்டில் பரவாதவாறு காத்து மக்களிடையே ஒற்றுமையை வளர்த்தனர். நீர்வளம், நிலவளங்களை ஓங்கச் செய்து தொழில் வளத்தைப் பெருக்கினர். தம் நாட்டில் வாழும் மக்கள் பலருக்கும் ஒத்த உரிமைகளை வழங்கி நடுநிலைமை தவருது நாட்டை யாண்டனர். மன்னர் அரச தர்மத்தினின்றும் பிறழ்ந்து கொடுங்கோலராக ஆவரேல், தம் தவறைத் தாமே யுணர்ந்து தம் உயிரைப் போக்கிக் கொடுங்கோலைச் செங்கோல் ஆக்குவர். மன்னர் எதேச்சாதிகாரிகள் அல்லர். மன்னர் தவருன வழிகளில் செல்வரேல் அவரை இடித்துரைக்கும் பண்புடையாளரும் இருந் தனர். பொது மக்கள் அனைவர்க்கும் இவ்வுரிமை யுண்டு. கண்ணகி வழக்குரைத்த வரலாறு அறியாரும் உளரோ?

மன்னர்க்கும் மக்களுக்கும் நெருங்கிய தொடர் பிருந்தது. தம் பொது வாழ்வில் ஏற்பட்ட குறைகளை அரசர்க்கு எச்சமயத்திலும் எடுத்துக் கூற மக்களுக்கு உரிமையிருந்தது; மன்னனும் காட்சிக்கு எளியனய் அமைந்து அவர்களது குறைகளையறிந்து இனிய வுரைகள் பகர்வன். பொருளாதாரத் துறையிலும் மன்னர் தேர்ந்த அறிவுடையராய்ப் பொருள் வரும் வழிகளை மேலும் மேலும் பெருக்கினர். மக்களின் நல்வாழ்விற்குரிய பல்வேறு துறைகளிலும் அப் பொருளை வகுத்துச் செலவிட்டனர்.

இன்னோரன்ன உயரிய வாழ்வு முறை, பண்டு நம் நாட்டிடை இருந்து வந்தது. குடியாட்சி உரிமை பெற்ற இப்பொழுதேனும், இத்தகைய 'இன்பத் தமிழ்

வாழ்வு' அமையுமேல் நமது பல்வகைக் குறைகளும் அகலும்; நாட்டில் ஒற்றுமை மிகுந்து இன்பம் மலியும். உலக நாடுகள் நம் நாட்டை மீக்கூறும். தமிழ்த் தாய் தண்ணளி புரிவாளாக!

அருஞ்சொற்பொருள் :

கழனி – வயல்; அளித்த – கொடுத்த; பிணி – நோய்; கடைப்பிடி – மேற்கொள்; மானமானம் – பொருந்தாத மானம்; இழப்பு - நஷ்டம்; வழி கோலின - வழி செய்தன; பிறழ்ந்து – நீங்கி; காட்சிக்கு எளியன் – காண்பதற்கு எளிமை உடையவனுதல்; மீக்கூறும் -உயர்த்திக் கூறும்; மலிதல் – மிகுதல்.

1. வினாக்கள்:

1. நாட்டில் இன்பம் நிறைய நாடு எவ்வாறு அமைதல் வேண்டும்?

2. கல்வி கற்கும் முறை குறித்த பழந் தமிழ்க் கொள்கை யாது?

3. கல்வி யறிஞரைத் தமிழகம் எவ்வாறு போற்றியது?

4. பழந் தமிழர்களின் கலை யுணர்வைக் குறித் தெழுதுக.

5. கல்வி கற்பதன் நோக்கம் யாது?

6. கண்ணோட்டமாவது யாது? இப்பண்பு தமிழ் மக்களிடத்து அமைந்தமையை நீ எவ்வாறு அறிவாய்?

7. பொருளை ஈட்டுதலில் தமிழ் நாட்டவர் மேற்கொண்ட உயரிய முறைகள் யாவை?

8. பழந்தமிழகத்து அமைந்த அரசியலின் சிறப்பைச் சுருக்கி எழுது.

9. மக்களுக்கும் மன்னர்க்கும் இருந்த தொடர்பைக் குறித்து எழுதுக.

2. கட்டுரை யாக்கம்:

கீழ் வரும் தலைப்புகளில் உமது மாணவர் கூட்டத்தில் 10 நிமிஷம் பேசுவதற்கேற்ற முறையில் சொற்பொழிவுக் கட்டுரைகள் எழுதுக:—

1. நம் நாட்டின் இயற்கை வளங்களும் விளைபொருளும்.

2. பழங்காலக் கல்வி முறையும். அறிஞர்க்கு சமூகத்தில் இருந்த தொடர்பும்.

3. தமிழ் மக்களின் சில உயர்ந்த பண்புகள்.

4. பழந்தமிழ் அரசியல்.

## 3. மொழிப் பயிற்சி :

1. கீழ்வருவனவற்றை வாக்கியங்களில் அமைத்து எழுதுக:—

அளித்த, குறைவின்றி, இன்றியமையாத, மாணு மானம், அடிகோலும், வாய்க்கப்பெற்ற, பேரிழப்பு, வல்லுநர், பண்படுத்தி, கைவரப்பெற்ருன், பிறழ்ந்து. இன்னோரன்ன.

2. கீழ் வருவனவற்றை இன்ன வாக்கியங்கள் என எழுதிக் குறித்தபடி வாக்கியங்களையும் மாற்றுக:—

(அ) பசியும் பிணியும் இல்லா நாட்டில் அறியாமை ஏது? (உடன்பாட்டுச் செய்தி வாக்கியமாக)

(ஆ) நம் வாழ்க்கையில் இவற்றைக் கடைப்பிடிக்க வேண்டும். (செயப்பாட்டு வினை வாக்கியமாக)

(இ) மன்னர் அரச தர்மத்தினின்றும் பிறழ்ந்து கொடுங்கோலராக ஆவரேல் தம் தவறைத் தாமே யுணர்ந்து தம் உயிரைப் போக்கிக் கொடுங்கோலைச் செங்கோலாக்குவர். (தனிவாக்கியங்களாக)

(ஈ) பழகியோரிடத்து நெகிழ்ந்து நடக்கும் வாழ்வில்லையேல் மக்கள் மக்களாக வாழ்வதுமில்லை. (எதிர்மறை வாக்கியமாக)

## 2. அரசவைக் கவிஞர்

தமிழ் நாட்டின் புதுமை எழுத்தாளராய்த் தமிழ் மொழிக்கு மறுமலர்ச்சியை உண்டு பண்ணி, தமிழ் நாட்டு மக்களைத் தட்டியெழுப்பிய புலவர் மணிகளுள் நமது அரசவைக் கவிஞர், **நாமக்கல், வே. ராமலிங்கம் பிள்ளை** ஒருவராவர். இப்புலவர் நாமக்கல்லிலே பல ஆண்டுகளாகத் தங்கியிருக்கும் காரணம் பற்றி நாமக்கல் கவிஞர் என்றே கூறப்படுகின்றனர். நாடு சுதந்திரம் பெற்ற பின், சென்னை அரசாங்கத்தார் இவரது கலைத் திறனையும், கல்விச் சிறப்பினையும், நற்குணங்களையும் நன்குணர்ந்து இவரைத் தம் அரசவைப் புலவராகத் (ஆஸ்தான கவிஞர்) தேர்ந்தெடுத்துச் சிறப்பித்துள் ளனர். இவர் கவி பாடுதல், புதுமைக் கதைகள் எழுதுதலோடு, சிறந்த ஓவியக் கலைஞருமாவாரென்று கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை அவர்கள் புகழ்ந்து பாராட்டி யுள்ளார்கள்.

கவிஞர் இராமலிங்கம் பிள்ளை அவர்கள் 1888-ம் ஆண்டு, அக்டோபர் திங்கள் 19-ஆம் நாள் சேலம் ஜில்லாவில் நாமக்கல்லை யடுத்த மோகனூரில் ஒரு எளிய குடும்பத்தில் பிறந்தவர். இவரது தந்தையார் **வேங்கடராம பிள்ளை**யாவார். இவர் இளமையில் உயர் நிலைப்பள்ளியில் பயின்று முடிவடைந்ததும், திருச்சி ராப்பள்ளி அர்ச். சூசையப்பர் கல்லூரியில் எப். ஏ. வகுப்பில் சேர்ந்து கல்வி கற்றனர். கல்லூரிப் படிப்பை இடையில் கைவிட்டார். கவிஞருக்கு இளமைப் பருவந் தொட்டே, கவிகள் இயற்றுவதிலும், ஓவியம் தீட்டுவதிலும் பேரூக்க முண்டு. கல்லூரிப் படிப்பைக்

கைவிட்டாரே யொழிய இக்கலைகளில் இருந்த ஊக்கம் சிறிதும் குறைந்தாரில்லை.

நம் இந்திய நாட்டின் விடுதலை குறித்து எழுந்த சுதந்தரப் போராட்ட இயக்கங்களில் நம் கவிஞர் மனம் சென்றது. அதனால் காங்கிரஸ் மகாசபையில்



அரசவைக் கவிஞர்

சேர்ந்து, அது தொடங்கிய போராட்டங்களில் பங்கு கொள்வாராயினர். அதுமுதல் இவர் காந்தி பக்தரானர். ஆங்கிலப் பேரரசை அஹிம்சை மார்க்கத்

தால் எதிர்த்துப் போராடத் துணிவு கொண்டார். காந்தியடிகளின் தன்னலமற்ற தியாகமும், உறுதியான செயலும், நல்லொழுக்கங்களும் நம் கவிஞரின் உள்ளத்தைக் கவரலாயின. அதனால் அவர் காந்தியடிகளைத் தம் வாழ்க்கைக் குரிய வழிகாட்டியாக ஏற்று அவரது அஹிம்சை வழி நிற்கலாயினர். காந்தி யடிகள் 1930-ஆம் ஆண்டில் தொடங்கிய உப்புப் போராட்டத்தைப்பற்றி நமது கவிஞர் பெருமான் 'கத்தியின்றி ரத்தமின்றி யுத்தமொன்று வருகுது' என மக்கட்கு உணர்ச்சி யூட்டும் வகையில் பாடினார். கவிஞரது புகழ் நாடெங்கும் பரவுவதற்கு இப்பாடலே பெரிதுங் காரணமாயிற்று என்னலாம்.

கவிஞர் அவர்கள் இனிய பேச்சாளர். எடுத்த கருமத்தை இடைவிடாது மெய்முயற்சியுடன் முடிக்கும் திறலுடையார். அவருடைய நடைகள் யாவும் தனிச் சிறப்புடையனவாகவே இருக்கும். கற்றோர் கல்லாதோர் எல்லோரது உள்ளத்தையும் பிணிக்குமாறு எழுதவும் பேசவும் வல்லவர்.

இத்தகைய நமது நாமக்கல் கவிஞர் இயற்றிய நூல்கள் மிகப்பல. அவற்றுள் **என் கதை, மலைக் கள்ளன்** முதலிய உரைநடை நூல்களும், **பிரார்த்தனை, தமிழன் இதயம், அவனும் அவளும், சங்கொலி** முதலிய கவிதைகளும் சிறப்பு வாய்ந்தன. 'என்கதை' என்ற கவிஞரது நூல் படித்தற் கேற்ற சுவைமிக்க இனிய பகுதிகள் அடங்கியது. 'பிரார்த்தனை' என்னும் நூல் சிறுவர்கட்கென்றே பாடப் பட்டது என்னலாம். 'தமிழன் இதயம்' இக்காலத் தமிழ் மகனின் இதயத்

துடிப்பை எடுத்துக் காட்டுவது. 'அவனும் அவளும்' என்னும் நூல் இலக்கியச் செறிவுடையது ஆகும். மற்றைய நூல்களும் இத்தன்மையவே.

நமது அரசவைக் கவிஞர் நமக்குக் கிடைத்த ஓர் அரும் பெரும் பொக்கிஷம். அவர் ஒரு குணக் குன்று ஆவார்; ஆழ்ந்த கடவுட் பற்றுக் கொண்டவர்; சாந்தம் அன்பு, அடக்கம் முதலாய குணங்கள் இயல்பா யமையப் பெற்றவர். காந்திய வழியே கவிஞரது உயர்ந்த குறிக்கோள். அவர் பாமர மக்களிடம் பரந்த அன்பு கொண்டவர்; தீவிரத் தியாகி; நாட்டுத் தொண்டையே தமது தலைசிறந்த கடனாகக் கொண் டொழுகுபவர். கவிஞரது கவிதைகளும் நூல்களும் நாட்டினரை நல்வாழ்வு வாழச் செய்வன. நம் கவிஞர் பெருமான் நலம் பல பெற்று நானிலத்தில் நீடு வாழ்வாராக!

**அருஞ்சொற்பொருள் :**

அரசவை – அரச சபை; ஆஸ்தானம் – அரசாங்கம்; பாவலன் – புலவன். பாட்டுப் பாடுவதில் வல்லவன்; அஹிம்சை – துன்பம் செய்யாமை; திண்மை – உறுதி; பொக்கிஷம் - செல்வம் உள்ள இடம்; காந்தியம் – காந்தியடிகளின் கொள்கை.

**வினாக்கள்:**

1. நாமக்கல் கவிஞரின் இளமையை விவரித்து எழுதுக.
2. கவிஞரின் புகழுக்குக் காரணமாக இருந்தது யாது?
3. காந்திய வழியைப் பின்பற்றக் காரணம் என்ன?
4. நாமக்கல் கவிஞர் இயற்றிய நூல்கள் யாவை? அவற்றின் தன்மையினை எழுதுக.
5. கவிஞரின் நற்பண்புகள் யாவை?

2. கட்டுரை யாக்கம் :

1. 'நமது நாட்டு அரசவைக் கவிஞர்கள்' என்னும் பொருள் பற்றி உன் வகுப்பு மாணவர் சங்கத்தில் 10 நிமிடப் பேச்சு நிகழ்த்துவதற்கு வேண்டிய குறிப்புகள் தயார் செய்க.

2. நாமக்கல் கவிஞரின் கவித்திறனைப் பற்றி ஐந்து வாக்கியங்கள் எழுது.

3. கவிஞரின் நாட்டுத் தொண்டினைப் பத்து வரிகளில் எழுதுக.

4. 'கவிஞரின் இளமையும் கல்வியும்' என்னும் பொருள் பற்றிப் பதினைந்து வரிகளுள் ஒரு கட்டுரை வரைக.

3. மொழிப் பயிற்சி :

1. இப்பாடத்தி லிருந்து எழுவாய், பயனிலை, செயப்படு பொருள் அமைந்த ஒரு வாக்கியம் எடுத்தெழுதுக.

2. கீழ்க் கொடுக்கப்பட்டுள்ளவற்றைப் படித்து ஏற்ற இடத்து நிறுத்தக் குறிகளை இடுக.

நமது அரசவைக் கவிஞர் நமக்குக் கிடைத்த ஓர் அரும் பெரும் பொக்கிஷம் அவர் ஒரு குணக்குன்று ஆவார் ஆழ்ந்த கடவுட் பற்றுக் கொண்டவர் சாந்தம் அன்பு அடக்கம் இவை முதலாய குணங்கள் இயல்பா யமையப் பெற்றவர் காந்திய வழியே கவிஞரது உயர்ந்த குறிக்கோள்

---

## 3. காப்டன் ஜேம்ஸ் குக்

"உழைப்பின் வாரா உறுதிகள் உளவோ"

என்பதற் கிணங்க மேனுட்டார்கள் பண்டு தேசப் படங்களின் உதவியால், பல இடங்களைக் கண்டறிந்தார் கள். ஆனுல் அவர்கள் கி. பி. 15-ம் நூற்றுண்டில் இந்தியா, சீனம், அமெரிக்கா, ஆப்பிரிக்கா முதலிய நாடுகள் காணப்பட்டிருந்தும், பசிபிக் மா கடலையும், அதிலுள்ள எண்ணிறந்த தீவுகளையும் மேனுட்டினர் அறிந்திலர். இத்தகைய இடங்களை யெல்லாம் அறிய வேண்டுமாயின் தேசப் படங்களின் உறு துணை வேண்டும். அவை எவ்வாறு கிடைத்தன? உலகின் பலவேறு வகையான தட்ப வெப்ப நிலைகளை விளக்குவன தரை நூல் அல்லவா? இவற்றை யெல்லாம் தெளிவாக விளக்கும் தரைப் படங்கள் எவ்வாறு கண்டுபிடிக்கப் பட்டன என்பதும் அறியத் தக்கதே. அவை பல அறிஞர்களின் பெருமுயற்சியாலும், நீண்ட உழைப் பாலும், நெடுவழிச் செலவாலும் கண்டறியப் பட்டன. இவற்றின் உதவியினுலேயே நாம் இன்று யாவற்றையும் எளிதில் அறிய முடிகின்றது.

ஆங்கிலேயர்க்கு முன் உலகின் தென் கண்டத்தை அறிய முயன்றவர்கள் டச்சுக்காரர்கள். டச்சுக்காரர் களுள் மிகப் பேரறிஞராக அப்பொழுது விளங்கியவர் **ஆமெல் ஜான்சன் டஸ்மான்** என்பவர். அவர் அரிதின் முயன்று நீயூஜிலந்து, ஆஸ்திரேலியா கரையில் இறங்கி, அவ்விருகரைகளும் தென்கண்ட நிலப்பரப்பின் ஒரு பகுதி என எண்ணினுரே யொழிய, அவற்றின் சரியான அமைப்பை அறிந்திலர். ஆஸ்திரேலியா கண்டம் நமது

நாட்டிற்குத் தென் கிழக்கில் ஏறக்குறைய 3000 கல் தொலைவில் உள்ளது. அதற்குக் கிழக்கில் நியூஸிலாந்து தீவுகள் உள்ளன. ஆஸ்திரேலியா கண்டம் மற்றக் கண்டங்களினும் சிறியது. ஆயினும் தமிழ் நாட்டவர்களுக்கு அக்கண்டம் பல நூற்றாண்டுகட்கு முன்னரே தெரிந்திருந்தது என்பது சரித்திரத்தால் உணரப்படும் செய்தி ஆகும். இக்கண்டங்களை அறிந்து தங்கள் சாம் ராஜ்யத்தோடு சேர்த்துக் கொள்ள ஆங்கிலேயர் எண்ணினர். இதற்குத் தகுதியுடைய நல்லார் காப்டன் ஜேம்ஸ் குக்கே என்றும் முடிவு கட்டினர். அவரால் தான் இன்று ஆஸ்திரேலியாவும் நியூஸிலாந்தும் ஆங்கில சாம் ராஜ்யத்தைச் சேர்ந்த குடியரசு நாடுகளாக விளங்கு கின்றன. அவற்றை முதலில் கண்டறிந்தவர் ஜேம்ஸ் குக் என்பவரேயாவர்.

ஜேம்ஸ் குக், இங்கிலாந்திலுள்ள மார்ட்டன் என்னும் ஊரில் கி. பி. 1728-ம் ஆண்டு நவம்பர் திங்களில் பிறந்தார். அவரது தந்தையார் ஓர் ஏழைக் குடியானவர். அவர் நாள்தோறும் வயலில் நாட் கூலிக்குப் பணியாற்றினர். அன்றாடம் பெற்று வரும் கூலியைக் கொண்டே அவர் குடும்ப வாழ்வு நடை பெற்றது. அத்தகைய வறுமை மிகுந்த தந்தைக்கு ஒரு சுமையாக இருக்க ஜேம்ஸ் விரும்ப வில்லை.

"கொடிது கொடிது வறுமை கொடிது, அதனினும் கொடிது இளமையில் வறுமை" என்பதற் கிணங்க, ஜேம்ஸ் தமது பன்னிரண்டாவது வயதிலேயே வீட்டை விடுத்து வெளியேறி, வேலை தேடிச் சென்றார். அவர் பல ஊர்களுக்கும் சென்று விட்டு, முடிவில் ஒரு சிற்றூரை அடைந்தார். அவ்வூர் கடற் கரையில்

இருந்தது. அவ்வூரி லிருந்த பலசரக்குக் கடை ஒன்றில் மூன்ருண்டு ஒப்பந்தத்தின் மீது இவருக்கு வேலை கிடைத்தது. ஜேம்ஸ் தம் வேலையை ஒழுங்காகச் செய்து வந்தாரெனினும், பலசரக்குக் கடை வேலையில்



காப்டன் ஜேம்ஸ் குக்

இவருக்கு விருப்பம் எழவில்லை. கடையில் பொருள் கள் வாங்க வரும் கப்பலோட்டிகள் கூறும் கடற் செலவின் பெருமையினைக் கேட்குந்தோறும், இவருக்குக் கப்பலில் பணியாற்ற வேண்டும் என்னும் அவாத் தோன்றி, நாளடைவில் வளர்ந்து வந்தது.

இத்தகைய பேரவாக்கொண்ட ஜேம்ஸ் குக் தம் ஒப்பந்த காலம் முடியும் வரை அக்கடையில் வேலைக்கிருக்க மன மிசைந்திலர். எவ்வாறேனும் அவ்வேலையினின்றும் விலகி, தம் மனத்திற் கியைந்த கப்பற் றொழிலை ஏற்க வேண்டும் என்று கருதினர். அவ்விருப்பத்தைத் தமது கடை முதலாளியினிடமும் வெளியிட்டார். இளைஞரது விருப்பம் கடை முதலாளிக்கு மகிழ்ச்சியையே உண்டாக்கிற்று. இவர் கடைக்கு வந்து ஒன்றரை ஆண்டுகளே யாயினும், ஒப்பந்த காலத்தைக் கருதாது வேலையினின்று விலக்கினர். சில நாட்களில் குக்கிற்கு நியூகாஸில் என்னும் துறைமுகத்தில் வேலை கிடைத்தது. அதுமுதல் குக் கப்பலோட்டும் கலையின் நுட்பங்களை அறிவதில் தம் கருத்தைச் செலுத்தினர். நாளடைவில் அதில் தேர்ச்சியும் பெற்றார். கி. பி. 1755ம் ஆண்டு இங்கிலாந்திற்கும் பிரான்சுக்கும் போர் மூண்டது. அச்சமயத்தில் குக் தம் மதிவன்மையால் 'ஈகிள்' என்னும் போர்க் கப்பலுக்கு உதவித் தலைவரானர். பின்னர் இவரது கூர்த்த மதியைக் கண்ட அரசியலார், மெர்க்குரி என்னும் போர்க் கப்பலின் மாஸ்டர் எனும் உயர் பதவியை இவருக்கு அளித்துச் சிறப்பித்தனர்.

ராயல் கழகம் (சொசைடி) 1768-ல் வான் நிகழ்ச்சியை அறிய அரசியலாரிடம் வேண்டியது. வெள்ளிக் கோள், நிலத்திற்கும் கதிரவனுக்கும் இடையில் கடந்து செல்லும் காட்சி 1769-ஆம் ஆண்டு ஜூன் திங்களில் நிகழும். இது குறிப்பிடத் தக்க வான நிகழ்ச்சியாகும். இதற்கு ஏற்ற இடம் பஸிபிக் சமுத்திரத்திலுள்ள டாஹிடி என்னும் தீவே என்று

உலகம் சுற்றித் திரும்பிய காப்டன் வாலிஸ் என்பவர் அரசியலாரிடம் தெரிவித்தார். அறிஞர்களும் இதனை ஏற்றனர்.

வான நிகழ்ச்சியை அறிந்து குறித்துவரத் தகுதியுடையவர் காப்டன் ஜேம்ஸ் குக்கே ஆவார் என்று அரசியலார் முடிவு கட்டினர். அவ்வாறே அவர் பஸிபிக் சமுத்திரத்திலுள்ள டாஹிடி என்னும் தீவுக்கு அனுப்பப்பட்டார். வெள்ளிக் கோள் பெயர்ச்சி அப்பொழுது நிகழ்ந்தது. அப்பொழுது வானத்திலும் சிறப்பாய் வெள்ளிக் கோளிலும் காணப்படும் நிகழ்ச்சிகளை ஆராயவே, குக் அனுப்பப்பட்டார். அவருடன் வான நூல் வல்லுநரான சார்லஸ் கிரீனும், இயற்கைத் தத்துவ அறிஞரான டாக்டர் சோலாண்டரும், ராயல் கழகத் தலைவரான ஸர் ஜோஸப் பாங்க்ஸும் துணையாகச் சென்றனர். குக், அம்மூவரோடும் பல பணியாளர்களோடும் 'எண்டவர்' என்னும் கப்பலில் பிரயாணமானார். பிரயாணம் தொடங்கிய பின் அவர்கள் முதலில் தென் அமரிக்காவிலுள்ள "ரையோடி ஜனெய்ரோ" என்னும் துறைமுகத்தில் 25 நாள் வரை தங்கினர்கள். பின் புறப்பட்டு டாஹிடித் தீவை அடைந்தார்கள்.

டாஹிடித் தீவில் மக்கள் உயர்ந்த உருவமும், அழகிய தோற்றமும், பழுப்பு நிறமும் வாய்ந்தவர்களாய், நல்ல உடலமைப் புடையவராய் விளங்கினர். அத்தீவில் ஆண்களும் பெண்களும் அன்றாடம் விடியற்காலை, பகல், இரவு படுக்கைக்குப் போகுமுன் என, மும்முறை குளிப்பது வழக்கம். உடல் முழுதும் பச்சைக் குத்திக் கொள்ளும் வழக்கமும் அவர்களிடம் உண்டு. அவர்கள் முரட்டுத் துணிகளையும், கோரைப்

புற்களால் செய்யப்பட்டிருந்த பாய்களையும் உடுத்து பவர்கள். ஆண்களும் பெண்களும் சினம் மூட்டப் படாத வரை மிகவும் நல்லவர்கள்; ஆனால் தம் தீவிற்கு வரும் பிற மக்களின் பொருள்களைக் களவாடும் குணம் உடையவர்கள். பன்றி, நாய், கோழி, மீன் மற்றும் அங்குக் கிடைக்கும் பழ வகைகள் ஆகியவைகளே அவர்களின் உணவாகும். இசை, நடனம், நாடகம், மற் போர், வேட்டை முதலியவை அவர்களுடைய விளையாட்டுக்களாகும். குக் அவ்வருடம் நிகழ்ந்த வெள்ளிப் பெயர்ச்சியை அத்தீவில் இருந்து நன்கு ஆராய்ந்து குறித்துக் கொண்டார்.

குக் பின்பு பல தீவுகளையும் கண்டு ஆராய்ந்து 65 நாட்கள் கடந்து நியூஸிலாந்தை அடைந்தார். அத் தீவு முன்னரே டாஸ்மன் என்பவரால் கண்டுபிடிக்கப் பட்டது. அங்குண்டான நிகழ்ச்சிகள் பல. நியூஸி லாந்து இரு தீவுகளாலானது என்று குக் அறிந்தார். வடக்கு முனையில் வாழ்ந்த மக்கள், மக்களைத் தின்னும் மனிதர் என்பதையும் குக் உணர்ந்தார். அத் தீவில் வாழ்ந்த மக்கள் வீரம் மிக்கவர்கள். பின்னர், குக் தென் முனையை வலப்புறமாகச் சுற்றிக் கொண்டு ஆஸ்திரேலியாவை அடைந்தார்; அங்குப் பல அற்புதங் களைக் கண்டார். எவரும் காணாத ஆஸ்திரேலியாவின் கிழக்குக் கரையைக் கண்டு, அங்குள்ள பவழப் பாறை களைப் பார்த்தார். ஆஸ்திரேலியாவில் இதுபோன்ற பல இடங்களைச் சுற்றிப் பார்த்து 2000 கல் தொலை வுள்ள நிலப்பகுதி முழுவதையும் ஆங்கில ஆட்சிக்கு உட்படுத்திப் பிறகு இங்கிலாந்துக்குத் திரும்பினார். அவர் பல குறிப்புகள் எழுதி வைத்துக் கொண்டார்.

கி. பி, 1772-ல் குக் இரண்டாம் கடற் செலவை சில மாலுமிகளுடன் துவக்கினார். இக் கடற் செலவில் இவர் நியூஸிலந்துக் கடுத்த பெரும் தீவான **நியூகலடோனியா**வைக் கண்டார். ஜார்ஜியா தீவு, தென் துருவ எல்லை, நார்போக் தீவு என்பவற்றைக் கண்டுபிடித்து விட்டு ஹார்வின் முனை வழியாக இங்கிலாந்துக்குத் திரும்பினார்.

ஒரு வருஷத்திற்குப் பின், குக் மூன்றும் முறை புறப்பட்டு நன்னம்பிக்கை முனை வழியாக **டாஸ்மேனியா**விற்குச் சென்றார். பின் அமெரிக்காவின் மேற்குக் கரையின் வடகோடியை அடைந்தார். இக் கடற் பிரயாணத்தில் **ஸாண்ட்விச் தீவுகளையும், ஹவாயீ தீவு**களையும் அவர் கண்டார். குக் கடைசியாக ஹவாயீ தீவுக்கு வந்தார். அத்தீவின் மக்கள் மூட நம்பிக்கையுடையவர். முதன் முறை குக்கைத் தெய்வமாக எண்ணிப் பல உபசாரங்களைச் செய்தனர். மறுக்க முடியாத நிலையில் அத் தீவு மக்கள் செய்த உபசரிப்புக்களைக் குக் ஏற்றுக் கொண்டார்.

ஹவாயீ தீவில் முன்பு ஒருகால் ஒரு தெய்வம் இருந்ததாம். அது அத்தீவை விட்டு ஒரு சமயம் சென்று விட்டது. அவ்வாறு சென்ற பொழுது அது, தான் மீட்டும் அத் தீவிற்கு வரப்போவதாகவும், வருங்கால் தென்னை மரங்கள் அமைந்துள்ள தீவு ஒன்றில் இருக்கப் போவதாகவும் சொல்லிச் சென்றதாம். இவற்றில் முழு நம்பிக்கை கொண்ட அத் தீவு மக்கள் "குக்" தான் தெய்வமென்றும், அவரது கப்பல் தான் அத் தீவு என்றும் நம்பினர். குக் மெல்ல அவர்களை விடுத்துப் புறப்பட்டார். ஆனால் அவர் பிரயாணம்

புயலால் தடைப்பட்டது. அதனால் குக் ஹவாயீ தீவிற்கே திரும்ப வந்தார். அத்தீவின் மக்கள் இம் முறை, 'குக் நம்மைப் போன்ற மனிதரே; தெய்வமாயின் புயலாலும், மழையாலும் எவ்வாறு அவருக்குத் தீங்கு உண்டாகும், என்று எண்ணினர். தாங்கள் செய்த சிறப்புக்களை அவர் ஏற்றுக் கொண்டது தவறு என்று சினங் கொண்டு அவர்கள் குக்கிற்குத் துன்பம் இழைத்தனர். குக் எவ்வளவோ அவர்கள் செய்த தீமைகளைப் பொறுத்துக் கொண்டும், அவர்களை மன்னித்தும், நல்லுரை கூறியும் பார்த்தார். ஆனால் அவை யாவும் வீணாயின. முடிவாகக் குக் உயிர் பிழைக்கும்பொருட்டு தம்முடன் வந்தவர்களைக் கொண்டு அத்தீவு மக்களைச் சுட உத்தர விட்டார். அத்தீவின் மக்கள் ஈட்டியாலும், பிற ஆயுதங்களாலும் தாக்கினர். பின் ஏற்பட்டது குழப்பமான போர். குக் கப்பலுக்கு மீளுங்கால் அத் தீவு மக்களில் ஒருவன் அவரை ஈட்டியால் முதுகில் குத்தினான். அதனால் குக் தரையில் சாய்ந்து உயிர் துறந்தார்.

காப்டன் குக் சிறந்த அறிவாளி. இளமை முதலே நல்லியல்பும் நல்லொழுக்கமும் உடையவராக வளர்ந்து வந்தார்; வறுமையில் வாழ்ந்தவ ராயினும், இடையறு முயற்சியாலும் எத்துணைத் துன்பங்களையும் தாங்கும் பொறுமையாலும், உயர் நிலையை அடைந்தார். அவரிடம் உண்மையும், உழைப்பும், உற்சாகமும், அஞ்சா நெஞ்சமும், அன்பும் குடிகொண்டிருந்தன. எந்நிலையிலும் தாம் காணச் செல்லும் தீவிலுள்ள மக்களுக்கு இன்னல் இழைக்க அவர் மனம் இசைந்திலது. சான்றாண்மையின் உருவமாக விளங்கியவர் அப்பெரியார் என்று சுருக்கமாகக் கூறி விடலாம்.

இத்தகைய அரும் பெரும் பணிகளை வெற்றியுடன் முடித்த காப்டன் குக்கின் புகழ் வாழ்க!

அருஞ்சொற்பொருள் :

பணி - வேலை, அவா – ஆசை, இசைந்திலர் – உடன்பட்டிலர், கூர்த்த மதி – மிக்க அறிவு, கோள் – நட்சத்திரம், வெள்ளி - சுக்கிரன், சினம் – கோபம், களவாடும் – திருடும், சான்றாண்மை - பெருந்தன்மை.

1. வினாக்கள்:

1. உலகின் தென் கண்டத்தை முதன் முதல் அறிய முயன்றவர் யார்? அவர்கள் எந்த அளவு நாட்டைக் கண்டார்கள்?

2. ஜேம்ஸ் குக்கின் இளமைப் பருவ நிலை யாது?

3. கப்பலைப் பற்றிய எண்ணம் ஜேம்ஸ் குக்கிற்கு உண்டானது எதனால்?

4. முதல் கடற்செலவு குக்கிற்கு யாரால் எதன் பொருட்டு ஏற்பட்டது?

5. முதல் கடற் செலவில் குக்கிற்குத் துணையாகச் சென்றவர் யார்?

6. டாஹிடித் தீவின் மக்களின் வாழ்க்கையை எழுதுக.

7. டாஹிடித்தீவு மக்களின் விளையாட்டுக்கள் யாவை?

8. கி. பி. 1772-ல் குக் மேற்கொண்ட செயல் என்ன?

9. நன்னம்பிக்கை முனை வழியாகச் சென்ற மூன்றாம் கடற் செலவில் குக் எங்கெந்தத் தீவுகளைக் கண்டார்?

10. ஹவாயி தீவில் நடந்த நிகழ்ச்சி யாது?

11. காப்டன் குக்கின் நல்லியல்புகள் யாவை?

2. கட்டுரை யாக்கம் :

1. ஜேம்ஸ் குக்கின் முதற் கடற்செலவைப் பற்றி 20 வரிகளில் ஒரு கட்டுரை எழுதுக.

2. உலகம் சுற்றுவதால் உண்டாகும் பயன்.

3. வறுமையைப் போக்கும் வழி.

4. சான்ருண்மையின் சிறப்பு-இவைகளைப் பற்றித் தனித் தனியே கட்டுரை எழுது.

3. மொழிப் பயிற்சி:

1. இப்பாடத்திலிருந்து, செய்தி வாக்கியம், விதி வாக்கியம், வினு வாக்கியம், எதிர்மறை வாக்கியம் இவைகட்குத் தனித் தனியே வாக்கியம் எழுதுக.

2. புணர்த்திக் காட்டுக:—

| | |
|---|---|
| நல் + இயல்பு | வரும் + கால் |
| சான்று + ஆண்மை | கடல் + பிரயாணம் |
| மீளும் + கால் | மனதிற்கு + இயைந்த |

3. பின்வரும் வாக்கியங்களிலுள்ள எழுவாய், பயனிலை களைக் குறிப்பிடுக:—

1. குக் தன் ஒப்பந்த காலம் முடியும் வரை அக்கடையில் வேலைக்கு இருக்க மனமிசைந்திலர்.
2. அவ்விருப்பத்தை குக் தன் முதலாளியிடமும் வெளி யிட்டார்.

———

# 4. சேரன் செங்குட்டுவன்

"வடவேங்கடம் தென்குமரி" இடைப்பட்ட தமிழகம் பண்டு சேர நாடு, சோழ நாடு, பாண்டிய நாடு என்ற மூன்று பெரும் பிரிவுகளைக் கொண்டதாக இருந்தது. இவற்றை முறையே சேர, சோழ, பாண்டியர்கள் ஆண்டு வந்தார்கள். இம் மூவேந்தர்களும் ஆண்ட நாட்டில் அமிழ்தினு மினிய நம் தமிழ் மொழி அரசாண்டு வந்தது. இத்தகைய பழம் பெருமை வாய்ந்த மூன்று நாடுகளுள்ளும் சேரநாடு என்பது கோயம்புத்தூர், நீலகிரி ஜில்லாக்களும், கொச்சி, திருவாங்கூர் சமஸ்தானங்களும், மைசூர் நாட்டின் தென் பகுதியும், மேல் கடற் கரைப் பிரதேசமும் அடங்கிய நிலவெல்லையாகும். வஞ்சிமாநகர் சேரநாட்டின் தலைநகரமாக விளங்கியது. சேரவரசர்கள் அந்நகரில் இருந்து சேரநாட்டைப் பலகாலம் சிறப்புற ஆண்டு வந்தனர்.

சேர மன்னர்கள் முடியுடை மூவேந்தருள்ளும் வீரம் மிக்கு விளங்கியவர்கள். ஏனைய சோழ, பாண்டியர்களைக் காட்டிலும் மேம்பட்ட வீரமுடையராகச் சிறப்பித்துப் போற்றப் படுவோர் ஆவார். கல்தோன்றி மண் தோன்றாக் காலத்தின் முன்தோன்றி மூத்த குடியாகவும், படைப்புக் காலந் தொடங்கி மேம்பட்டு வரும் பழங்குடியினராகவும், வீரம், ஆட்சி, செல்வம் முதலிய சிறப்புக்களையும் உடைய பேரரசராகவும் இவர்கள் குறிக்கப்படுவர். இவர்களது முன்னோர் பன்னெடுங் காலம், வேற்றரசர்கட்கு அடங்காது தனி யாட்சி செலுத்தி வந்துள்ளனர். இவ்வரசர்களுட் பலர், ஏனைய சோழ, பாண்டியர்களையும் வென்று தமிழ்நாடு முழு

வதையும் தம் ஆட்சிக்குக் கீழ்ப் படியச்செய்து ஆண்டு வந்துள்ளார்கள். சிலர் சில சமயங்களில் வடநாடுகளின் மீதும் படையெடுத்துப் போய், வட நாட்டு அரசர் பலரையும் வென்று தன் ஆட்சிக்குக் கீழ்ப்படுத்தி வந்துள்ளார்கள்.

மேலே கூறியுள்ள வெற்றியும் புகழும் உடைய சேரவரசர்களுள், கி. பி. இரண்டாம் நூற்றாண்டில், **நெடுஞ்சேரலாதன்** என்னும் பேரரசன் ஒருவன் பெருஞ் சிறப்புக்களோடு அரசாண்டு வந்தான். அவ்வரசன், தன்னுடைய படைவலிமையால் பிறநாட்டு மன்னரை நடுங்கச் செய்து வந்தான். ஒருகால் இவன் தன் வெற்றியை வடநாட்டின் மீது நிலை நாட்ட எண்ணினான். அதற்கேற்ப, அவன் வடநாட்டின் மீது போர் தொடுத்தான். அப்போரில் எதிர்த்த வடநாட்டரசர்களை இமய மலை வரையில் சென்று வெற்றி பெற்று அடக்கினான். இமயமலை வரையில் தான் வெற்றி பெற்றதற்கு அடையாளமாக, அம்மலையில் தன் குடிக் குரிய முத்திரையாகிய வில்லைப் பொறித்துத் தன் நாடு திரும்பினான். அவ் வெற்றிக்குப் பின்னர், வெற்றியின் சிறப்புப் பற்றி **இமய வரம்பன்** என்னும் அடைமொழியோடு **இமய வரம்பன் நெடுஞ்சேரலாதன்** என அழைக்கப்பட்டான். இவ்வரசனுக்கு இரு மனைவியர்கள் உண்டு. அவருள் இரண்டாவது மனைவியாகிய நற்சோணையின் வயிற்றில் உதித்தவனே **செங்குட்டுவன்**. இவன் பின்னர், **இளங்கோ** என்னும் மைந்தனையும் நற்சோணை பெற்றெடுத்தாள். அரச குலத்துக்குரிய சிறப்பொடு மக்களிருவரும் தக்க முறையில், வளர்க்கப் பட்டார்கள்.

செங்குட்டுவனும், இளங்கோவும் உரிய பருவ மடைந்ததும், கல்வி கற்கத் தொடங்கினார்கள். உயர் குடிப் பிறப்பிற்கேற்ப, யானையேற்றம், குதிரை யேற்றம் முதலிய படைக்கலக் கல்வியும், இலக்கியக் கல்வியும் கற்று அவற்றில் தேர்ச்சி பெற்று விளங்கி னார்கள்.

மக்கள் இருவரும் ஒருநாள் தம் தந்தையாரோடு அரசவையில் வீற்றிருந்தனர். அச்சமயம் அரசன் அவையை நிமித்திகன் ஒருவன் அடைந்தான். நிமித்தி கன் அவ்விரு குழந்தைகளையும் மாறி மாறி உற்று நோக்கினான். பின்னர் அரசனை விளித்து, 'இவ்விருவருள் இளையோனே அரசாளுதற்கு உரிய இலக்கணங்கள் அமைந்துள்ளான்' என்று கூறினன். அந் நிமித்திகன் உரையைக் கேட்ட இளங்கோ, நிமித்திகனைச் சினந்து, 'மூத்தவன் இருக்க இளையோன் அரசனுதல் முறை யன்று' எனக் கூறி, அரசவைக் கண் இருந்தோர் யாவ ரும் காணத் துறவறம் ஏற்று அரண்மனையை நீத்துக் குணவாயிற் கோட்டத்துச் சென்று தங்கி, தவ வாழ்வை மேற்கொண்டார். இதன் பின்னர் இவர், **இளங்கோ அடிகள்** எனப்பட்டார். இது வழக்காற்றில் உள்ள ஒரு செய்தியாம்.

இமய வரம்பன் நெடுஞ்சேரலாதனுக்குப் பின்னர் அவன் மூத்த மகனான **செங்குட்டுவன்** முறைப்படி சேர நாட்டுப் பேரரசனாயினான். இவனது தந்தை இறந்த காலத்துத் தாயாகிய நற்சோணையும் உடன் உயிர் நீத்தாள். செங்குட்டுவன் உயிர் நீத்த தாய்க்கு உருவச்சிலை அமைத்து வழிபட உளங் கொண்டான். அதன் பொருட்டுக் கல் கொண்டு வர இமயம் சென்றான்.

செங்குட்டுவன் வடநாடு செல்லும் பொழுது இடையில் வட வரசர்கள் எதிர்த்தார்கள். அவ்வாறு எதிர்ப்பட்ட மன்னர்களை வீரமொடு தாக்கி வாகை சூடினுன். இதுவே இவனது கன்னிப்போர் என்றும் கூறலாம். வடவரசரை வென்று வாகை சூடி இமயஞ் சென்று இருங்கல் கொண்டு தன்னுடு அடைந்தான். அக் கல்லில் தன் தாயின் உருவத்தைச் செதுக்கி வைத்து, அதனை வழி பட்டு வந்தான். என்னே செங்குட்டுவனின் தாய் அன்பு!

செங்குட்டுவன் தன் இளமையிலும் முதுமையிலும் மிக்க வெற்றியுடன் நடத்திய போர்கள் சற்றேறக் குறைய ஆறு எனலாம். ஒவ்வொரு போரிலும் தன் முன்னேர் யாவரினும் மேம்பட்டு, அருஞ்செயல் பல புரிந்து வீறு கொண்டு விளங்கினுன். அத்தகைய போரில் முதலாவதாகக் கொங்கர் செங்களத்து வெற்றியைக் குறிப்பிடலாம். செங்குட்டுவனது ஆக்கங் கண்ட சோழ பாண்டியர்கள் செங்குட்டுவன்பால் பொருமை கொண்டு செங்குட்டுவனைப் பொருது அடக்க எண்ணினர். பொருமையால் அறிவிழந்த சோழ பாண்டியர்கள் பெரும் படையொடு சென்று கொங்கர் செங்களம் என்னும் இடத்தில் செங்குட்டுவனேடு கடும்போர் தொடங்கினர். முயல் சிங்கத்தின் முன் பகைகொண்டு என்செய்யும்! அவ் யுத்தத்தில் செங்குட்டுவனே எளிதில் வெற்றிபெற்ருன். பகைவர் சிறப்பிழந்து தோற் ருேடினர்.

இரண்டாவதாக இவனது **நேரி வாயில்** போரைக் குறிப்பிடலாம். நேரி வாயில் என்ற இடத்தில், தன் மைத்துனச் சோழனுக்கு விரோதமாக எதிர்த்த ஒன்பதின்மரை ஒரு பகலிலேயே அழித்து வெற்றி

பெற்றதாகும். தன் மாமனாகிய நெடுங்கிள்ளி இறந்ததும், அவனது மகனாகிய பெருநற்கிள்ளி சோழ அரசுரிமையை ஏற்று அரசாண்டான். இவ்வாட்சி உரிமையை ஏற்றுக் கொள்ளாமல் ஒன்பது சோழ அரசர்களும் இடர் விளைத்தார்கள். அவர்களையே செங்குட்டுவன் ஒரு பகற்போதில் வென்று, தன் மைத்துனனாகிய பெருநற் கிள்ளிக்கு மணிமுடி சூட்டி மகிழ்ந்தான்.

இவையேயன்றி மோகூர்த் தலைவனும், பாண்டியன் சேனாதிபதியுமாகிய பழையன் மாறன் என்னும் குறுநில மன்னனைத் தன் நண்பன் பொருட்டு எதிர்த்து வெற்றி பெற்றான். கடல் நடுவண் சென்று கடற்போரும் செய்துள்ளான். இவ்வாறு இச்சேர வரசன் செய்த பேரமர்கள் கணக்கற்றனவாம். இவன் சென்ற போரில் எல்லாம் வெற்றிமாலை யுடனேயே திரும்பினான்.

செங்குட்டுவன் காலத்தில் கற்புக் கடகம் பூண்ட பொற்புடைத் தெய்வமாகிய கண்ணகியின் வரலாறும் மணிமேகலையின் வரலாறும் குறிப்பிடத் தக்கனவாம். கண்ணகி தன் கற்பின் மேன்மையைப் பாண்டியனுக்கு விளக்கிக் கூறினாள். கோவலனைக் கள்வனென்று கூறிக் கொலை செய்தது கொடுங் கோலென்று வாதாடினாள். அக்குற்றத்தைப் பொறுக்காது, மதுரைமா நகரைத் தீக்கிரையாக்கினாள். பின்னர் தான் தன்னுடைய தாள வொண்ணாத் துக்கத்தால், எங்கும் நில்லாது மதுரையினின்று நீங்கி மேற்கு நோக்கி நடக்கலானாள். அவ்வாறு சென்றவள் கணவன் இறந்த 14-வது நாள் சேர நாட்டில் உள்ள திருச்செங்குன்று மலையை அடைந்தாள். அங்கு ஒரு வேங்கை மர நிழலில் சற்றே நின்றாள். உடன் கோவலன் விண்ணினின்றும்

விமானத்துடன் இறங்கி வர, கண்ணகி, கோவலனோடு விண்ணுலகு எய்தினள். இச் செய்தியை அங்குள்ள மலை நாட்டு வேடுவர்கள் கண்டு களித்தார்கள்.

செங்குட்டுவன் தன் மனையாளாகிய, இருங்கோ வேண்மாளோடும் இளவலாகிய இளங்கோ வடிக ளோடும் மலைவளங் காணச் சென்றான். தங்கள் அரசரைக் கண்ட மலைநாட்டு வேடுவர்கள், சற்று முன் தாங்கள் கண்டு களித்த காட்சியைக் கூறினார்கள். அவ் வியத்தகு செய்தியைக் கேட்ட செங்குட்டுவன் இறும்பூது கொண்டான். இந்நிலையில், இருங்கோ வேண்மாள், தன் நாடு நோக்கி வந்த பத்தினிக்கு ஆலயம் எடுத்து வழிபாடு ஆற்ற வேண்டும் என்று கூறினாள். அவ்வாறே செங்குட்டுவனும் எண்ணி, பத்தினித் தெய் வத்திற்கு ஏற்ற சிலை அமைக்க இமயத்தினின்றும் கல் கொண்டு வரத் துணிவு கொண்டான்.

செங்குட்டுவன் குறிப்பறிந்த வில்லவன் கோதை என்னும் சேனாதிபதி வடநாட்டு யாத்திரைக்கு ஏற்பாடு செய்தான். குறித்த நல் வேளையில் நால் வகைப் படையும் சூழ்ந்து வர வடதிசை நோக்கிச் சென்றான். அங்குச் சேரனது வலி யறியாது இவனை எதிர்த்த வடவரசருள் பலரைப் பொருது புறங்காட்டி ஓடச் செய்தான்; சில அரசரைச் சிறுமைப் படுத்தினான். பின்னர் இவன் இமயஞ் சென்று பத்தினிப் படிமத் திற்கு ஏற்ற சிலையைத் தேர்ந்தெடுத்தான். அதனைத் தான் வென்று சிறைப்படுத்திய வட ஆரிய அரசர் தலையில் ஏற்றிக் கங்கையில் நீராட்டிக் கொணரச் செய்தான். பின்பு தன் நாட்டில் பெருங்கோயில் ஒன்றெடுத்து, வீரபத்தினியின் படிமத்தைப் பிரதிட்

டித்தான். அதற்கு முறைப்படி பெரு விழாவிற்கும் ஏற்பாடு செய்தான். அவற்றினை ஏற்று மகிழ்ந்த பத்தினித் தெய்வம் யாவருக்கும் அருள் செய்தது. மக்கள் எல்லோரும் பத்தினித் தெய்வத்தின் சிறப்பினை வியந்து சேரவரசனைப் புகழ்ந்தனர்.

சேரன் செங்குட்டுவன் சைவ சமயத்தைச் சார்ந்தவன். அவன் சிவபெருமானை வழிபட்டு வந்தவன். எனினும், இவன் பிற மதங்கள் பலவற்றையும் சமமாகவே மதித்து வந்தான். இவன் ஆட்சிக் காலத்தில் சேர நாட்டின் கண் எல்லா மதங்களும் சமமாகவே பரிபாலிக்கப் பட்டு வந்தன. பல்வேறு சமயங்களைப் பின்பற்றிய மக்களும் தங்கட்குள் சிறிதும் வேறுபாடின்றி ஒற்றுமையாகவே வாழ்ந்தனர். சேரனிடத்தில் நால் வகைப் படையோடு, கடற்படையும் வல்லமையுடன் இருந்தது. அரசியலைத் திறம்பட நடத்த, ஐம்பெருங் குழுவினரும், எண்பே ராயத்தினரும் இருந்து வந்தனர். இவன் தன் குலத்துக்குரிய வில்லோடு, புலி, கயல் இவற்றையும் ஒருங்கே சேர்த்து அமைக்கப்பட்ட இலச்சினையை உடையவனா யிருந்ததால், இவன் அக்காலத்துத் தமிழ் வேந்தர் மூவருள்ளும் தலைமை பெற்றவனாகவே இருந்துள்ளான் என்று தெரிகிறது.

இவ்வரசன் காலத்து இவன் அவையை அலங்கரித்த நல்லிசைப் புலவர்கள் பலர். அவர்களுள் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கவர், பரணரும், சாத்தனரும் ஆவர். இப்புலவர் பெரு மக்களை எல்லாம் இவன் மிகப் பரிவோடு ஆதரித்து வந்துள்ளான். சாத்தனர் ஐம் பெருங் காப்பியங்களுள் ஒன்றாகிய மணிமேகலையை இவன் காலத்தே இயற்றியுள்ளார். பரணர் சேரர்

பரம்பரையின் வரலாற்றை அறிவதற்கு உறுதுணை யாக உள்ள **பதிற்றுப் பத்து** என்னும் தொகை நூலுள் ஒரு பத்தை இயற்றி யுள்ளார். பரணர் பாடிய பத்துட் பாடலு மின்றேல் இம்மன்னனின் வெற்றிச் சிறப்பினை நாம் உள்ளவாறு உணரமுடியாது.

இத்தகைய பெருஞ் சிறப்புடன் விளங்கிய சேரன் செங்குட்டுவன் ஐம்பது ஆண்டுகட்கு மேல் சேர நாட்டை ஆண்டு வந்துள்ளான். இவனது ஆட்சி தனியாட்சி யாகவே இருந்தது. தமிழ்நாடும், தமிழ்மொழியும் இவன் காலத்துத் தலைமை பெற்றுச் சிறந்து விளங்கின. இவ னது வீரம் வானளாவியது. இவன் புகழ் வாழ்க!

அருஞ்சொற்பொருள் :

தனியாட்சி - ஒப்பற்ற ஆட்சி; இலச்சினை – முத்திரை, குண வாயிற்கோட்டம் – வஞ்சி நகரில் இருந்த ஒரு கோயில்; சிலை – கல், பொற்பு - அழகு, படிவம் – உருவம், ஐம்பெருங்குழு – அமைச்சர், புரோகிதர், சேனைத்தலைவர், தூதுவர், சாரணர் என்பவர்களைக் கொண்ட குழு. எண்பேராயம் – கணக்கர், கரும வினைஞர், கடை காப்போர், நகர மக்கள், படைத்தலைவர், யானை வீரர், குதிரை வீரர் என்போர் அடங்கிய குழு.

1. வினுக்கள்:

1. தமிழரசர் மூவருள்ளும் சேரர்க்குரிய தனிச் சிறப்பு யாது?

2. இளங்கோ துறவறம் பூணக் காரணம் என்ன?

3. செங்குட்டுவன் தாயன்புடையன் எனலை எவ்வாறு அறியலாம்?

4. செங்குட்டுவன் செய்த போர்கள் யாவை?

5. நேரி வாயில் போர் யாருக்காக எதன் பொருட்டு நடந்தது?

6. மலை வளங் காணச் சென்ற செங்குட்டுவன் வேட்டுவரால் அறிந்தது யாது?

7. செங்குட்டுவன் வடநாட்டு யாத்திரையை எழுதுக.

8. செங்குட்டுவன் ஆட்சிச் சிறப்பு யாது?

9. ஐம்பெருங்குழு, எண்பேராயங்கள் யாவை?

2. கட்டுரை யாக்கம் :

1. சேரன் செங்குட்டுவனின் முதற் போரைப் பற்றிப் பத்து வரிகள் எழுதுக.

2. செங்குட்டுவனின் வடநாட்டு யாத்திரையை விளக்கி எழுதுக.

3. வட நாட்டார் நிலையைப் பற்றி ஐந்து வாக்கியங்கள் வரைக.

4. நேரி வாயில் போரைப் பற்றிச் சுருக்கி எழுதுக.

5. செங்குட்டுவன் வட நாட்டு யாத்திரை, இராஜேந்திர சோழன் கடாரத்தைக் கைப்பற்றியது, கொலம்பஸ், வாஸ் கோடகாமா — இவைகளைப் பற்றிய உன் பள்ளிக்கூட நூல் நிலயங்களில் உள்ள புத்தகங்களை எடுத்துப் படித்துப் பார்த்துக் குறிப்புகள் எழுதுக.

3. மொழிப் பயிற்சி:

1. பிரித்துக்காட்டுக:—மனையாளாகிய, வேண்மாளோடும், விண்ணினின்றும், ஒன்பதின்மரை, பகலிலேயே, பகற்போதில், உடனுயிர், பிறப்பிற்கேற்ப.

2. சேர்த்து எழுதுக:— வான்+அளாவியது, எண்பேர்+ஆயம், வேறுபாடு+இன்றி, வளம்+காண, தோற்று+ஓடினர்,

3. வடநாடு முன்னரே இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் என்பவரால் வெற்றி பெறப்பட்டது. இது செயப்பாட்டு வினை வாக்கியம் அல்லவா? இதனைச் செய்வினை வாக்கியமாக மாற்றுக.

4. இமயத்தை முதலில் கண்டு வெற்றி பெற்றவர் சேரன் செங்குட்டுவன் என்பவராவார்: 'சேரன் செங்குட்டுவன்' என்று தொடங்கி இவ்வாக்கியத்தை முடித்துக் காட்டுக.

## 5. அடுத்துக் கெடுத்தல்

வடக்கே ஒரு காட்டிலே சதுரதந்தன் என்னும் யானை, யானைக் கூட்டங்கட் கெல்லாம் அரசனாக வாழ்ந்து வந்தது. அக்காட்டில் மழையின்மையால், ஆறு, குளம், ஏரி முதலிய நீர் நிலைகள் எல்லாம் வறண்டு போயின. யானைகள் எல்லாம் ஒன்றுகூடி அரச யானையிடம் சென்று முறையிட்டன. 'அரசே! இங்கு நீர் நிலைகள் எல்லாம் வறண்டு போயின; நாங்கள் எல்லோரும் தாகத்தால் மிக வருத்த முறுகிறோம்; அன்றியும் எங்களுட் சிலர் தாக மிகுதியால் இறந்தும் போயினர்' என்று யானைகள் எல்லாம் கூறின. 'விரைவில் இந்த இடத்தை விட்டு நீர்வளம் பொருந்திய வேறு காட்டிற்குச் சென்றால்தான் உயிர் பிழைப்போம்' என்றுங் கூறி முடித்தன.

யானைகளின் முறையீட்டைக் கேட்ட சதுரதந்தன் நீர்வளம் பொருந்திய வேறு இடத்தைப் பற்றி எண்ணத் தொடங்கியது. முடிவில் இக்காட்டிலிருந்து ஐந்து நாள் பிரயாணம் செய்தால் ஒரு மடுவை அடையலாம் என்று முடிவு செய்தது. உடன் யானைக் கூட்டத்தை நோக்கி, "என் கூட்டத்தவர்களே! நீங்கள் துன்பமடைய வேண்டா; நாம் எல்லோரும் கூடி ஐந்து நாள் நடந்தால் பாதாள கங்கையினால் நிறைந்த ஒரு மடுவை அடையலாம். அம் மடுவில் குளிர்ந்த நீர் மிகுதியும் உண்டு. நான் உங்களை அவ்விடம் நோக்கி அழைத்துப் போகின்றேன். நீங்கள் எல்லோரும் என்னைப் பின்பற்றி வாருங்கள்" என்று சொல்லி யானைக் கூட்டங்களை அம்மடுவிற்கு அழைத்துச் சென்றது.

சதுரதந்தன் என்னும் அரசயானையால் அழைத்துச் செல்லப்பட்ட யானைக் கூட்டங்கள் எல்லாம் அந்த நீர் நிறைந்த மடுவைக் கண்டன. அளவிலா ஆனந்தங் கொண்டன. உடன் அம்மடுவினுள் இறங்கித் தங்களது நீண்ட நாள் தாகந் தணிய வேண்டுமளவு தண்ணீரை முதலில் பருகின. பின் மாலை நேரம் வரையில் பேரார்வத்தோடு தண்ணீரினுள் முழுகி, பின்பு கரையேறி, அக்காட்டின் பலவிடங்களிலும் ஓடி ஆடி விளையாடத் தொடங்கின.

இவ்வாறு யானைக் கூட்டங்கள் எல்லாம் விளையாடித் திரிந்ததால், அங்கே செடிகட் கிடையிலும், புதர்களி னிடையிலும் மறைந்து தூங்கிக் கொண்டிருந்த முயல்களிற் சில, யானைகளின் பாதத்திலகப்பட்டு உடல் நசுங்கி இறந்து பட்டன. வேறு சில முயல்கள் கால்கள் முறிந்து நொண்டத் தொடங்கின. மற்றுஞ் சில முயல்களின் குடர்கள் சரிந்தன. இவ்வாறு யானைகளால் முயல்கள் பட்ட அவதிகள் கணக் கற்றன.

இவ்வாறு முயல்கட்கு, புதிதாகக் குடியேறிய யானைக் கூட்டங்களால் தீங்கு உண்டாகவே, இறந்த முயல்கள் போக, எஞ்சிய முயல்க ளெல்லாம் ஒன்றுகூடி ஆலோசனை செய்யத் தொடங்கின. 'இன்று இந்த யானைக் கூட்டங்க ளெல்லாம் இங்குவந்து நம்முடைய கூட்டத்திற்குப் பெரும் துன்பத்தை விளைவித் துள்ளன. வேறு எங்கும் தண்ணீ ரில்லாமல் இக்காட்டில் மட்டும் இருக்கின்ற படியால் இனி இந்த யானைகள் இக்காட்டிலேயே தங்கி நாள்தோறும் நமக்கு இடைவிடா இன்னலைப் புரியும். மேலும், யானை தொட்டாலும்,

பாம்பு மோந்தாலும், அரசர் சிரித்தாலும், தீயோர் மரியாதை செய்தாலும் உயிர்ச்சேத முண்டாகும். ஆதலால், விரைவில் இத்துன்பத்தினின்றும் விடுபட ஒரு உபாயம் தேடவேண்டும். இல்லையேல் நாம் எல்லோரும் அழிந்து படுவோம்' என்று ஆலோசனை செய்தன.

அச்சமயத்து, கூட்டத்தி லுள்ள சில முயல்கள், "உயிரைக் காத்துக் கொள்ளும் பொருட்டு, இருக்கு மிடத்தை விட்டு விடலாம் என்று அறிவுடையோர் கூறியிருக்கின்ற படியால், நாமெல்லோரும் இக்காட்டை விட்டு, வேறு காவலோடு கூடிய காட்டைத் தேடிச் செல்வதே இப்போது செய்யக்கூடிய காரியமாம்'' என்று கூறின.

இக் கூற்றினைக் கேட்ட வேறு சில முயல்கள், "நமது முன்னோர்கள் நிலையாக வாழ்ந்த இடத்தை விட்டு வேறிடம் செல்வது நமது குலத்துக்கே இழுக்கைத் தரும் காரியம். நாம் இக்காட்டில் இருந்து கொண்டே அந்த யானைக் கூட்டங்கள் பயந்து ஓட்ட மெடுக்கத் தக்க சூழ்ச்சியை ஆராய்ந்து செய்யவேண்டும்'' என்று கூறின. 'அன்றியும் நம்மிடம் வலியில்லை யென்று அந்த யானைகள் எண்ணுமாறு நடந்து கொள்ளக் கூடாது' என்றும் ஆலோசனை கூறின.

இவைகளைக்கேட்டுக் கொண்டிருந்த மற்றொரு புத்தி யுடைய முயல், "யானைகள் அஞ்சி யோடத் தக்க உபா யம் நானறிவேன்; அதைக் கூறுகின்றேன் கருத்தாகக் கேளுங்கள். 'சந்திர மண்டலத்தில் நம்முடைய அரச னாகிய விசயதந்தன் உள்ளான். அவனே நம்முடைய

அரசனும் குலத் தலைவனு மாவான். அவனிடம் நம் முடைய நிலையைப் பற்றி முறையிட, அவன் யானைகளை யெல்லாம் இவ்விடம் விட்டு ஓடும்படி, உத்தர விட்ட தாக யானைகளிடம் சொல்லுமாறு, ஒரு தூதனை அனுப்ப வேண்டும். இவ் வுபாயத்தை மேற்கொண் டால், யானைகள் இவ்விடத்தை விட்டோடிப்போம். நமக்கும் காரியம் கைகூடும்'' என்று எடுத்துக் கூறிற்று.

புத்திசாலி முயலின் கூற்றைக் கேட்ட முயல் களெல்லாம், 'இதுவே ஏற்றகாரியம்' என்று தீர்மா னித்து, உடனே **நெடுங்காதன்** என்னும் அம்முயலைப் பார்த்து, "நீ அறிவிற் சிறந்தவன்; பகைவர்களைச் சமா தானம் பண்ணுவதில் வல்லவன். அதனால், தூது செல்ல நீயே தக்க நிபுணனாக இருக்கின்றாய். சோம்பல், மறதி, ஊக்கமின்மை இவைகள் இல்லாது, துணிவு, சோம்பல் இன்மை, காரியசித்தி, எதையும் ஊகித் தறிதல் என்னுங் குணங்களே தூதர்க்குரிய இலக்கணங் களாம். இக் குணங்க ளெல்லாம் உன்னிடம் இருக்கின் றன. ஆகையால், நீ தூது சென்றால்தான் நம் காரியம் கைகூடும். அறிவில்லாதவனைத் தூதனுப்பினால் காரியம் கெட்டு விடும்'' என்று சொல்லி அம்முயலையே தூதாக அனுப்பி வைத்தன.

முயல்கள் விருப்பப்படி நெட்டைக் காதன், அவ் விடத்தினின்றும் போய், யானைகள் வரும் வழியில் ஓர் உயர்ந்த மேட்டில் உட்கார்ந்து யானைகள் வருவதைப் பார்த்துக் கொண்டிருந்தது. சதுரதந்தன் என்னும் யானையும் வழக்கம்போல் தன் கூட்டத்துடனே வந்தது. தூரத்தில் வரும்பொழுதே முயலானது யானைகளைப்

பார்த்து, "அடா! கொலை பாதகா, நீ உன்னுடைய காட்டை விட்டு வந்து, கொஞ்சமும் வெட்க மில்லாமல் அன்னியருடைய காட்டில் தங்கி அட்டகாசஞ் செய்கின்றாயே! இது உனக்கு ஏற்றதா? ஒரு சிறிதும் ஏற்றதன்று. ஆகையால், நீ இப்பொழுதே எங்கேனும் ஓடிப் பிழைக்க வேண்டும். இல்லையேல், நான் உன்னையும் உன் கூட்டத்தாரையும் அடித்துத் துரத்தி விடுவேன்" என்று சொல்லிற்று.

சதுரதந்தன் என்னும் யானை, அச்சொல்லைக் கேட்டவுடனே வியப்புற்று, "இஃதென்ன! என்றும் நடக்காத புதுமையா யிருக்கின்றதே! முயலுக்கு இந்தத் துணிவு எங்கிருந்து உண்டாயிற்று?" என்று ஆலோசனை செய்து புன்முறுவலோடு அந்த முயலை நோக்கி, "நீ கூறும் வார்த்தை உன்னுடைய நிலைமைக்கு ஏற்றதாக இல்லை. இது மிக்க வியப்பைத் தருகின்றது," என்று கூறிற்று.

உடன் புத்திசாலியான முயல், "என் கூட்டத்தவருடைய உயர்வை நீ தெரிந்து கொள்ளாது இருக்கின்றமையால் என்னுடைய சொல் உனக்கு வியப்பைக் கொடுக்கக் கூடியதாகத்தான் இருக்கும். உண்மையை அறிந்தால், நீ இவ்வாறு ஆச்சரியப்பட்டுக் கூறமாட்டாய். முயற் கூட்டத்துக்குத் தலைவனாகிய **விஜயதந்த ராஜன்,** சந்திர மண்டலத்திலிருப்பது உனக்குத் தெரியு மன்றோ? அவர் எங்கட்கெல்லாம் தலைவர். எங்களது நன்மை தீமைகளைக் கவனிக்கக் கூடியவர். நானோ விஜய தந்தனுடைய தூதுவன். நீ உன் இனத்தாரோடு வந்து இக்காட்டில் தங்கியதால், இங்கே நிலையாகக் குடிகொண்டிருக்கும் பல முயல்கள் நசுக்குண் டிறந்தன.

இந்தக் கொடுமையை எங்கள் தலைவன் உணர்ந்து, சந்திரனிடம் தெரிவிக்க, அந்தச் சந்திரன் உனக்கொரு கட்டளை யிட்டு, அக்கட்டளையை உன்னிடம் தெரிவிக் கும்படி என்னை யனுப்ப, நான் வந்தேன். அதனால் தான் மேற் கண்டவாறு கூறினேன். பெரியோருடைய துணையில்லாமல் எனக்கு இவ்வளவு தைரியமுண் டாகுமா?'' என்று சொல்லிற்று.

யானை சற்று யோசித்து, 'இம்முயலானவன் வலிய வனுடைய தூதுவனு யிருக்கின்றான்' என்று மனந் திடுக்கிட்டு அம்முயலை நோக்கி, "சந்திரனிட்ட கட்டளை யென்ன?'' என்று வினவிற்று.

முயல், "நீ கொஞ்சமும் நாண மில்லாமல், முயற் கூட்டங்கள் தங்கி யிருக்கு மிடத்திலுள்ள குளத்தில் மூழ்கி, விளையாடித் திரிந்து பல முயல்களைக் கொன்றாய். ஆயினும், இந்த ஒருமுறை, நீ செய்த பிழையைப் பொறுத்து, உனக்கு உயிர்ப் பிச்சை கொடுத்து உன்னைக் கொல்லாமல் விட்டேன். இனி மேலும், அவ்விடத் திருப்பாயானால், உன்னுயிர்க் கபாயம்வரும். ஆதலால், அவ்விடத்தை விட்டோடிப் போ. மீண்டும் அங்கே வரவேண்டா,'' என்பதே சந்திர னுடைய கட்டளையாகும். ஆதலால், நீ இப்பொழுதே இவ்விடத்தை விட்டுச் செல். இதற்குத் தடை சொல் வாயானால், உடனே எங்கள் தலைவன் திருமுன்னர் தெரிவிப்பேன்'' என்று சொல்லிற்று.

அதைக் கேட்ட வுடனே யானை திடுக்கிட்டு அம் முயலை நோக்கி, "சந்திர தூதனே! அப்படியானால் என்னை உங்கள் தலைவனாகிய சந்திரனிடத்திற்

கழைத்துக் கொண்டுபோ. நான் அவனுக்கு வணக்கஞ் செய்து விட்டு, வேறொரு இடத்திற்குப் போய்விடு கிறேன்" என்று சொல்லிற்று.

நெடுங்காதன் அவ் யானையை நோக்கி, "அப்படி யானால்நீ தனியாக என்னோடு வா; நான் உன்னை அழைத்துக் கொண்டுபோய் எம் தலைவனைக் காட்டுகிறேன்," என்று சொல்லி யானையைத் தந்திரமாக ஓர் ஏரியின் அருகே அழைத்துச் சென்று, கீழே பார்க்கச் செய்து, "இதற்குள் எங்கள் தலைவர் வந்திருக்கின்றார்; அவர் இப்போது நிட்டையி லிருக்கின்றார். சந்தடி செய்யாமல் இங்கு நின்றபடியே நீ வணங்கிச் செல்; சிறிதும் தாமதிக் காதே. சிறிது தாமதித்து ஏதேனும் சந்தடி செய்வா யானால், அவரது நிட்டைக்குப் பங்கம் வரும். அதனால், அவருக்கு மிக்க கோப முண்டாகும். அவர் கோபத்திற் காளாகாமல் நடந்து கொள்" என்று சொல்லி அவ்வேரி நீருக்குள் தோன்றிய சந்திர பிம்பத்தைக் காட்டிற்று.

யானை அத் தோற்றத்தைக் கண்டவுடனே மனம் நடுங்கி அதனை வணங்கி அங்கு நில்லாமல் விரைந்து சென்று தன் கூட்டத்தை அழைத்துக்கொண்டு வேறிடத்திற்கு ஓடிப் போயிற்று.

அதன் பின்னர், நெடுங்காதன் வந்து நடந்தவற்றைத் தெரிவிக்க, முயல்களெல்லாம் கேட்டுக் களிப்புற்று எப்பொழுதும் போலவே அவ்விடத்திற் சுகமாக வாழ்ந்து வந்தன.

**அருஞ்சொற்பொருள் :**

கரிகள் – யானைகள், வறண்டு போயின - வற்றிவிட்டன, தாகம் - நீர் வேட்கை, இனத்தவர் - கூட்டத்தவர், காவதம் - பத்து மைல், இழிவு – அவமானம், இன்னல் - துன்பம், புன்முறுவல் - சிரிப்பு, உபாயம் – தந்திரம்.

**2. வினாக்கள் :**

1. சதுர தந்தனிடம் யானைகள் எவ்வாறு முறையிட்டன?
2. யானைகளால் முயல்கட்கு என்ன தீங்கு நேர்ந்தது?
3. முயல்களின் ஆலோசனை யாது?
4. நெடுங்காதன் மேற்கொண்ட உபாயம் யாது?
5. சந்திரனைத் தரிசிக்க விரும்பிய யானையை முயல் எவ்வாறு ஏமாற்றியது?
6. இப்பாடத்தால் 'அடுத்துக் கெடுத்தல்' என்பதை நீ எவ்வாறு அறிவாய்?
7. கீழே காணப்படும் செய்திகளுள் சில சரியானவை; சில தவருனவை. அவற்றுள் சரியானவற்றிற்கு எதிரில் 'சரி' என்றும், தவருனவற்றிற்கு எதிரில் 'தவறு' என்றும் எழுதுக.

1. யானைக்குத் தண்ணீர் கிடைக்காது.
2. முயலுக்குத் தண்ணீர் கிடைக்கும்.
3. யானைகள் காட்டில் மறைந்து வசிக்கும்,
4. முயல்கள் திறந்த வெளிகளில் வசிக்கும்.
5. சந்திரன் பூமியில் இறங்கி வருவதும் உண்டு.
6. சந்திரன் பூமியில் இறங்கி வருவதில்லை,

**3. கட்டுரை யாக்கம் :**

1. முயல்களின் ஆலோசனையைப் பற்றிப் பத்து வரிகள் எழுதுக.

4. மொழிப் பயிற்சி :

கீழ்வரும் வாக்கியங்கள் என்ன என்ன வாக்கியங்கள்? விடையைப் பின் வருவனவற்றிலிருந்து பொறுக்கி எடுத்துக் குறிக்கவும். செய்திவாக்கியம், கட்டளை வாக்கியம், வினு வாக்கியம். எதிர்மறை வாக்கியம், உணர்ச்சி வாக்கியம்:

1. சந்திரன் இட்ட கட்டளை என்ன?

2. உனக்கு உயிர்ப்பிச்சை கொடுத்து உன்னைக் கொல்லவில்லை.

3. ஐயோ! இவன் சந்திரனைப் பார்க்க வேண்டும் என்கிருனே!

4. அவர் கோபத்திற்கு ஆளாகாமல் நடந்து கொள்.

5. சதுரதந்தன் அங்கு நில்லாமல் வேறிடத்திற்கு ஓடிப் போயிற்று.

# 6. இரவீந்திர நாத தாகூர்

இரவீந்திர நாத தாகூர் உலகப் புகழ் பெற்ற கவிஞருள் ஒருவர். இவர் இந்தியாவிலுள்ள வங்க மாகாணத்தில் கல்கத்தாவில் பிறந்தவர். இவர் இயல் பாகிய செல்வக் குடியில் தோன்றியவர். நம் இந்திய நாட்டின் தவப்புதல்வர் இவர் என்றுங் கூறலாம்.

இரவீந்திரரின் தந்தையார் தேவேந்திரநாத தாகூராவர். அவர் நல்லொழுக்கம், கடவுள் பக்தி முதலிய நற் குணங்கள் இயல்பா யமையப் பெற்றவர். அதனால் தேவேந்திரநாத தாகூரை எல்லோரும் மகரிஷி என்று சேர்த்தே அழைக்கலாயினர். தேவேந்திர நாத தாகூரின் குடும்பம் மிகப் பெரியது. அதற்கேற்ற செல்வமும், செல்வாக்கும் அவருக்கு இருந்தது.

இரவீந்திரர் கடைசி மகன் ஆனபடியால், இவரைத் தேவேந்திர நாத தாகூர் கண்ணுங் கருத்துமாக வளர்த்து வந்தார். இவரும் அறிவுமிக்க தம் தந்தையுடனும், பலவகைத் தொழில்களிற் சிறந்த சோதர சோதரிகளுடனும் வளர்ந்து வந்தார். இரவீந்திரரது இயல்பான நுட்ப அறிவு, சகோதரர்களது பக்க பலத்தால் பயன் பெறலாயிற்று. தேவேந்திர நாத தாகூரின் பண்பட்ட வளர்ப்பால், இரவீந்திரரும் ஆடல் பாடல்களில் பெருவிருப்பங் கொண்டார். பள்ளிப் படிப்பை முற்றிலும் வெறுத்தார்.

இரவீந்திரர் செல்வக் குடும்பத்தில் பிறந்தாரேனும், தன் தந்தையாரால் மிக எளிய முறையிலேயே வளர்க்கப்பட்டார். தேவேந்திரநாத தாகூர் ஆடம்

பரத்தை அறவே வெறுத்தவர். குழந்தைகள் வளர்ப்பதில் மிகவும் கண்டிப் புள்ளவர். இத்தகைய கண்டிப்பே, பிற்காலத்தில் தம் வாழ்க்கை சீர்படப் பெரிதும் உதவியாக இருந்தது என்று இரவீந்திரரே சொல்லி யுள்ளார்.

இரவீந்திரர் இளமைப் பருவத்தி லிருந்தே இயற்கை அழகில் ஈடுபட்டார். ஆகாயம், சூரியசந்திரர் தோற்றம், உடுக்களின் விளக்கம், சோலைகளின் சிறப்பு, மயிலாட்டம், குயிற் குரல், கிளிப் பேச்சு, நீரோட்டம் முதலியன இவர் உள்ளத்தைக் கொள்ளை கொண்டன, இதன்



கவி இரவீந்திரநாத தாகூர்

காரணமாக இவர் தன் வீட்டுத் தோட்டத்திலேயே நாளின் பெரும் பொழுதைக் கழித்து வந்தார். இவருக்கு உற்ற நண்பர்களாக விளங்கியவர்கள் தோட்டத்

திலுள்ள மரம், செடி, கொடி, மலர்கள் ஆகியவை களேயாம்.

இவர் தன்னுடைய காலம் முழுவதையும் தோட்டங்களிலேயே கழிக்க எண்ணங் கொண்டார். அங்குள்ள மரங்கள் பலவகைப்பட்ட நிறங்களேயுடைய நறுமண மலர்களே உடையனவாக விளங்கும். அவைகளேப் பார்த்து மன மகிழ்வார். மரங்களேப் பற்றுக் கோடாகப் பற்றிச் சுற்றிச் சுற்றி ஓடும் கொடிகளின் நிலேயைக்கண்டு ஆச்சரியப் படுவார். ஒரே நிலத்தில் முளேத்து வளரும் செடிகளிற் பல, வெவ்வேறு வகையான நிறமும், மணமும் கொண்டுள்ளதைப் பார்த்துச் சிந்தனே செய்வார். மலர்களின் அழகிலே ஈடுபடுவார். மலர்கள், தம்மைப் புன்முறுவலோடு பார்ப்பதாக எண்ணி மட்டற்ற மகிழ்ச்சி கொள்வார். கங்கைக் கரைக்குச் சென்று, அங்கு நீராடவரும் மக்களேக் கூர்ந்து நோக்குவார். மக்களுள் உயர்வு, தாழ்வு உள்ளமைக்கு மனம் மாழ்குவார். குடில்களில் வாழும் எளிய மக்களின் நிலேயை எண்ணி மனம் இரங்குவார்.

இயற்கை யழகில் ஈடுபடும் உள்ளமுடைய இவர் இயல்பாகவே கவி புனேயும் ஆற்றலேயும் பெற்ருர். உள்ளக் கிளர்ச்சியே கல்விக்குப் பெரிதும் வேண்டும் என்பதையும் கவி பாடுவதற்கும் அதுவே சிறந்த காரணமாகும் என்பதையும், தம் வாழ்க்கை அனுபவத்தில் உணர்ந்தார். இவ்வாறு இவர் இளமையில் வங்கமொழியில் நூற்றுக்கணக்கான பாடல்களேப் பாடினுர். அவைகள் யாவும் ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட்ட பின்னரே இவரை உலகம் பாராட்டத் தொடங்கியது. இவரும் உலகப் பெரும் புலவருள் ஒருவராக

எண்ணப் பட்டார். மேனுட்டாரும் இவரைப் பெரும் புலவர் என்று பாராட்டத் தொடங்கினர்கள். இவர் நூல்கள் இன்று உலகம் முழுவதும் பாராட்டப்பட்டு வருகின்றன.

தாகூர் தம் வாழ்நாளில் மூன்று முறை இங்கிலாந்து சென்று திரும்பினர்; ஐரோப்பியச் சிறந்த நகரங்களுள் பல அரிய சொற்பொழிவுகள் ஆற்றினர். அவை யாவும் நடுநிலையாளரால் போற்றப்பட்டன. மேனுட்டார் கல்விமுறை இவருக்கு உகந்ததாக இல்லை. இவர் பேச்சைக் கேட்ட மேனுட்டார், இவரைப் "**பெரிய ஞானி**" என்று வாயாரப் புகழ்ந்தனர்.

இவர் கல்கத்தாவுக்கு அருகாமையில், தம் இளமைக் காலத்துக் கொள்கைப்படி, இயற்கையோ டியைந்த கல்வி கற்பிக்கும் சர்வகலாசாலை ஒன்றை ஏற்படுத்தினர், அக்கலாசாலையின் பெயர் "**விஸ்வ பாரதி**" என்பது. அதில் பலநாட்டு மாணவர்களும் வாசித்து வருகின்றனர். அக்கலாசாலையில், அழகு, சித்திரம், இசை, நாடகம், நடனம், விஞ்ஞானம் முதலிய கலைகளைப் பற்றிய பயிற்சி அளிக்கப்படுகின்றது. மாணவர்கள் அவரவர் வேலைகளை அவரவர்களே செய்து கொள்ளு கின்றனர். ஆசிரியர்களும் அம்மாணவர்களோடு சேர்ந்தே வாழ்வு நடாத்துகின்றனர். தாகூரும் மாணவர்களோடு உறைந்து எல்லா வேலைகளையும் உவப்போடு செய்து மகிழ்வு கொள்வது வழக்கம்.

இத்தகைய உயர் குணங்களை உடைய தாகூர் உலகம் போற்றும் கவிஞராக விளங்கக் காரணம் '**கீதாஞ்சலி**' என்னும் அவரது நூலினலேயாம். கீதாஞ்சலி முதலில் வங்காள மொழியிலேயே தான் பாடப்பட்டது.

பின்னர்தான் அது ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப் பட்டது. அதன்பின் அந்நூலின் சிறப்பை உணர்ந்த மேலே நாட்டு அறிஞர் குழுவினர் இவருக்கு **நோபல் பரிசு** வழங்கினர்கள். இத்தகைய சிறந்த நூலைத் தாகூர் முன்னர் தாய் மொழியிலேயே ஆக்கியமை சிந்திக்கத் தக்கதே.

தாகூர் சிறந்த பல கொள்கைகளை உடையவர். காந்தியடிகள் இவரைக் "குருநாதர்" என்று போற்றி யுள்ளார். இயற்கையின் சிறப்பைப் பல விடங்களிலும் பாராட்டியுள்ளார். அன்பு, நேர்மை, ஒற்றுமை, கட்டுப்பாடின்மை, இறை வழிபாடு, அடிமை வாழ்வு இல்லாமை முதலிய சிறந்த கொள்கைகளே இவரது வாழ்க்கை இலட்சியங்களாகும்,

எண்பது ஆண்டுகள், இந்நில வுலகில் வாழ்ந்த இவர் 1941-ம் ஆண்டு, ஆகஸ்டு திங்கள், 7-ம் நாள் இறைவன் திருவடிகளை அமைதியுடன் அடைந்து விட்டார். இதனால் இந்தியா ஒரு பெரிய அறிஞரை இழந்து விட்டது. இவர் நூல்களைப் படித்து, இவரது கொள்கைகளை இயன்ற அளவு பின்பற்றி நடத்தலே, நாம் இவருக்கும், நாட்டுக்கும் செய்யும் சிறந்த தொண்டாகும்.

**அருஞ்சொற்பொருள் :**

கவி – பாட்டு இயற்றுபவர், மஹரிஷி – பெரிய முனிவர், ஆற்றல் – வலிமை, விசுவ பாரதி – எல்லாக் கல்விக்கும் இருப் பிடம், இலட்சியம் – குறிக்கோள்.

**வினக்கள் :**

1. தாகூர் இளமை வாழ்க்கை யாது?
2. தாகூர் உலகக் கவிஞரானது எதனுல்?

3. 'விசுவபாரதி' என்பது யாது? அங்கு என்னென்ன கல்வி கற்பிக்கப்படுகிறது?

4. தாகூர் உள்ளம் எதனை நாடிற்று?

5. தாகூரின் கொள்கைகள் யாவை?

கட்டுரை யாக்கம் :

1. 'இயற்கையழகு' என்பதுபற்றிப் பதினைந்து வரிகளுள் ஒரு கட்டுரை எழுதுக.

2. 'தாகூரின் இளமை' பற்றி உன் நண்பனுக்கு ஒரு கடிதம் எழுது.

3. தாகூரின் நாட்டுத் தொண்டை விளக்கி எழுதுக.

மொழிப் பயிற்சி:

1. பிரித்துக் காட்டுக :–இயற்கையோ டியைந்த, எண்ணங் கொண்டார், நன்னாடு, இயற்றியுள்ளார், தவப் பயன், நுண்ணறிவு, இத்தகைய.

2. புணர்த்திக் காட்டுக :– மேல்+நாட்டார், ஆங்கிலம்+கல்வி, சொல்+பொழிவு, நன்கு+கவனித்து, மண்+உலகு.

3. 'தாகூரது சிறப்பு மொழிகளைக் கவனியுங்கள்' இது, கட்டளை வாக்கியம் என்பது உங்களுக்குத் தெரியும். கட்டளை வாக்கியங்கள் ஐந்து எழுதுக,

4. வாக்கியங்களில் அமைத்துக் காட்டுக :- இத்தகைய தோட்டங்களில், இயற்கையழகு, பின்பற்றி நடத்தலே, சிந்திக்கக் கூடியதே.

# 7. அச்சுப் பொறி

மக்கள் வாழ்க்கைக்குக் கல்வி இன்றியமையாதது. கல்வியைப் பரப்புவதற்கு இன்றியமையாத சாதனம் அச்சுப் புத்தகங்களே. அச்சுப் புத்தகங்கள் வெளி வருவதற்கு முன்புள்ள பழந் தமிழ் நாட்டு நூல்களின் நிலை சிந்திக்கத் தக்கதே. அச்சுப் பொறிகள் நாட்டிற்கு வந்த பின்னர் தமிழ் நூல்கள் பலவும் பலவாறாக அச்சடிக்கப்பட்டுப் பல வகைகளாகவும் காட்சியளிக் கின்றன. ஆயின் பண்டு அவ்வாறில்லை. காரணம் இன்று நம் நாட்டில் காணும் அச்சுப் பொறியும், காகிதங்களும் பண்டு இல்லாமையே யாம். மக்களும் இதைப்பற்றி எண்ணவும் தொடங்கவில்லை. நன்றாக வாரி அமைக்கப்பெற்ற பனை ஓலையின் மீது, கூரிய எழுத்தாணி கொண்டு எழுதி வரலாயினர். மலர்களின் மீது செம்பஞ்சுக் குழம்பினாலும், மையினாலும் எழுதி யுள்ளார்கள். கோவலனுக்கு மாதவி பிரிவுக் காலத்தில் எழுதிய கடிதம் இவ்வாறே அமைந்துள்ளது என்று இளங்கோ வடிகள் குறிப்பிடுகின்றார். ஓலையில் எழுதிய எழுத்துக்கள் விளக்கமாகத் தெரிய மை, பச்சிலைச் சாறு முதலியன பூசுதலும் உண்டு.

இத்தகைய வருத்தம் இருந்தாலும், பண்டைய மக்கள் அச்சுப் பொறி முதலியன கண்டுபிடிக்க முயல வில்லை. ஆகவே, அவர்கள் நெடுங்காலம், வைத்துக் காப்பாற்ற வேண்டிய ஆவணங்கள் (பத்திரங்கள்) முதலியவற்றைச் செம்பு, கல் இவற்றில் பொறித்து வைத்துக் கொண்டனர். இத்தகைய நிலையில்

பொறித்து வைத்ததே தேவாரத் திருமுறைகளும், இறையனாரகப் பொருளுமாம். இன்றும், சில பட்டயங்கள் செப்புத் தகட்டில் உள்ளன. பனை ஓலையில் எழுதும் போது மெய்யெழுத்து புள்ளி பெறாமல் இருக்கும். சொற்கள் பிரிக்கப்படுதலும், குறியீடுகள் அமைத்தலும் இல்லாமல் இருக்கும். இதனால் இவற்றைப் படிப்பது எவருக்கும் இயலாது. இன்றும் இத்தகைய சுவடிகளைத் "தஞ்சை சரஸ்வதி மஹாலிலும்," "ஆதீனங்களிலும்", "ஆலயங்களிலுள்ள நூல் நிலையங்களிலும்" பெருவாரியாகக் கண்டு களிக்கலாம்.

பண்டு நம் நாட்டில் கல்வி அறிவு, கேள்வி வாயிலாகவே பரவி வந்தது. **'கற்றலிற் கேட்டலே நன்று'** என்னும் பழமொழி இதுபற்றியே எழுந்தது போலும். அறிவுக் கேற்ற நூல்கள் பல நம் நாட்டில் இருந்தும், அவை பொதுமக்கட்கு ஒரு சிறிதும் பயனளிக்கக் கூடியனவாக இல்லை; நூல் நிலையங்களிலேயே சேர்த்து வைக்கப்பட்டன. அக்காலத்து வெளிவரும் நூல்கள் பலராலும் படித்து இன்புற முடியவில்லையே என்று நூலியற்றிய ஆசிரியர்கள் பெரிதும் வருந்தினார்கள். பலரும் படிப்பதற்குப் பல படிகள் வேண்டும்; படியெடுத்தல் எளிதன்று. அதனால் சிறந்த நூல்கள் யாவும் பொது மக்கட்குக் கிட்டாது போயின.

இவ்வளவு முயற்சியுடனும், வருத்தத்துடனும் எழுதும் நூல்களைக் காப்பதும் கடினமே! பனை ஓலை நூற்களை எளிதில் கரையான் அரித்துவிடும். இராமபாணம் முதலிய பலவித பூச்சிகளும், எலிகளும் கரையானுடன் சேரும்; கள்வர்முதலியோரும் நூலின் அருமை தெரியாது சிதைத்து விடுவார்கள். ஆகவே சிறந்த

நூல்கள் பழுது படாமலும், கெட்டுப் போகாமலும் இருக்க நம் நாட்டு அரசர்கள் அவற்றைத் தொகுத்துக் கற்றவர் சங்கத்தைத் தம் அவையில் கூட்டி அவர்களது பொறுப்பில் காப்பாற்றி வந்தனர். என்றாலும் எல்லோருக்கும் அச்சேமிப்பு நிலையம் பயன் தரக் கூடியதாக இல்லை.

கி. பி. 14-ம் நூற்றாண்டில் ஜான் கூடென்பர்க்கு என்னும் ஜெர்மானியரால் சலன வச்சு கண்டு பிடிக்கப் பட்டது. கி. பி. 16-ம் நூற்றாண்டில் ஐரோப்பாவிலிருந்து பாதிரிமார்கள் இந்தியாவிற்குத் தங்கள் கிறித்தவ மதத்தைப் பரப்ப வந்தார்கள். அவர்கட்கு இங்கு அச்சுப் பொறி இல்லாமை மிக்க இடையூறாயிருந்தது. இந்த இடையூறை ஒழித்துக் கட்டவேண்டுமானால் அச்சுப் பொறி இந்த நாட்டிற்கு இன்றியமையாதது என்பதை உணர்ந்தார்கள். மேலும் இந்த நாட்டில் கிறித்தவ மதம் பரவ வேண்டுமானால், மொழியறிவுவேண்டும் என்பதையும் உணர்ந்தார்கள். ஆகவே மேனாடுகளிலிருந்து அச்சுப் பொறிகளைத் தருவித்து நூல்களை அச்சிடுவதென உறுதி கொண்டனர். அவ்வுறுதியின் பயனாக கி. பி. 1557-ல் அச்சுப் பொறியைத் தருவித்து, முதன் முதலாக "கிறித்தவ உபதேசம்" என்னும் நூலைத் தமிழில் அச்சிட்டனர். பின்னர் 18-ம் நூற்றாண்டில் காகிதங்கள் செய்யும் முறையைக் கற்றுத் தெரிந்து, அவற்றை இங்கேயே செய்யவும் தொடங்கினர். அது முதல் நூல்கள் காகிதத்தில் வெளிவரலாயின. 19-ம் நூற்றாண்டில் அச்சு நூற்களின் எண்ணிக்கையும் அதிகரித்தன. நூற்களும் பலமுறையில் அச்சிடப்பட்டன; இவையேயன்றி, நாள் தாள்,

வாரத்தாள், திங்கள் தாள் முதலிய பலவகைச் செய்தித் தாள்களும் வெளிவரலாயின.

இத்தகைய மேனுட்டார்களின் முயற்சியால் நம் நாட்டில் அச்சுப் பொறி அமைவதாயிற்று. அதனுல் நம் நாட்டுக் கல்வி மிக்க விரிவடைந்துள்ளது. பல நூல்கள் வெளிவந்து அறிவை வளர்த்தன. இவ்வள விற்கும் மூலகாரணமாக உள்ள அச்சுப் பொறியின் வரலாற்றை நன்ருகச் சுருக்கமாகக் காண்போம்.

நாட்டில் முதன் முதல் சீனர்களே மரப்பலகை யாலாகிய அச்சுப் பொறியைக் கண்டுபிடித்தார்கள். இது கண்டு பிடிக்கப்பட்ட காலம் கி. பி. 6-ம் நூற்ருண் டாம். இந்த முறையில் ஒருவித மரப் பலகையிலே ஒரு பக்கத்திற்கு உண்டான எழுத்துக்களைச் செதுக்க வேண்டும். இவ்வாறு செதுக்கும் போது ஒரு நூலில் எத்தனை ஏடுகள் வேண்டியிருக்குமோ, அதனினும் இருமடங்கு பலகைகள் செதுக்கப்பட வேண்டும். இப்பலகைகளில் நூல்களில் உள்ள பக்கங்களைப் பொறித்து எடுத்திருப்பர். ஆனல் அப்பலகைகள் அக்குறிப்பிட்ட ஒரு நூலுக்குத் தவிர வேறு நூலுக்குப் பயன்படா. அதனுல் மக்கட்கு வேலைகள் அதிக மாகவே இருந்து வந்தன.

மேனுட்டில் ஜான் கூடென்பெர்க் என்னும் ஜெர்மானியரால் கி. பி. 14-ம் நூற்ருண்டில் "சலன அச்சு" முறை கண்டுபிடிக்கப்பட்டது என்று முன்னரே கூறப்பட்டுள்ளது. அச்சமயத்தில் ஹாலந்து நாட்டு ஹாரிசம் நகரில் லாரன்ஸ் கேஸ்டர் என்பவர் மரத்தின் பட்டையில் எழுத்துக்களைச் செதுக்கி

அதனின்றும் பலநூல் பிரதிகள் அச்சடித்துக் கொடுத்தனர். இவரும் முதலில் மேற்கொண்டது சீனர்கள் முறையே. இதனால் பொருட் செலவும், காலச் செலவும் அதிகரித்தனவே யொழிய குறிப்பிட்ட பயன் பெற முடியவில்லை. எழுத்துக்களை மரத்தில் தனித்தனியே செதுக்கி ஒரு சட்டத்தில் வரிசையாக அடுக்கி முடுக்கி வைத்துக் கொண்டார். இவ்வாறு பக்கம் பக்கமாக அடுக்கி நூல்களை அச்சடிக்கத் தொடங்கினார். இதனால் காலச் செலவு குறைந்தது. எழுத்துக்களும் வேறு நூல்கள் அச்சடிப்பதற்குப் பயன்பட்டன. சிறிது காலத்திற்குப் பின்னர் அவரே இம்முறையிலும் ஒரு சீர் திருத்தம் செய்யத் தொடங்கினார். மர எழுத்துக்குப் பதிலாக ஈய எழுத்துக்களை அமைக்கும் முறையைக் கண்டு பிடித்தார். இந்த எழுத்துக்களால் பெரிதும் நன்மை பெறலாம் என்பதை யுணர்ந்த "லாரென்ஸ் கேஸ்டர்" சில தொழிலாளிகளைச் சேர்த்துக் கொண்டு தொழிலை அபிவிருத்தி செய்தார். அத்தொழிலாளி களது மாறுபட்ட நிலையால் அவர் மனம் நொந்து தமது 61-ம் வயதில் மரண மடைந்தார்,

"லாரென்ஸ் கேஸ்டர்" இறந்ததற்குப் பின் ஐரோப்பாவில் பல இடங்களில் அச்சுக்கூடங்கள் அமைந்தன. கி. பி. 15-ம் நூற்றுண்டில் **காக்ஸ்டன்** என்பவர் "**வெஸ்ட் மினிஸ்டரில்**" முதன் முதலாக அச்சுக்கூடம் அமைத்தார். அவ்வச்சுக்கூடம் சிறந்த முறையில் வேலை செய்து வந்தது.

இவ்வாறு எத்தகைய மாறுபாடு மின்றி நடந்து வந்த அச்சுத் தொழில், கி. பி. 17-ம் நூற்றுண்டில் ஒரு சில மாறுபாடடைந்தது. அந்த மாறுபாடும் **ஸ்டான்**

**கோப்** என்பவரால் ஏற்படுத்தப் பட்டதே. அவர் பொறியியந்திரம் ஒன்றைக் கண்டுபிடித்து அதன் மூலம்




லினோ டைப்

அச்சடிக்கத் தொடங்கினர். இதன் உதவியால் முன்னைய தைவிடப் பல படிகள் எடுக்க முடிந்தது. இப்படிகள் யாவும் மிக்க தெளிவுடையனவாகவும் இருந்தன. பின்பு

பிரடெரிக் கோனிஸ் என்பவர் கி. பி. 19-ம் நூற்றுண்டின் முற்பகுதியில் நீராவியின் ஆற்றலால் இயங்கி ஓடும் அச்சுப் பொறியொன்றைக் கண்டு பிடித்தார். இது 17-ம் நூற்றுண்டில் கண்டுபிடிக்கப்பட்ட பொறியைக் காட்டிலும், சிற்றுழைப்பில் பெரும்பயனைக் கொடுக்கக் கூடியதாக இருந்தது. இதனை அடுத்து இன்று மின்சார சக்தியால் அச்சுப்பொறி இயங்கி வருகிறது. இது முன்னைய எல்லாவற்றைக் காட்டிலும் மிக்க பயனைக் கொடுக்கக் கூடியதாக உள்ளது. இன்னும் வருங் காலத்தில் அடையும் மாறுதல் நம்மால் சொல்லவொண்ணுததாயுள்ளது.

செய்தித் தாள்கள் நாளுக்கு நாள் பெருகிவரும் இந்நாளில் இம்முறையும் பயனளிக்கக் கூடியதாக இல்லை. அதனுல் அவர்கள் "லினோ டைப்" என்னும் புதுப் பொறி ஒன்றைக் கண்டு பிடித்து, அதன்வழியாகச் செய்தித்தாள் வேலைகளை மிக விரைவாகச் சுருங்கிய போதில் நடத்தி வருகிறுர்கள். இவ் "லினோ டைப்பில்" "டைப் ரைட்டர்" என்னும் இயந்திரத்தோடு அச்சுப் பொறிக்கும் இயந்திரம் இணைக்கப்பட்டு, எழுதுவதும், அச்சுக் கோப்பதும் ஒரே காலத்தில் நடைபெறுமாறு அமைத்துள்ளார்கள். அன்றியும், ஒரே சமயத்தில், எழுதுதல், அச்சமைத்தல், கோத்தல், அச்சடித்தல், விளிம்பு வெட்டல், மடித்தல் முதலிய பல தொழில்களையும் செய்யக் கூடிய இயந்திரங்களும் உண்டு. இது போன்ற இயந்திரங்களைச் சென்னை "இந்து" முதலிய பத்திரிகை நிலையங்களில் காணலாம்.

உலக நாகரிக நிலை வளரும் விதம்தான் என்னே! பண்டு நூல்கள் இன்றித் துன்புற்ற நாம், இன்று வெளி

யாகும் நூல்களை விலை கொடுத்து வாங்க இயலாத நிலையில் உள்ளோம். இன்னும் இவைபோன்ற ஆராய்ச்சிகள் பல்கிப் புதிய புதிய முறையில் அச்சுப் பொறிகள் கண்டு பிடிக்கப்பட்டு நூல்களும் நிறைந்து வெளிவர வேண்டும். அத்தகைய நாளே நன்னாள்; அந்நாள் வரும் நன்னாளை நாடுவோமாக!

அருஞ்சொற்பொருள் :

வருத்தம் – துன்பம்; பொறித்து – எழுதி; படி – காப்பி: சிதைத்து – அழித்து; சேமிப்பு - சேர்த்து வைத்துள்ள நிலை; தாள் - பத்திரிகை, இயலாத – முடியாத.

வினாக்கள் :

1. பண்டைக் கால மக்கள் நூலைப் போற்றிய முறை யாது;
2. சங்கம் என்றால் என்ன?
3. நம் நாட்டுக்கு அச்சுப் பொறியைக் கொண்டு வந்தவர் யார்?
4. முதன் முதல் அச்சு முறையைக் கண்டுபிடித்த நாடு யாது? அந்நாட்டார் எவ்வாறு அச்சடித்தார்கள்?
5. சலனவச்சு என்றால் என்ன? அதனை யார் கண்டு பிடித்தது?
6. கி. பி. 17-ஆம் நூற்றாண்டிலிருந்து, கி. பி: 19-ஆம் நூற்றாண்டு வரை அச்சுப் பொறியில் ஏற்பட்டுள்ள மாறுதல்கள் என்ன?
7. "லினோ டைப்" என்றால் என்ன?

கட்டுரை யாக்கம் :

1. அச்சுப் பொறி வளர்ந்த வரலாற்றைச் சுருக்கி எழுது.
2. அச்சுப் பொறியின் இன்றியமையாமை, பண்டைய மக்கள் நிலை, மேனாட்டார்-முயற்சி இவைகளைப் பற்றித் தனித் தனியே கட்டுரை எழுதப் பழகுக.

மொழிப் பயிற்சி :

1. இப்பாடத்திலிருந்து செய்வினை வாக்கியம், செயப்பாட்டுவினை வாக்கியம் இவைகளைத் தனித்தனியே எடுத்து எழுது.
2. பகாப்பதம், பகுபதம், இவைகள் ஒவ்வொன்றிற்கும் இப்பாடத்திலிருந்து தனித்தனியே எட்டு எட்டு சொற்கள் தொகுத் தெழுதுக.

## 8. குதிரை முட்டை வாங்கியது

அவிவேக பூரண குருவும், அவருடைய ஐந்து சீடர்களும் ஒன்று சேர்ந்து ஆலோசனை செய்யத் தொடங்கினார்கள். சீடர்கள் ஐவரும் ஒன்றுகூடி நமது குருவிற்கு ஒரு குதிரை வாங்கிக் கொடுத்து விட்டால் நலமாயிருக்கும் என்று முடிவு கட்டினார்கள். தங்களுடைய எண்ணத்தைக் குருவினிடம் வெளியிட்டார்கள். குருவிற்கும் குதிரையேறிச் செல்ல வேண்டும் என்ற ஆசையும் இருந்தது. குருவானவர் தன்னுடைய சீடர்களை நோக்கி "ஒரு குதிரை விலை எவ்வளவு இருக்கும்?" என்று கேட்டார். சீடர்கள் "நூறு பொன் அல்லது ஐம்பது பொன்னிற்குக் குறையாது" என்றார்கள். 'அவ்வளவிற்கு நம்மிடம் பொருள் ஏது?' என்று குருவானவர் மறுத்து விட்டார்.

ஒரு நாள் குருவின் பசு மேய்ச்சலுக்குச் சென்றது. பொழுது சாய்ந்தும் வீட்டிற்கு வரவில்லை. சீடர்கள் எல்லோரும் பலவிடங்களிலும் சென்று தேடினார்கள். இரவு முழுவதும் அலைந்தும் ஐந்து சீடர்களும் பசுவினைக் கண்டு பிடித்தார்கள் இல்லை. குரு சீடர்களின் நிலையை எண்ணிக் கடிந்து கொண்டார். மறுநாள் பொழுது புலர்ந்ததும் ஐந்து சீடர்களும் தனித் தனியே சென்று பசுவைத் தேடிக் கண்டு பிடிப்பது என்று முடிவாயிற்று. அவ்வாறே ஒவ்வொருவரும் வேறு வேறிடத்திற்குச் சென்றார்கள். அவருள் மட்டி என்பவன் கிராமாந்தரங்களிலே சென்று தேடினான்.

மட்டி மூன்றுநாள் வரை கிராமாந்தரங்களில் பல விடங்களிலும் தேடி அலைந்து பசு அகப்படாமல் மனம்

நொந்து மடத்துக்கு வந்தான். குருவை நோக்கி, 'ஐயா! பசுவைக் காணேன்; ஆயினும் பசு காணாதது பற்றி எனக்கு வருத்தமில்லை' என்றான். 'என்ன அது?' என்று குருவானவர் ஆச்சரியப்பட்டு வினவினார். நேற்று நாம் முடிவு கட்டியபடி அதிக விலை இல்லாது "சொற்ப விலையில் நமக்குக் குதிரை அகப்பட்டது" என்று மகிழ்வோடு கூறினான். "அஃதெப்படி?" என்று குருவும் ஆவலோடு மட்டியை வினவினார். "காணாமற் போன கறவைப் பசுவைத் தேட ஊருக்கு ஊர், காட்டுக்குக் காடு, கொல்லைக்குக் கொல்லை, ஏரிக்கரைக்கு ஏரிக்கரை எல்லாம் போய்ச் சோதித்தேன். குரு வருளால் ஒரு பெரிய ஏரியின் கரையைச் சாரும் பொழுது, நாலைந்து கோளிகைக் குதிரைகள் மேய்ந்து கொண்டிருப்பதைக் கண்டேன். பின்னர் நான் அவைகள் அருகில் சென்றேன். அப்பொழுது நான் இதுவரை எங்கும் காணாத குதிரை முட்டைகளைக் கண்டேன். அம் முட்டைகள் எல்லாம் இரு கைகளாலும் தழுவக் கூடாத அளவு பருமன் உடையனவாக இருந்தன. அதனால் ஐயங்கொண்டு, குதிரை முட்டைகள் தானா என்று அங்கு வந்தவனைக் கேட்க, 'அவன் அவைகள் குதிரை முட்டைகளே' என்றும் 'ஒவ்வொன்றின் விலை அதிகமில்லை; நாலைந்து பொன் தான்' என்றும் என்னிடம் கூறினான். ஐயா, இது நல்ல சந்தர்ப்பம்; சுலபமாக உயர்தரக் குதிரைகள் கிடைக்கின்றன. குட்டியிலிருந்து அவைகள் நம்மிடம் வளர்வதால், நாம் எப்படிப் பழக்குகின்றோமோ, அப்படி யெல்லாம் நமக்கு அது உதவி செய்யும்" என்று மட்டி கூறினான். எல்லாச் சீடர்களும் மட்டி கூறியதையே கூறினர்கள். குருவானவர் மட்டியிடம் ஐந்து பொன் கொடுத்து,

மடையன் என்பவனையும் சேர்த்துக் காலகரணம் செய்யாது குதிரை முட்டை வாங்கிவர அனுப்பி வைத்தார்.

மட்டியும், மடையனும் ஐந்து பொன்னுடன் குதிரை முட்டை வாங்கப் போன பிறகு, மூடன் என்னும் மற்றொரு சீடனுக்குச் சந்தேகம் ஏற்பட்டது. மூடன் மூர்க்கனையும், மிலேச்சனையும், குருவையும் பார்த்துப் பின்வருமாறு கூறலானான். 'மட்டியும், மடையனும் சேர்ந்து போயிருப்பதால் தவறாது நல்ல ஜாதிக் குதிரை முட்டையுடன் தான் திரும்புவார்கள். வந்தும் பயனில்லையே' என்றான். குரு வியப்புற்று மூர்க்கனை என்ன என்று மறுபடியும் வினவினார். 'முட்டை அடை காத்த பின்னல்லவோ குட்டியாகும். மட்டியோ இரு கையாலுமே தழுவ இயலாத அவ்வளவு பெரிய முட்டை யென்று கூறினானே? அவ்வளவு பெரிய முட்டையை யார் அடைகாக்கிறது? அப்பா! எனக் கொன்றுமே தோன்றவில்லை; பத்துப் பதினைந்து கோழிகளை வைத்தாலும் போதாது; அவைகளும் பிணங்காமல் நிற்காது; இதற்கு என்ன வழி?' என்று கூறித் தன் உரையை முடித்தான். மூர்க்கன் சொல்லைக் கேட்ட மிலேச்சனும், மூடனும் ஒருவரை ஒருவர் பார்த்து வாய் பேசாமல் இருந்தார்கள்; சிறிது நேரஞ் சென்றபின்னர், குருவானவர் "நம்முள் யாராவது ஒருவர் அடைகாத்தாலொழிய வேறு வழி காணேமே" என்று தன் எதிரே இருந்த மூன்று சீடரையும் தனித்தனி வினவினார். ஒவ்வொருவரும் ஒவ்வொரு போக்குச் சொல்லி நீங்கத் தலைப்பட்டார்கள்

முதலாவதாக, மூடன் 'நாள்தோறும் ஆற்றுக்குச் சென்று வேண்டிய நீரெல்லாங் கொண்டு வரவும்,

காட்டிற்குச் சென்று, வேண்டிய எரி துரும்பு தேடிக் கொடுக்கவும்'' எனக்கு வேலையாய் உள்ளது; இந்நிலையில், நான் எவ்வாறு அடைகாப்பது?' என்றான். இரண்டாவதாக, மூர்க்கன் "நான் இரவு பகலென்று நோக்காது எப்பொழுதும் மடைப் பள்ளியில் பத்து பேருக்குச் சோறு ஆக்கவும், பலவித பண்டங்களைச் செய்யவும், அவற்றைப் பாதுகாக்கவும் அடுப்படியிலேயே கிடந்து உழலுபவ னல்லவா? என்றால் அது ஆகுமா?' என்றான். மூன்றாவதாக, மிலேச்சன் "நான் புலருமுன் எழுந்து ஆற்றுக்குப் போய், என்னுடைய காலைக் கடன்களை முடித்துக் கொண்டு, நந்தவனம் சென்று, நாளரும்புகள் எடுத்துப் புதிய புதிய மாலைகள் தொடுத்துத் தேவ வழிபாட்டுக்கு வேண்டிய தொண்டு செய்ய வேண்டும். நான் எவ்வாறு அடைகாப்பது?'' என்றான்.

இவ்வாறு, மூன்று சீடர்கள் கூறுவதையும் கேட்ட குருவானவர், 'இவைகளெல்லாம் என்றும் உள்ளது தானே: முட்டை வாங்கப் போன மற்ற இரண்டு சீடர்களாலேயும் ஆகாது; அவ்விருவருள் மட்டியோ, மடத்தில் வரும் புதியரைக் கவனிக்கவும், வழக்குக் களைக் கவனிக்கவும் தொடங்கி விடுவான். அதுவே அவனுக்குப் பெரிய வேலையாயுள்ளது. மடையனோ ஏவிய சிறு வேலையைச் செய்பவன். ஆகையால் உங்கள் ஒருவருக்கும் ஒழிவு கிடையாது; நான் ஒருவனே இங்குச் சும்மா இருக்கிறேன். நானே அவர்கள் கொண்டு வரும் முட்டையைக் கண்ணுங் கருத்துமாக இருந்து அடை காக்கிறேன். எப்படியாவது முட்டை பரிபவப்பட்டுக் குதிரையைக் கண்டால் போதும்' என்று குருவானவர் கூறினார். 'மேலும் இன்பத்தை

அனுபவிக்கப் போகும் நாம் துன்பத்தை எண்ணக் கூடாது' என்ருர்.

இத்தகைய ஆலோசனை மடத்திலே நடக்கும் போது. இரவு மூன்ரும் யாமத்தில் ஒருவருக்குந் தெரியாமல் மட்டியும், மடையனும் புறப்பட்டார்கள். அவர்கள் இருவரும் இரண்டரை காவதத்திற் கப்பாலுள்ள ஏரிக் கரையை அடைந்தார்கள். அங்குக் கொல்லைக்குக் காவலாக இருந்த குடியானவனை அணுகி, ஐயா! "இந்தக் குதிரை முட்டைகளில் எங்கட்கு நல்லதாக ஒரு முட்டை அவசியம் விலைக்குத் தர வேண்டும்" என்று கெஞ்சிக் கேட்டார்கள். குடியானவன் இவர்களது மூடத்தனத்தைக் கண்டுகொண்டான். "ஐயா, இந்த உத்தம ஜாதிக் குதிரை முட்டையை நீங்கள் விலைகொடுத்து வாங்கத் தக்கவர்களா? இது அதிக விலை பெற்றதாகும்?" என்று கூறினன். "என்ன ஐயா? இதன் விலை ஐந்து பொன் தானே; நாங்கள் என்ன ஒன்றுந் தெரியாதவர்களா?" என்று தங்கள் அறியாமையை அவனிடம் காட்டிக் கொண்டார்கள்.

குடியானவன் அவர்கள் இருவரிடமும் ஐந்து பொன்னை வாங்கிக் கொண்டு, "ஐயா! உங்கட்கு வேண்டிய முட்டையை எடுத்துச் செல்லுங்கள்; ஆனல் இந்தக் குறைந்த விலையை யாரிடமும் வெளியிடாதீர்கள்", என்ருன். "அதைப்பற்றி எங்கட்கென்ன?", என்று கூறி, தங்கட்குப் பிடித்தமான ஒரு பெரிய முட்டையைத் தேர்ந்தெடுத்துக் கொண்டு, பொழுது புலருவதற்கு முன் மட்டி தலைமேல் முட்டையை எடுத்து வைத்து வழி நடக்கலானர்கள்.

வழிநடை இளைப்பு உண்டாகாதிருக்க மட்டி பின் வருமாறு கூறத்தொடங்கினன். "பெரியோர்கள் தவ வலிமையால் எல்லாங் கைகூடும் என்று சொல்வார்கள்; அதற்குச் சான்று இப்பொழுது நாம் கண் கூடாகக் கண்டோம்; நம் குருநாதர் தவ வலிமை இதுதான்: நூறு நூற்றைம்பது பொன் மதிப்பிடக் கூடிய ஜாதிக் குதிரையை, எவ்வளவு சுலபமாக ஐந்து பொன்னுக்குப் பெற்றுக் கொண்டு வருகிறேம்" பார் என்றான். மடையன் "நண்பனே! இதிலே ஆலோசனை ஏன்? "பண்ணிய பயிரில் புண்ணியம் தெரியும்" என்று முன்னேர்கள் சொல்வதை நீ கேட்க வில்லையா? நமது குருவானவர் உண்மையில் புண்ணியஞ் செய்தவர் என்பது, அவருக்கு இப்பொழுது கிடைத்துள்ள குதிரையைக் கொண்டே "உள்ளங்கை நெல்லிக்கனி போல்" விளங்குகிறதே" என்றான். அதற்கு மட்டி "ஆம் நல்வினை நன்மையைத்தான் தரும்; தீவினை தீமையைத்தான் தரும்" என்றான்.

இப்படி மன மகிழ்வுடன் பேசிக்கொண்டே வெகு தூரம் நடந்து ஒரு சுருங்கை வழியிற் செல்லும்போது, அவ்வழியருகில் சாய்ந்திருந்த மரத்தின் கொம்பு குறுக்கே பட்டு, மட்டி தலையிலிருந்த சாம்பற் பூசனிக்காய் தவறிக் கல்லில் விழுந்து இரு பிளவாயிற்று. அப்போது அவ்விடத்தில் புதரில் பதுங்கியிருந்த முயல் அதிர்ச்சி யுற்று ஓடிற்று. அது கண்டு "இதோ முட்டைக்குள் இருந்த குட்டிப்பரி ஓடுகிறது" என்று கூக்குரலிட்டுக் கொண்டு இருவரும் அதைப்பற்றிப் பிடிக்கப் பின்தொடர்ந்தார்கள். பின் தொடர்ந்த இருவரும், காடு, செடி, மேடு, பள்ளம்,

கரடுமுறடு, முள்முறடு பாராமல் ஓடவே, ஆடை கிழிய, உடலெல்லாம் முள் கிழித்து உதிரம் ஊற்றெடுத்தோட, நெஞ்சு பதை பதைக்க, நாக்கு வரளப் பெருமூச்சு வாங்க ஓடியும், முயல் அகப்படாமல் அவர்கள் தாகத்தால் தவித்துத் தடுக்கி விழுந்தார்கள். இதற்குள்ளாக முயல் கண்ணுக்குத் தெரியாத தூரத்தில் ஓடி மறைந்தது. அவர்கள் தங்கள் இளைப்பைப் பாராமல் நாள் முழுவதும் பட்டினியுடன் கிடந்து பகல் கழிந்த பின்பு மடத்துக்குச் சென்றார்கள்.

இருவரும் மடத்து வாசலில் நுழையும்போது, "அட அப்பா! அட அப்பா!" என்று கூக்குரலிட்டுக் கொண்டு கீழே விழுந்தார்கள், உள்ளே இருந்தவர்கள் அச்சமுற்று ஓடி வந்து, என்னவென்று கேட்க, நடந்தவைகளை விளக்கமாகக் கூறினார்கள். மட்டி என்பவன் மற்றவர்களைப் பார்த்து, 'நான் பிறந்தது முதல் இதுமாதிரி குதிரையைக் கண்டதேயில்லை. இக்குதிரை கறுப்புப் பாய்ந்த சாம்பல் நிறமுள்ளதாய், உயரத்திலும் பருமனிலும் முயலை ஒத்ததாய், ஒரு முழ நீளமுள்ளதாய், இரு செவியையும் விரித்துக் கொண்டு குறுவாலைத் தூக்கி, ஓடின சுறுக்கும் வேகமும் சொல்லவும் நினைக்கவும் கூடாது'' என்றான். அதுகேட்டு மற்றவர்கள் மனம் வருந்தினார்கள். குருவானவர் அவர்களைத் தேற்றி "**கூண்டோடு போச்சுது குளிரும் காய்ச்சலும்**'' என்பது போல 'ஐந்து பொன் போனதோடு, குதிரைக் குட்டியும் போய்விட்டதே; எல்லாம் நன்மைக்கே' என்றார். 'மேலும் குட்டியாயிருக்கும்போதே இவ்வளவு கடுமையாய் ஓடிய அது, வளர்ந்து பெரிதாகி விட்டால் பறந்தாலும் பறக்கும். அச்சமின்றித் திட சித்தத்துடன் அதன்மேல் யார்

ஏறுவது? கிழவனுகிய எனக்கு, வாயு வேகத்தில் செல்லும் அக்குதிரை பணச் செலவில்லாமல் சும்மா இலவசமாகக் கிடைத்தாலும் வேண்டாம்' என்ருர்.

அருஞ்சொற்பொருள்:

கடிந்து - கோபித்து, புலர்ந்ததும் – விடிந்ததும், நொந்து – வருந்தி, கோளிகைக் குதிரை - பெண்கழுதை, பருமன் - பெரிது, காலகரணம்-காலதாமதம், பிணங்காமல் – சண்டையில்லாமல், நாளரும்பு - அன்று பூத்த மலர், பரிபவம் - பக்குவம், காவதம்-பத்துமைல், சுருங்கைவழி - குறுகிய வழி, செவி - காது,

விஞக்கள்:

1 அவிவேக பூரண குருவின் ஐந்து சீடர்கள் யார்?

2 மட்டி குதிரை முட்டையை எங்கு எவ்வாறு கண்டான்?

3 குதிரை முட்டையைக் கண்ட திறத்தை மட்டி எவ்வாறு குருவினிடம் கூறினன்

4 அடைகாக்க முடியாமைக்கு முதல் இரண்டு சீடர்கள் கூறிய காரணங்கள் யாவை?

5 முட்டை வாங்கச் சென்ற சீடர்களால் அடைகாக்க முடியாதென்பதற்குக் குரு காட்டிய காரணங்கள் யாவை?

6 குடியானவன் சீடர்களின் மூடத்தனத்தை எவ்வாறு உணர்ந்தான்

கட்டுரையாக்கம்

1 குரு, சீடர் தன்மைகளை விளக்கி உன் நண்பனுக்கு 20-வரியில் ஒரு கடிதம் எழுதுக

2 இந்தப்பாடத்தின் பொருளைச் சுருக்கி ஒரு பக்கத்தில் ஒரு கட்டுரை எழுக

மொழிப் பயிற்சி

1 இப் பாடத்திலிருந்து கட்டளை வாக்கியம், செய்தி வாக்கியம், உணர்ச்சி வாக்கியம் இவைகட்கு ஒவ்வோர் உதாரணம் எழுதுக.

2 தன்னுடைய, பசுவானது, கட்டியபடி, சாரும்பொழுது, அருகில் சென்றேன்— இச்சொற்களை அமைத்துச். சொந்த வாக்கியங்கள் எழுதுக.

கீழ்க்கண்ட வாக்கியங்களின் எழுவாய் பயனிலைகளை எழுதுக :

1 நாலைந்து கோளிகைக் குதிரைகள் மேய்ந்து கொண்டிருப்பதைக் கண்டேன்

2 அவர்கள் கொண்டுவரும் முட்டைகளைக் கண்ணுங் கருத்துமாக இருந்து அடைகாக்கிறேன்.

## 9. புலவரும் புரவலரும்

புலவர்கள், வண்மைக் குணம் உடைய பெருஞ் செல்வர்களையும், அரசர்களையும் அடுத்து அறமுரைக் கும் தமிழ்ப் பாக்கள் கூறி அன்னோர் வழங்கும் பெரும் பொருள் கொண்டு வாழும் இயல்பினர். தம்மைப் போற்றுபவர் என்பதற்காகப் பழந் தமிழ்ப் புலவர்கள் தம்மான உணர்வு குன்றும் வகையில் வள்ளல்களிடம் நடந்து கொள்வதில்லை. புரவலர்களாகிய அரசர்களும், தம்மால் போற்றப்படுபவர் தாமே எனப் புலவர்களை எளிமையாக எண்ணி நடத்துவதில்லை. புலவர்கள் தம்மோடு வாழ்தலையே பெருவாழ்வாகக் கருதி அரசர் கள் அவர்களைப் போற்றி வந்தனர். புலவர்களும் அறநெறி நிறுத்தும் தமிழ்ச் செய்யுள்கள் இயற்று வதோடு அமையார். அரசர்களுக்கு அரசியற் காரியங் களிலும் வேறு துறைகளிலும் தம்மால் இயன்ற பல்வகை உதவிகளையும் புரிந்து வந்தனர். பின்வரும் வரலாற்று நிகழ்ச்சியால் இவ்வுண்மை தெளிவுபடும்.

கடையெழு வள்ளல்களுள் ஒருவனாகிய பாரி என்பான் பறம்பு மலைக்கும் அதனைச் சூழ்ந்துள்ள முந்நூறு ஊர்களுக்குந் தலைவனாக விளங்கினான். 'ஊர் நடுவே பழுத்த பழுமரம்' போல இவனது பெருஞ் செல்வம் புலவர், இரவலர் முதலிய பலதிறப்பட் டோர்க்கும் பெரிதும் பயன்பட்டது. முடியுடை மூவேந்தரும் அழுக்காறு கொள்ளும் வண்ணம் பாரி பெரு வள்ளலாகத் திகழ்ந்தான். "**கொடுக்கிலாதானைப் பாரியே என்று கூறினுங் கொடுப்பாரிலை**" என்று சுந்தர

மூர்த்தி சுவாமிகளே இவனைப் புகழ்ந்து பாராட்டுவரேல் இவனது கொடைச் சிறப்பினை என்னென்று இயம்புவது!

இப்பாரி, ஒருசமயம் தன் காட்டு வளங்களைக் கண்டுவரத் தேர்மீது இவர்ந்து சென்றான். காட்டின் வழியே தேர் சென்று கொண்டிருக்கும் பொழுது கொழுகொம் பில்லாது படர்ந்து நின்ற முல்லைக் கொடி யொன்று காற்றால் அசைந்து இவனது தேரைத் தொட்டது. பாரி இதனைக் கண்டனன். 'இம்முல்லைக் கொடி தான் ஏறிப் படர்வதற்கு என் தேரைக் கொடுத்துதவ வேண்டுகிறது' எனக் கருதினான். உடன், தேரிலிருந்து இறங்கினான்; குதிரையைக் கட்ட விழ்த்து விட்டான். பாரி அம் முல்லைக் கொடிக்குக் கொழு கொம்பாக அமையத் தேரை அவண் நிறுத்தித் தன் கால் நோவ நெடுவழி நடந்து தன் ஊர் வந்து சேர்ந்தனன்.

மற்றொரு சமயம் பாரி தன்னைப் பாடி வந்த பரிசிலர்க்குத் தன் முந்நூறு ஊர்களையும் பரிசாக வழங்கினான். இறுதியில் வளம் மிக்க பறம்பு மலை யொன்றே பாரிக்கு உரியதா யிருந்தது.

பாரியின் புகழ் எங்கும் பரவியது. பாரியின் பெரும் புகழாகிய இரவி முன் தாம் மின்மினி யாதலை யுணர்ந்து முடியுடை மூவேந்தரும் வேறு பல சிற்ற ரசர்களும் பொறாமை யுற்றனர். பாரியை வெல்லக் கருதி அவர்கள் பெரும் படையைத் திரட்டிக் கொண்டு சென்று பறம்பு மலையை முற்றுகை யிட்டனர். பாரியும், பறம்பு மலையில் வாழும் மக்களும் முற்றுகை யினால் உணவின்றி வருந்தித் தம் வயப்படுவர் என்பது

அவ்வரசர்களின் எண்ணம். ஆனல் அவர்களது எண்ணங்கள் எல்லாம் பாழாயின! பறம்பு மலை வற்றாத வளம் உடையது. ஆதலால் மூங்கில் நெல், பலாப்பழம், வள்ளிக் கிழங்கு, தேன் முதலிய பொருள்களை விளைந்து கொடுத்தது. பாரியின் நண்பரும், பெரும் புலவருமாகிய கபிலர் பழக்கி யிருந்த கிளிகள் பறம்பு மலைக்கு அயலே இருந்த வயல்களிற் சென்று நெற் கதிர்களைக் கொய்து கொண்டு வந்து சேர்த்தன. இவற்றால் பறம்பு மலையி லுள்ளார்க்கு உணவின்மையாலாய மெலிவு ஏற்படாதிருந்தது. எனவே, அவ்வரசர்கள் நீண்டநாள் முற்றுகை யிட்டிருந்தும் பாரியை வெல்லக் கூடவில்லை.

தமது எண்ணம் நிறைவேறாது ஒழிதலை அறிந்த அம் மூவேந்தரும், பாரி தன் மகளிரைத் தமக்கு மணம் செய்து கொடுப்பின் தாம் போர் புரிவதைத் தவிர்ப்பதாகவும் கூறி விடுத்தனர். இவ்விழி மொழிகளைக் கேட்ட பெரு வீரனாகிய பாரி வெகுண்டெழுந்தான்.

பாரியின் நண்பரான கபிலர், மூவேந்தர் முன் சென்று பின்வருமாறு கூறினர் :—

"பெரும் படைகளையுடைய நீங்கள் எத்துணைக் காலம் முற்றுகையிடினும் இம் மலையை உங்களால் கைப்பற்ற இயலாது. இம்மலையின் வளப்பத்தால் இந் நாட்டில் வாழ்வார் தமக்கு வேண்டும் உணவைக் குறைவின்றி எளிதில் பெறுகின்றனர். உமது வாள் வலியால் பாரியை வெல்லக் கருதுதல் பயனற்ற செயலே; பறம்பு மலையை நீங்களடைய ஒரு வழி கூறுகிறேன். பாரி, பரிசிலர்க்கு இரங்கி ஈத்துவக்கும் பெரு வாழ்வினை

யுடையவன்; உங்களது மனைவியர் பின்னே வர நீங்கள் யாழை வாசித்துப் பாடிக் கொண்டும், ஆடிக் கொண்டும் பாரிபால் செல்வீர்களாயின் அவன் உங்களுக்கு நாட்டை யும் மலையையும் கொடுப்பான்." இவ்வாறு பாரியின் படை வலியையும், இரவலர்க்கு இரங்கு மியல்பையும் கபிலர் எடுத்துக் கூறினர்.

மூவேந்தர்களும் பாரியைப் படை வலியால் வெல்லுதல் இயலாது என்பதை யறிந்து பின் வாங்கி னர். வஞ்சனையால் பாரியைக் கொல்ல அவர்கள் சூழ்ச்சி செய்தனர். இரவலர்கள் போல் அரண்மனை யினுள் நுழைந்து மாரியனைய பெருங் கொடை வள்ளல் பாரியைக் கொன்றனர். மக்கள் புலம்பி யழுதனர்; புல வர்கள் இரங்கினர்; பாரியின் உயிர்த் தோழராய கபில ரின் நிலையைச் சொல்லவும் வேண்டுமோ? பாரியின் வேண்டுகோளை மறுக்க மாட்டாதவராய் உயிர் தாங்கி இருந்தார்!

பாரி இறந்த பின்னர் அங்கிருந்து வாழக் கபிலர் உளம் பொருதவர் ஆனர். பாரியின் மகளிர் இருவரை யும் தகுந்த இடத்தில் வாழ்க்கைப் படுத்த எண்ணினர். அறிவும், அழகும் நிறைந்த அப்பெண்களை அழைத்துக் கொண்டு பறம்பு நாட்டை விட்டகன்றார்.

பல நாடுகளையும் கடந்து, கபிலர் பாரி மகளிரோடு திருக்கோவிலூரை யடைந்தார். தம் நண்பனும், கடை யெழு வள்ளல்களுள் ஒருவனுமாகிய **திரு முடிக்காரியின்** வழியில் வந்த மன்னர்க்குப் பாரியின் மகளிரை அளித் துப் பல்வகைச் சிறப்புகளோடு திருமணம் செய்து வைத்தனர்.

கபிலர், பாரியின் பிரிவுத் துன்பத்தை இனியும் பொறுக்க ஆற்றுதவ ராஞர். பெண்ணை யாற்றின் மணற் பரப்பிலே அமர்ந்து பாரியை நினைந்து 'இப்பிறப் பில் நாமிருவரும் கூடி இன்புற்றது போல மறுமை யிலும் உன்னேடு கூடி வாழ்தலை விதி எனக்குக் கூட்டுவ தாக!' என்று கூறி வடக்கிருந்து உயிர் துறந்தனர்.

இப்புலவர் பெருமானது திருவுருவைக் கல்லிலே சமைத்து மக்கள் இப்பொழுது வழிபட்டு வருகின்றனர்.



அருஞ் சொற் பொருள் :

வண்மைக்குணம் - கொடுக்குங்குணம்; அடுத்து - நெருங்கி. குன்றும் - குறையும்; எளிமையாக - தாழ்வுபட; பழுமரம் - பழங்களை மிகுதியாகக் கொண்ட மரம்; அழுக்காறு - பொறாமை; இவர்தல் - அமர்தல்; நோவ - வருந்த; இரவி — சூரியன்; வற்ருத - குறையாத; தவிர்ப்பது - விட்டுவிடுவது; வெகுண்டு - கோபித்து; ஈந்துவக்கும் - கொடுத்து மகிழும்; இரவலர் — யாசகர்.

1. விஞக்கள்:

1. பழந்தமிழ்ப் புலவர்கட்கும், புரவலர்கட்கும் இருந்து வந்த தொடர்பின் சிறப் பியல்பைப் புலப்படுத்துக.

2. பாரியின் கொடைச் சிறப்பு குறித்து நீவிர் அறிவது என்ன?

3. பறம்பு மலையை முற்றுகை யிட்டோர் யாவர்? முற்றுகைக்குக் காரணம் யாது?

4. 'ஊர் நடுவே பழுத்த பழுமரம்'; 'இரவி முன் மின்மினி' இப்பழமொழி எடுத்தாளப்பட்ட இடஞ்சுட்டி விளக்குக.

5. மூவேந்தர்களும் பறம்பு மலையைக் கைப்பற்றிக் கொள்ள இயலாது போனமைக்குக் காரணம் யாது?

6. முற்றுகையிட்ட வேந்தர்களைக் குறித்துக் கபிலர் கூறிய உரைகள் யாவை?

7. மூவேந்தர்களும் பாரியைக் கொல்ல மேற்கொண்ட செயல் யாது?

8. பாரி இறந்த பின்னர் கபிலர் என்ன செய்தார்?

9. கபிலரின் குண நலத்தைப் புலப்படுத்துக.

2. கட்டுரை யாக்கம்

கீழே கொடுக்கப்பட்டுள்ள தலைப்புகள் ஒவ்வொன்றையுங் குறித்து 20 வரிகளுக்கு மேற்படாமல் கட்டுரை வரைக:—

1. பாரியின் கொடைத் திறம்.

2. கபிலர் பாரியிடம் கொண்ட நட்பின் பண்பு.

3. பாரியினிடத்து அழுக்காறு கொண்ட மூவேந்தரது செயல்கள்.

3. மொழிப் பயிற்சி :

1. எதிர்ச்சொல் கூறுக:—

வழங்கு, அமைவர், பாராட்டு, அவண், மெலிவு, இரங்கினன், கூட்டுவது, பிரிவுத்துன்பம்.

2. உமது வாக்கியங்களில் அமைத்து எழுதுக:—

வண்மைக்குணம், எளிமையாக எண்ணி, அறநெறி நிறுத்தினர், ஊர் நடுவே பழுத்த மரம் போல, இரவலர், அழுக்காறு, இவர்ந்து செல், கட்டவிழ்த்து, கால் நோவ, தம் வயப்படுவர், நிறைவேறுதொழிதல், வெகுண்டெழுந்தான், குறைவின்றி, ஈத்து வந்தான்.

3. பிரித்துக் காட்டுக:—

அறமுரைக்கும், சூழ்ந்துள்ள, மூந்நூறு, அரசியற் காரியம், கொடுத்துதவ, இவ்விழி மொழி, வெகுண் டெழு, ஈத்துவக்கும்.

4. குறித்தபடி வாக்கியங்களை மாற்றுக:—

(அ) புலவர்கள் வண்மைக் குணம் உடைய பெருஞ் செல்வர்களையும் அடுத்து, அறமுரைக்கும் தமிழ்ப்பாக்கள் கூறி, அன்னோர் வழங்கும் பெரும்பொருள் கொண்டு வாழும் இயல்பினர்.

(தனி வாக்கியங்களாக)

(ஆ) சுந்தரமூர்த்தி சுவாமிகளே இவனைப் புகழ்ந்து பாராட்டுவரேல் இவனது கொடைச் சிறப்பினை என்னென் றியம்புவது. (இஃது என்ன வாக்கியம்? செய்தி வாக்கியமாக மாற்றுக)

(இ) இவ்விழிமொழிகளைக் கேட்ட பெரு வீரனாகிய பாரி வெகுண்டெழுந்தான். 'இழிமொழிகள்' என்று வாக்கியத்தைத் தொடங்குக

---

## 10. இன்பச் செலவு

(நண்பனுக்குக் கடிதம்)

51, மேல வீதி,
திருவிடைமருதூர்.
10—10—51.

அன்பு நிறைந்த சண்முகத்துக்கு,

நலம். நலமே வேண்டுகிறேன். நான் செஞ்சிக் கோட்டைக்கு வந்தது முதல், சென்ற ஒருவார காலமாகப் பொழுதை மிகவும் இன்பமாகக் கழித்து வருகிறேன். 3—10—51 இரவு திருவிடைமருதூரை விட்டுப் புறப்பட்ட யான் மறுநாள் காலை 6-30 மணிக்குத் திண்டிவனம் சென்று பஸ் வழியாகச் செஞ்சியை அடைந்தேன். நான் முன்னரே செய்திருந்த ஏற்பாட்டின்படி செஞ்சி போர்டு உயர்நிலைப் பள்ளிக்குச் சென்றேன். அப்பள்ளித் தலைமை ஆசிரியர் எனக்கு வேண்டிய சௌகரியங்களைச் செய்து கொடுத்தார். நான் காலைக் கடன்களை முடித்துக்கொண்டு சிற்றுண்டி அருந்தியபின், அப்பள்ளி ஆசிரியர் ஒருவரின் உறுதுணையுடன் செஞ்சிக் கோட்டையின் அமைப்பைக் காண முற்பட்டேன். அவற்றையே விளக்கி இக்கடிதத்தில் உனக்கு எழுதுகின்றேன்.

தமிழ் நாட்டின் பழங்காலக் கோட்டைகளுள் செஞ்சிக்கோட்டையும் ஒன்று. இக்கோட்டை தென்னார்க்காடு ஜில்லாவைச் சார்ந்த செஞ்சியாற்றின் மேற்குக் கரையில் ஒரு மைல் தூரத்தில் இருக்கிறது. இவ்வாற்றுக்கு வராக நதி என்ற வேறு பெயரும் உண்டு. இவ்வாற்றின் அழகைக் கண்டு வியந்து நானும்

என்னுடன் வந்த நண்பருமாகக் கோட்டைக்குள் சென்றேம்.

இக்கோட்டை ஆய்த வெழுத்தைப் போன்று முக் கோணமாக அமைந்துள்ள மூன்று சிறு குன்றுகளா லமைக்கப்பட்டுள்ளது. இம்மூன்று குன்றுகளையும் வலிய கருங்கற்களால் சுவரெடுத்து இணைத்துக் கட்டியுள்ளார்கள். இச்சுவர்கள் சுமார் 30 அடி அகலமும், 20 முதல் 25 அடி உயரமும் இருக்கலாம் என்று எண்ணினேன். இம்மதிலின் பக்கத்தே ஆழ்ந் தகன்ற அகழி ஒன்று காணப்படுகிறது. இச்சுவர்கள் குன்றுகள் இவற்றுக் கிடையில் உள்ள பரந்தவெளி ஆகிய இவைகளே **கீழ்க்கோட்டை** என்னும் பெயர் பெறுவது. இக்கோட்டைக்கு வடக்கும் கிழக்குமாக இரண்டு வாயில்கள் இருக்கின்றன. இவைகளை முறையே **ஆர்க்காட்டு வாயில்** என்றும் **புதுச்சேரி வாயில்** என்றும் அவ்வூர் மக்கள் வழங்கி வருகிறுர்கள் என்று என்னுடன் வந்த அன்பர் சொன்னுர்.

மேலே கூறப்பட்ட மூன்று குன்றுகளுள் ஒவ்வொன்றிற்கும் தனித்தனியாகவும் கற் சுவர்கள் எடுத்து அரண்கள் அமைக்கப்பட்டுள்ளன. தஞ்சைக் கோட்டையின் செயற்கை அரணைப் பார்த்த எனக்கு இவ்வியற்கை யரண் பெரும் வியப்பையே கொடுத்தது. இன்று வரை வந்து பார்க்காததன் குறைபாட்டை மனத்துள் எண்ணி வருந்தினேன். இவற்றுள் வடக்கே இருக்கும் ஆர்க்காட்டு வாயிலைச் சார்ந்த குன்றுக்கு **கிருஷ்ணகிரி** என்று பெயர். அதன் மேலிடத்தை அடைய முன்பு சொன்ன கீழ்க்கோட்டையில் இருந்து படிகள் அமைக்கப் பெற்றுள்ளன. தெற்கே யிருக்கும்

குன்று **சந்திராயன் துர்க்கம்** ஆகும். **இராசகிரி** என்னும் குன்று மேற்கே அமைந்துள்ளது. இராசகிரியே இம்மூன்று குன்றுகளிலும் சிறப்பாகக் காணவேண்டிய குன்று. இது கடல் மட்டத்திற்கு மேல் சுமார் 1000 அடியும், குன்றின் அடித்தலத்திலிருந்து 900 அடியும் உயரமிருக்கலாம்.

இவைகளே யன்றிக் கீழ்க் கோட்டையின் உள்ளிடத்தே இராசகிரியின் அடிவாரத்தை யொட்டி சிறு கோட்டை ஒன்று உளது. அது அரைவட்ட வடிவமாக அமைந்துள்ளது. அக்கோட்டைக்கும் தனியே மதிற் சுவர்களும் காணப்படுகின்றன. இது கீழ்க் கோட்டையின் உள்ளே இருப்பதால் இதனை உட் கோட்டை என்று வழங்குகிறார்கள். இராசகிரிக் கோட்டை வாயிலை இந்த உட்கோட்டை வழியாகத் தான் அடைய வேண்டும்.

இராசகிரிக் குன்றின் அமைப்பு இங்குள்ள யாவற்றினும் மிகச் சிறந்தது. இதற்கு வாயில் உட் கோட்டையில் கிழக்கு நோக்கி உளது. அவ்வாயிலிலிருந்து வரிசையாக அமைக்கப்பட்டுள்ள சுவர்களிடையே மேலேறிச் செல்லப் படிகள் அமைக்கப்பட்டுள்ளன. இப்படிகளின் மூலமாகக் குன்றின் பாதி உயரம் கடந்து விட்டால், சமநிலம் சிறிது காணப்படுகிறது. அச் சமநிலத்தில் சில மரங்களும், புற்றரைகளும் கண்டு மகிழக் கூடிய நிலையில் உள்ளது. இதற்குமேல் உச்சிக்குப் போவதென்றால் கொஞ்சம் சிரமமே. காரணம் மலை செங்குத்தா யிருப்பதே வளைவான பாதையில் சிரமப்பட்டு மேல் புறமாய்ச் சென்று பின்னர் வடபுறம் உயரே சென்ற இந்தப் பாதை

யும் சமதளமான ஒரு பாறையில் முடிகின்றது. இந்தப் பாறைக்கும் இராசகிரியின் உச்சிக்கும் இடையில் சுமார் 40 அடி அகல பிளவு அடிவரை காண்கின்றது.



ராஜகிரிக் கோட்டை

இப்பிளவினை அக்காலத்தில் இருப்புப் பாலத்தின்மூலம் கடந்துள்ளார்கள். ஆனால் இப்பொழுது நிலையான மரப்பாலம் அமைத்து விட்டார்கள். அதைக் கடந்தால் இராசகிரியின் உச்சியிலுள்ள கோட்டை வாயிலை அடையலாம். இக்கோட்டை வாயிலைத் தாண்டிய வுடன், நான் கண்டது ஏறத்தாழச் சமமாக உள்ள இராசகிரியின் சிகரமே.

அடுத்து நான் என்னுடன் வந்த அன்பருடன் கிருஷ்ணகிரிக் கோட்டையை அடைந்தேன். கிருஷ்ண கிரிக் கோட்டை இராசகிரியைப் போன்று அவ்வளவு கஷ்டத்தையும், பயத்தையும் கொடுக்கவில்லை. அதன்

உச்சியில் கருங்கல்லால் கட்டிய இரண்டு தானியக் களஞ்சியங்களும், ஒரு மண்டபமும், விக்கிரகம் இல்லாத அரங்கநாதர் ஆலயமும், செங்கல்லால் கட்டப்பட்ட கொலு மண்டபமுமே இன்று காணக்கூடிய சின்னங் களாயுள்ளன. ஆனால் இவையாவும் சிலமாகிக் காணப் படுகின்றன. கொலு மண்டபம் காணவேண்டியதே. அன்றியும் கிருஷ்ணகிரியில் ஒரு சுனை இருக்கிறது. அதன் நீர் பருகுதற்கு எளிதாயுளது. சந்திராயன் துர்க்கத்தின் மீது ஒரு மண்டபம் மட்டுமே இருக்கிறது. அம்மண்டப அமைப்பைக் கீழிருந்தே பார்த்து விட்டோம்.




கிருஷ்ணகிரிக் கோட்டை

இனி இராசகிரியில் பார்க்கவேண்டிய இடங்கள் எவை என்பதை விளக்குகிறேன். இராசகிரியின் உச்சி யிலும் விக்கிரகமில்லாத அரங்கநாதர் ஆலயம் ஒன்றுண்டு.

கோயில் நல்ல வேலைப்பாடு உடையது. மேலும் அங்கு, இரண்டு பெரிய தானியக் களஞ்சியங்களும், நிலவறையோடு கூடிய நிதிச்சாலை ஒன்றும், மணிக் கூண்டை



கல்யாண மஹால்

ஒத்த கொடித் தம்பம் அமைந்த கல்யாண மஹாலும் பார்க்கவேண்டிய இடங்கள். கிருஷ்ணகிரியைப் போன்று இங்கும் இரண்டு நீர்ச் சுனைகள் இருக்கின்றன.

இச்சுனைகளில் என்றும் நீர் வற்றுவதில்லை என்று கூறு கிறார்கள்.

நடுவிலுள்ள பீடபூமிப் பகுதியில் கிராம தேவதை யெனவழங்கும் கமலக்கன்னி அம்மன் கோவில் இருக் கின்றது. கமலக்கன்னி கோவிலுக் கெதிரே, ஒரு சிறுவழி செல்லுகிறது. அவ்வழியே சுமார் 50 கஜ தூரம் சென்றால் ஒரு சுனை உள்ளது. அச்சுனையைப் பார்த்துத் தரைமட்டத்தை அடைந்தோம்.

இதனை அடுத்து நாங்கள் கண்ட இடம் சிலம்ப மண்டபமாம். சிலம்ப மண்டபத்தைச் சார்ந்து அரசன், அரசியர் குளிக்கும் மண்டபங்கள் இருந்தன என்று என்னுடன் வந்த நண்பர் கூறினார். அதனை யடுத்துப் போர் வீரர் விடுதிகளையும், கலியாண மகாலையும் எனக்குக் காட்டினார். அங்கிருந்து திரும்பும் போது. சக்கரக் குளம், செட்டிக் குளம், அனுமார் விக்கிரகம் இவைகளைக் கண்டு களித்தோம். செட்டிகுளத்தின் வட கரையில் உள்ள ஒரு மேடையைக் காட்டி, அதுதான் தேசிங்கின் உடல் கொளுத்தப்பட்ட இடம் என்றார்.

முன்பு நாமிருவரும் புதுச்சேரிக்குச் சென்ற பொழுது கடற்கரை யருகில் டூப்ளே சிலையின்முன் நாட்டப்பட்டுள்ள ஒற்றைக்கால் ஸ்தம்பங்களைப் பார்த்தோமல்லவா? அது உன் நினைவிலிருக்கும் என்று எண்ணுகின்றேன். அந்த ஸ்தம்பங்கள் செஞ்சிக் கோட்டையிலிருந்து கொண்டுவரப் பட்டது என்று அப்பொழுது உனக்குக் கூறினே னல்லவா? அக்கோயில் உள்ள இடம் எது என்று அவரை வினவினேன். அன்பரும் அவ்விடத்தைத் தான் காணப்போகின்றோம் என்று கூறினார். சந்திராயன் துர்க்கத்துக்கு அருகில்

உள்ள வேங்கடரமணசுவாமி கோயிலே அந்த இடம் என்று கூறினர். அதுவும் பெரிய கோயிலாகவே காணப்பட்டது. சிதைவுற்ற நிலையிலும் மிக்க வேலைப் பாடுடையதாகவே இருந்தது. அதனை அடுத்துப் பட்டாபிராம சுவாமி கோவிலும், அதன் எதிரே ஒரு பாழ்மண்டபமும் காணப்பட்டன. அவைகளும் உயர்ந்த வேலைப்பாடுடையனவாகவே காணப்பட்டன.

இவைகளை யெல்லாம் கண்டு குறிப்பெடுத்துக் கொண்டு தங்கும் இடம் வந்து சேர்ந்தோம். பின் உணவு உட்கொண்டு ஓய்வு எடுத்துக் கொண்டேன். மாலை ஆனதும் அவ்வன்பரும் வந்தார். கோட்டையைப் பற்றிய வரலாற்றுச் செய்திகளைப் பற்றி அவருடன் அளவளாவினேன். அவர் கூறியவற்றை அவ்வாறே உனக்கும் எழுதுகின்றேன்.

செஞ்சிக் கோட்டையைப் பற்றி கி. பி 15-ம் நூற்றுண்டுக்கு முற்பட்ட வரலாறு ஒன்றும் தெரியவில்லை. அதற்குப் பிற்பட்ட வரலாறே கிடைக்கின்றது என்று அவ்வன்பர் கூறினர். கி. பி 16-ம் நூற்றுண்டில் விஜயநகர மன்னர்கள் தமிழகத்தில் தங்கள் ஆட்சியைச் செலுத்திய காலத்து இக் கோட்டை அவர்களால் கட்டப்பட்டது. பிறகு இக் கோட்டை முகம்மதியர் ஆட்சிக்கு வந்தது. முகம்மதியர் ஆட்சிக்கு வந்தது தளைக் கோட்டைச் சண்டைக்குப் பின்னர். மன்னர் சிவாஜி இக்கோட்டையைக் கைப்பற்றிப் பலம் பொருந்திய தாக்கினர். அதன் கி. பி, 1698-ல் ஔரங்கசீப்பின் தானதிபதி இக்கோட்டையைக் கைப்பற்றித் தான் ஆள விரும்பாமல், சாரூப்சிங் என்னும் இராசபுத்திரரைத் தம்

பிரதிநிதியாய் இருந்து ஆளச் செய்தார். அவரது புதல்வரே தென்னாடு புகழும் தேஜ்சிங்கு ஆவார்.

தேஜ் சிங்கு ஆர்க்காட்டு நவாப்பான சாதுல்லா கானுக்குக் கப்பங் கட்ட மறுத்து, சாதுல்லாகானுடன் போர் செய்து உயிரிழந்த வரலாறே இக்காலத்தில் தேஜிங்கு ராஜன் கதை என்று வழங்குகிறது.

கி. பி. 1750-ல் இக் கோட்டையை முஸ்லீம்களிடமிருந்து பிரெஞ்சு நாட்டார் கைப்பற்றினர். சற்றேறக் குறைய 30 ஆண்டுகள் கழித்து ஆங்கிலேயர் இதனைப் பிரெஞ்சியரிடமிருந்து கைப்பற்றினார்கள். ஆனால் அதைத் தொடர்ந்து ஆங்கிலேயரால் ஆள முடியவில்லை. மைசூரை ஆண்ட ஹைதர் அலி ஆங்கிலேயரிடமிருந்து இக்கோட்டையைக் கைப்பற்றினார். ஆனால் அவராலும் இது தொடர்ந்து ஆளப்படவில்லை. மீண்டும் இக்கோட்டையை ஆங்கிலேயர் கைப்பற்றினர். ஆனால் இன்று அக்கோட்டை இந்தியப் பண்டைச் சின்னங்களின் பாதுகாப்பு இலாக்காவினர் மேற்பார்வையில் இருந்து வருகிறது.

இவ்வரலாற்றின் விரிவை மெக்கன்ஸீதுரை இந்தியாவைப் பற்றிச் சேகரித்து வைத்துள்ள வரலாற்றிலும், தென்னார்க்காடு ஜில்லா கெஜட்டியரிலும் காணலாம் என்று அவ்வன்பர் கூறினார்.

இவ்வளவையும் பார்த்துச் சேகரிக்க எனக்கு ஐந்து நாள் ஆயிற்று. ஆறாவது நாள் நான் அவ்வன்பருடன் செஞ்சிக் கோட்டைக்கு 3 மைல் தொலைவிலுள்ள சிங்கவரம் எனவழங்கும் விஷ்ணு செஞ்சிக்குச்

சென்றேன். அங்குதான் தேஜ்சிங்கு வழிபட்ட அரங்கநாத ஆலயம் இருக்கிறது. அவ்வாலயத்தி லுள்ள அரங்கநாதர் உருவம் பார்ப்பதற்கு மிகவும் பெரிய தாகவும் அழகாகவும் உள்ளது. அதற்குப் பக்கத்தில் உள்ளது மேலைச்சேரி. இவைகளை யெல்லாம் கண்டு களி த்து அன்றே தங்கியிருந்த இடத்துக்குத் திரும்பினேன்.

பின்னர் செஞ்சி உயர்நிலைப் பள்ளித் தலைமை ஆசிரியரிடம் பிரியா விடைபெற்று, நான் பஸ் வழியாகத் திண்டிவனம் இரயில் நிலையத்தை அடைந்தேன். அங்கி ருந்து நேரே புறப்பட்டுத் திருவிடைமருதூர் வந்து சேர்ந்தேன். ஆனால் நான் திருவிடைமருதூரை அடைந் தாலும் செஞ்சிக் கோட்டையின் அமைப்பு மட்டிலும் என்மனக்கண்ணை விட்டுநீங்காது. இத்தகைய இடங்களை நீயும் நேரில் பார்க்க வேண்டும் என்பதே என் அவா.

முடிவாக உனக்கு ஒன்று கூற ஆசைப் படுகிறேன். பள்ளிக் கூடப் படிப்பு மட்டும் பயன்தராது. இது போன்ற பழம் பெருமை வாய்ந்த புராதனக் கோட்டை களை நேரில் சென்று பார்த்தால், நம் நாட்டுப் பழைய முடி வேந்தர்களின் அறிவாற்றல்கள் நமக்கு நன்கு புலப்படும். பிற நேரில் நலம்.

உன் அன்புள்ள நண்பன்,
பொன். சுப்பிரமணியன்.

முகவரி:
திரு. சண்முகம் அவர்கள்,
38, சன்னதித் தெரு, விக்கிரமசிங்கபுரம்,
திருநெல்வேலி ஜில்லா.

அருஞ் சொற் பொருள் :

உறுதுணை - பொருந்திய துணை; குன்று - சிறு மலை; இணைத்து – சேர்த்து; அகன்ற - பரந்த; அரண் - பாதுகாவல்; அடிவாரம் - மலையின் சமதளமான கீழிடம்; சிகரம் - மலையுச்சி, இலமாகி - சிதைவுற்று; சுனை - நீரூற்று; தானியக் களஞ்சியம் - விளைபொருள்கள் சேர்த்து வைக்கும் இடம்; நிதிச்சாலை - பொக்கிஷ அறை; சிலம்ப மண்டபம் - அரசர்கள் விளையாடு மிடம்; ஸ்தம்பம் - தூண்; வியந்து - ஆச்சரியப்பட்டு

1. வினுக்கள்:

1. செஞ்சிக் கோட்டை எங்குள்ளது? அதன் அமைப் பென்ன?

2. செஞ்சிக்கோட்டையில் உள்ள பிரிவுகள் யாவை?

3. இராசகிரியில் காணவேண்டுவன யாவை?

4. செஞ்சிக் கோட்டையில் உள்ள ஆலயங்களும் அவற்றின் சிறப்புக்களும் என்ன?

5. செஞ்சிக் கோட்டையின் இரு வாயில்களும் அவற்றின் வழக்காறுகளும் யாவை?

6. இராசகிரியில் பார்க்கவேண்டிய இடங்கள் யாவை?

7. மேற்சேரி என்ருல் என்ன? அது எங்குளது?

2. கட்டுரை யாக்கம்:

1. நீ செஞ்சிக் கோட்டையைப் பார்த்து வந்தது போன்று உன்னுடைய ஆசிரியருக்கு ஒரு கடிதம் எழுது.

2. செஞ்சியின் வரலாற்றுக் குறிப்புகளைப் பற்றி 15 வரி யில் ஒரு கட்டுரை எழுது:—

3. ரயில், கார் பிரயாணங்கள் பற்றி உன் கருத்தை ஐந்து வரிகளில் எழுதுக.

3. மொழிப் பயிற்சி :

1. மூன்று கோணமாக, ஆழ்ந்தகன்ற, குன்றுகள், கீழ்க் கோட்டை, பரந்தவெளி - இவற்றை வாக்கியங்களில் அமைத்து எழுதுக.

2. கீழ்க் கொடுக்கப் பட்டுள்ளவை என்னென்ன வாக்கியங்கள் என்று குறிப்பிடுக.

1. ஆற்றின் அழகைக் கண்டு வியந்தோம்.
2. புதிதாகக் காண்போர்க்கு அச்சத்தையே ஊட்டும்.
3. அப்பொழுது உனக்குக் கூறினேனல்லவா?
4. கொலுமண்டபம் காணவேண்டுவதே.

---

## 11. சர். ஸி. வி. இராமன்

உலகப் பெரும் பரிசாகிய 'நோபல் பரிசை' நம் இந்தியருள் சிலர் பெற்றுள்ளார்கள். அச்சிலருள் தமிழ் நாட்டில் பிறந்த சர். ஸி. வி. இராமனும் ஒருவர்.

தஞ்சைக்கு அருகில் உள்ள புரசைக் குடியைச் சேர்ந்த சந்திரசேகரய்யர் என்னும் பெரியார் திருச்சியில் வாழ்ந்து வந்தார். அவர் மனைவியார் பெயர் பார்வதீ அம்மை என்பது. இவ் விருவருக்கும் கி. பி. 1888-ம் ஆண்டு பிறந்த குழந்தையே சந்திர சேகர வேங்கடராமன்.

இராமனின் தந்தையாரான சந்திரசேகரய்யருக்கு ஆந்திர நாட்டிலுள்ள விசாகப்பட்டினத்து இந்துக் கல்லூரியில் பௌதிக ஆசிரியப் பதவி கிடைத்தது. திருச்சிராப்பள்ளியில் இருந்த தம் குடும்பத்தைச் சந்திரசேகரய்யர் விசாகப்பட்டினத்திற்கு அழைத்துக் கொண்டார்.

இராமன் ஆரம்பக் கல்வி பெற்றுப் பள்ளியில் சேர்க்கப்பட்டார். இளமையிலேயே விஞ்ஞான பாடங்களைக் கற்பதில் இராமனுக்கு விருப்பம் அதிகம்.

கணக்கு, இலக்கியம் முதலிய பாடங்களிலும் சிறந்து விளங்கினர். இராமன் பன்னிரண்டு வயதுள்ள இளைஞராக இருந்த பொழுதே இந்துமத நூல்களைப் பயிலத் தொடங்கினர். மத சம்பந்தமான கட்டுரையொன்று எழுதி இராமன் முதல் பரிசும் பெற்றார்.

தம், பதின் மூன்றாவது வயதில் எப். ஏ. தேர்வில் தேர்வுற்றுச் சென்னை இராஜதானிக் கல்லூரியில் பி. ஏ. வகுப்பில் சேர்ந்தார். இராமனது உறவினர்களில் ஒருவர்க்கு இராமன் சர்க்கார் உத்தியோகம் பார்க்க




சர். ஸி. வி. இராமன்

வேண்டும் என்ற விருப்பம் இருந்தது. அவர் தமது விருப்பத்தை இராமனிடம் தெரிவித்து 'அவ்வுத்தியோகம் பார்ப்பதற்கு உதவியாக நீ சரித்திரப் பாடத்தைப் படி' என்று கூறினர். ஆனல் இராமனே, 'எனக்கு விருப்பமானது விஞ்ஞான பாடமே;

வேறெதையும் நான் படிக்க மாட்டேன், என்று மறுத்துரைத்தார்.

இராமன் விஞ்ஞான நூல்களைப் பெரு விருப்பத்தோடு ஆராய்ந்து கற்றார். விஞ்ஞான ஆராய்ச்சிச் சாலையிலேயே இவர் எப்பொழுதும் காணப் படுவாராம். பி. ஏ. பரீட்சையில் முதல் வகுப்பில் தேறினர். பௌதிகத்திற்காக இராமனுக்குப் பதக்கம் ஒன்று பரிசாக வழங்கப்பட்டது.

பிறகு இராமன் எம். ஏ. தேர்விற்குப் பயிலலானார். பௌதிக ஆராய்ச்சிகளில் இராமன் பெரிதும் ஈடுபட்டார். இவரொடு பயின்ற மாணவர் ஒருவர்க்கு ஒரு சமயம் பௌதீக நூலில் ஒரு சந்தேகம் ஏற்பட்டது; அவர் தமது சந்தேகத்தை வகுப்பில் ஆசிரியரைக் கேட்டார். ஆசிரியர்க்கோ அதனை விளக்க இயலவில்லை. இராமன் தன் நண்பரது சந்தேகத்திற்குக் காரணமான செய்தியைக் குறித்து ஆராய்ந்தார். மறுநாள் ஆசிரியரிடம் சென்று தம் நண்பரின் சந்தேகத்தை நிவர்த்தி செய்தார். இராமன், தான் அச்சந்தேகத்தை நிவர்த்தித்த முறையை விளக்கி ஒரு கட்டுரை எழுதி ஆசிரியரிடம் காண்பித்தார். சரி பார்த்துத் தருவதாக அக் கட்டுரையை வாங்கிய ஆசிரியர் ஆறுமாதகாலமாகியும் அதனைப் படிக்காமலேயே இருந்து விட்டார். இராமனுக்கு ஆசிரியரின் செயல் பிடிக்கவில்லை. அதனைத் திருத்திஎழுத விரும்புவதாகக் கூறி ஆசிரியரிட மிருந்து அக்கட்டுரையைப் பெற்று இங்கிலாந்திலுள்ள விஞ்ஞானப் பத்திரிகை ஒன்றுக்கு அனுப்பி வைத்தார். இராமனது அவ்வாராய்ச்சிக் கட்டுரை விஞ்ஞானப் பத்திரிகையில் வெளியானது. இராமன் தனக்குக்

கிடைத்த அப்பத்திரிகையைத் தம் ஆசிரியரிடம் கொண்டு காட்டினர். ஆசிரியர், தாம் முதலில் அலட்சியமாக இருந்தது குறித்து வருந்தினர்; தம் மாணவரின் ஆராய்ச்சிமிக்க அறிவு கண்டு பெரிதும் மகிழ்ந்தார். இராமன் எம். ஏ. தேர்வில் முதல் மாணவராகத் தேர்வுற்றார்.

இராமன் மாணவனாக இருந்த காலத்தில் பௌதீகத் துறையில் நுட்பமான அறிவு உடையவராக இருந்ததைக் கண்ட ஆசிரியர் இராமனை மேல் படிப்புக்கு இங்கிலாந்து அனுப்ப விரும்பினர். தமது விருப்பத்தையும் இராமனது பேரறிவையும் விளக்கி எழுதி, இராமனது அயல் நாட்டுப் படிப்பிற்கு வேண்டிய பண உதவியைச் செய்யுமாறு சர்க்காரை வேண்டிக் கொண்டார். இராமனுக்கு விருப்பமிருந்தும் அவரது உடல் பலவீனத்தால் செல்ல முடியாது போயிற்று.

இராமனுக்கு அரசாங்கத்தில் டிப்டி அக்கவுண்டெண்ட் ஜெனரல் பதவியும் கிடைத்தது. தமது வேலைகளைத் திறம்படச் செய்த இராமன், அக்கவுண்டெண்ட் ஜெனரல் பதவியையும் பெற்றார். இவர் வேலை பார்ப்பதில் காட்டும் திறமையைக் கண்டு மேலதிகாரிகள் பாராட்டினர். கல்கத்தாவில் அரசாங்க உத்தியோகத்தை இராமன் வகிக்கும்போதே அந்நகரிலிருந்த **இந்திய விஞ்ஞான அபிவிருத்திச் சங்கத்தில்** உறுப்பினராக ஆனார். அச் சங்கத்திலிருந்த விஞ்ஞானப் பெரியார்களின் தொடர்பால் இராமனது புகழ் ஓங்கியது. இராமன் பௌதீகத்தில் பல ஆராய்ச்சி உரைகளை வெளியிட்டார்.

கி. பி. 1910-ம் ஆண்டில் இவர் இரங்கூனுக்கு மாற்றப்பட்டார். இரங்கூனில் இவர் பதவியேற்ற சில

காலத்திற்குள் இவரது தந்தையார் இறந்ததால் ஓய்வு பெற்றுச் சென்னை வந்து சேர்ந்தார். தன் தந்தையாரின் ஈமக் கடன்களை முடிக்க வந்த இராமன், சென்னையில் வீணே காலத்தைக் கழிக்கவில்லை. ஓய்வு நேரங்களில் இராஜதானிக் கல்லூரிப் பௌதீக சாலைக்குச் சென்று விஞ்ஞான ஆராய்ச்சி செய்து வந்தார்.

ஓய்வு பெற்ற காலம் முடிவுற்றதும், நாகபுரிக்கு இராமன் மாற்றப்பட்டார். சில மாதங்களுள் இராமன் அக்கவுண்டெண்டு ஜெனரலாகக் கல்கத்தாவிற்குச் சென்றார். இவரது வருகையை அறிந்து விஞ்ஞான அபிவிருத்திச் சங்கம் பெரிதும் மகிழ்ந்தது. கி.பி. 1914ல் கல்கத்தா பல்கலைக் கழகத்தில் விஞ்ஞானக் கல்லூரியின் பௌதீகப் பகுதிக்கு இராமன் தலைவரானார். இராமனது புகழ் பரவியது. 1921-ம் ஆண்டு கல்கத்தா பல்கலைக் கழகத்தில் பேராசிரியர் பதவிபெற்றார். இவரது விஞ்ஞான அறிவின் திறத்தைக் கண்டு லண்டன்மா நகரிலுள்ள ராயல் கழகம் (Royal Society) இவரைக் கௌரவ உறுப்பினராகச் சேர்த்துக் கொண்டது.

இராமனது விஞ்ஞானப் பேரறிவை அறிந்த மேல் நாடுகள் பலவும், தம் நாட்டிற்கு வருமாறும் சொற்பொழிவு நிகழ்த்துமாறும் வேண்டி இராமனுக்கு அழைப்புகள் அனுப்பின. இராமனும் 1924-ம் ஆண்டு இந்தியாவிலிருந்து புறப்பட்டு கானடா, அமெரிக்கா, ஐக்கிய நாடுகள், ஜெர்மனி, பிரான்சு, இங்கிலாந்து முதலிய நாடுகளுக்குச் சென்றார். அந்நாடு களில் நிகழ்ந்த விஞ்ஞான அறிஞர்களின் மாநாடு களில் இராமனும் கலந்து கொண்டார். மாநாடுகளில் இராமன் விவாதிக்கும் திறனைக் கண்டு மேல்நாட்டு

அறிஞர்கள் பலரும் பாராட்டிப் போற்றினர். மேல் நாடுகளில் நடத்திய பிரயாணத்தால் இராமனது அறிவு முதிர்ந்தது; உலக நாடுகளிடையே அவரது புகழ் பரவியது.

இராமன் 1921-ம் ஆண்டிலிருந்தே ஓர் உண்மையைக் குறித்து ஆராய்ச்சி செய்து வந்தார், மேல் நாட்டுச் சுற்றுப் பிரயாணத்தை முடித்து இந்தியாவிற்குத் திரும்பிய பின்னரும் அவ்வாராய்ச்சியைத் தொடர்ந்து நடத்தலானுர். இவரது ஆராய்ச்சிக்கு உள்ளானது 'ஒளிச் சிதறல்" என்னும் விஷயத்தைப் பற்றியதே. தமது நீண்டகால ஆராய்ச்சியின் பலனுக 1928-ம் ஆண்டு இராமன் ஓர் உண்மையைக் கண்டறிந்தார். அதனையே விஞ்ஞானிகள் **இராமன் விளைவு** என்று அழைக்கின்றனர்.

"குறித்த பண்புகளுடைய ஒரே வகையான கிரணங்களைக் குறித்த திராவகத்தினுள் செலுத்தினுல் வெளிப்படும் ஒளிக்கற்றைகள் மாறுபட்டுக் காணப்படும். திராவகத்திலுள்ள கூட்டணுக்கள் கிரணங்களைச் சிதற அடித்து அவற்றின் தன்மைகளையும் மாற்றிவிடுகின்றன." இதுவே இராமன் விளைவு எனப்படும்.

இம்முடிவு இரசாயன ஆராய்ச்சிக்கு இன்றியமையாதது ஆகும். இராமன் தன் ஆராய்ச்சியின் முடிவை வெளிப்படுத்தியவுடன் விஞ்ஞானிகள் பலர் இதைப் பற்றி ஆராயத்தொடங்கினர். "இராமன் விளைவு" என்ற விஞ்ஞான உண்மை சம்பந்தமாக ஆயிரத்திற்கு மேற்பட்ட பல கட்டுரைகள் வெளியாகி உள்ளன.

இராமன் விளைவு, பொருள்களின் இயல்பை அறிந்து கொள்ளப் பெரிதும் துணைபுரிகின்றதென விஞ்ஞானிகள் கருதுகின்றனர். கி. பி. 1929-ம் ஆண்டில் இராமனுக்கு ஆங்கில அரசாங்கத்தார் ஸர் பட்டம் வழங்கினர். இத்தாலிய சங்கம் இவர்க்குத் தங்கப் பதக்கம் வழங்கியது. 1930-ம் ஆண்டு பௌதீக ஆராய்ச்சி முடிவிற்காக இராமன் நோபல் பரிசு பெற்றார். நோபல் பரிசைப் பெறுவதற்குத் தன் மனைவியுடன் ஸ்வீடன் சென்ற இராமனைப் பலரும் வரவேற்றுப் பாராட்டினர். ஜெர்மனி, இங்கிலாந்து முதலிய நாடுகளுக்கும் சென்று 1931-ம் ஆண்டு இந்தியா திரும்பினார்.

இப்பெரியார் இப்பொழுது பங்களூரில் வாழ்ந்து வருகிறார். அங்குள்ள **இந்திய விஞ்ஞான ஸ்தாபனத்தில்** ஆசிரியராக இருந்து பல்வேறு ஆராய்ச்சிகளை நிகழ்த்தி வருகின்றார். இந்தியாவை ஏனைய நாடுகளைக் காட்டிலும் விஞ்ஞானத்தில் சிறப்புடைய நாடாகச் செய்ய வேண்டுமென்பது அவரது பெரு விருப்பம். அவரது விருப்பம் நிறைவேற இறைவனை வேண்டுவோமாக!

**அருஞ்சொற்பொருள் :**

பயில - கற்க; திறன் - ஆற்றல்; முதிர்ந்தது - வளர்ச்சியுற்றது.

**1. வினாக்கள்:**

1. இராமனது பெற்றோரைக் குறித்து எழுதுக.

2. 'விளையும் பயிர் முளையிலே தெரியும்' — இவ்வுண்மை இராமனது வாழ்க்கையின் எந்நிகழ்ச்சியால் அறியலாகும்?

3. எம். ஏ. வகுப்பில் இராமன் வாசித்தபொழுது நிகழ்ந்த நிகழ்ச்சி யாது?

4. இராமன் மாணவராக இருந்த காலத்துப் பெற்ற பரிசுகளும் சிறப்புகளும் யாவை?

5. இராமனது அரசாங்க அலுவல்களைக் குறித்து எழுதுக,

6. 'இராமன் விளைவு' என்றால் என்ன? விளக்குக.

7. பௌதிக ஆராய்ச்சி முடிவில் இராமன் பெற்ற சிறப்புகள் யாவை?

2. கட்டுரை யாக்கம் :

கீழே கொடுக்கப்பட்டுள்ள தலைப்புகள் ஒவ்வொன்றையும் குறித்து 15 வரிகளில் கட்டுரை எழுதுக.

1. இராமனது கல்விப் பயிற்சி

2. இராமனது விஞ்ஞான ஆர்வம்

3. 'இராமன் விளைவு'ம் அதனால் அவர் பெற்ற சிறப்புகளும்

3. மொழிப் பயிற்சி:

1. பயிலத்தொடங்கு, ஈடுபட்டார், நிவர்த்திசெய், ஓய்வுபெற்று, துணைபுரிகிறது — இத்தொடர்களை உமது வாக்கியங்களில் அமைத்து எழுதுக.

2. கீழே கொடுத்துள்ள வாக்கியத்தை அயற்கூற்றாக மாற்றுக:—

> இராமன் அப்பெரியாரை நோக்கி, 'ஐயா! எனக்கு விருப்பமானது விஞ்ஞான பாடமே; வேறெதையும் நான் படிக்கமாட்டேன்; என்னைப் பொறுத்தருள்க' என்று மறுத்துரைத்தார்.

3. ஒரே வாக்கியமாக மாற்றுக:—

> ஆசிரியர், தாம் முதலில் அலட்சியமாக இருந்தது குறித்து வருந்தினார்; தம் மாணவரின் ஆராய்ச்சி மிக்க அறிவு கண்டு பெரிதும் மகிழ்ந்தார்.

## 12. குடிமைப் பயிற்சி

இந்தியா சுதந்தரம் பெற்றுவிட்டது. குடியரசு உரிமை பெற்ற இந்தியாவில் நாம் வாழ்கிறோம். மக்கள் நலனுக்காக, மக்கள் ஏற்படுத்திய அரசாங்கம் இப்பொழுது நாட்டை ஆளுகின்றது. மக்களால் தேர்ந் தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளே அரசியலை ஏற்றுள்ளார் கள். மக்களின் தேவை யுணர்ந்து, காலத்திற் கேற்ப நாட்டிற்குச் செய்ய வேண்டிய நலன்களை அவர்கள் செய்து முடிக்கும் கடப்பாடு உடையவர்கள். எனவே, நம் நாட்டின் உயர்வு தாழ்வுகளுக்கு இனி நாமே பொறுப் புடையவர்கள் ஆகின்றோம்.

மாணவர்களே! இன்று மாணவர்களாக உள்ள நீங்களே **வருங்காலப் பெரியோர் ஆவீர்கள்.** உங்களுள் பலர் நமது நாட்டு அரசியலை ஏற்று நடத்தும் பொறுப்பு மிகுந்த பதவிகளைப் பெறலாம். ஏனையோர், நாட்டு நலனை உளங் கொண்டு, சமூகத்தோடு வகையறிந்து வாழும் பொறுப்புள்ள குடிமக்கள் ஆவீர்கள். ஆகவே, எதிர் காலத்தில் உங்களுக்குள்ள பொறுப்பும் கடமையும் மிகப்பெரிது.

மாணவ நிலையில் நீங்கள் பெறும் குணம், செயல் களுக்கு ஏற்பவே உங்களது பிற்கால வாழ்வும் உருக் கொள்ளுகின்றது. **'இந்தியா உலக நாடுகளுள் தலைசிறந்த நாடாதல் வேண்டும்; இந்நாட்டின் குடிமகனாகிய நான் இந் நோக்கத்தை யடையத் தளராது முயல்வேன்'** என்ற எண்ணம் உங்கள்பால் இப்பொழுதே அரும்புதல் வேண்டும். இவ்வெண்ணமும், அதற்கேற்ற கடமை யுணர்ந்த செயல்களுமே உங்களைப் பிற்காலத்தில்

குடியாட்சி உரிமைபெற்ற நாட்டில் வாழுந் தகுதி யுடைய மக்களாகச் செய்யவல்லது.

'நல்ல குடிமக்களாக வாழ்வது எங்ஙனம்?' என்பதை நீங்கள் அறிந்து கொள்ளவே இப்பொழுது அரசியலார் மொழி, கணக்கு, வரலாறு, முதலிய ஏனைய பாடங்களோடு குடிமைப் பயிற்சி வகுப்பையும் ஏற் படுத்தி யுள்ளார்கள். ஏனைய பாடங்கள் உங்களது அறிவையும் நற்செயல்களையும் வளர்த்துப் பண்படுத்து தல் போலவே இப்பயிற்சியும் உங்கள்பால் அரசியல் அறிவைப் பெருக்கி இன்பம் மலிந்த சமூக வாழ்வை நல்க வல்லதாகும். குடிமைப் பயிற்சி வகுப்பின் பல்வேறு செயல்களையும் அவற்றின் நோக்கங்களையும் இப்பாடத்தில் அறிவோம்.

பள்ளிக்கூட நிருவாகச் செயல்கள் ஒழிந்த ஏனைய மாணவர் தொடர்புடைய காரியங்கள் அனைத்தும் அப்பள்ளியில் பயிலும் மாணவ மாணவிகளாலேயே ஏற்று நடத்தப் பெறுகின்றன. மாணவர்கள் குடியாட் சிக்குரிய முறைகளைத் தழுவியே தங்கள் காரியங்களைச் செய்யும் பயிற்சி பெறுகின்றார்கள். சொற்பொழிவு மன்றங்கள் அமைத்தல், பள்ளிக்கூடப் பாராளுமன்றங் (School Parliament) கூட்டுதல், மாணவர் கூட்டங் களில் ஒழுங்கும் அமைதியும் நிலவச் செய்தல், நூல் நிலையப் புத்தகங்களைத் தம்முள் பகிர்ந்து பயன்படுத் துதல், வகுப்பறைகளையும் பள்ளிக்கூடச் சுற்றுப் புறங்களையும் தூய்மையாக வைத்துக் கொள்ளுதல் முதலிய காரியங்களை மாணவர்களே திறம்படச் செய் கின்றனர். பள்ளி நாள் விழா (The School Day Celebration) மாணவர்க் கழக ஆண்டுவிழா முதலிய

சிறப்புடைய நாட்களில் கவனிக்க வேண்டிய காரியங்களில் எல்லாம் மாணவர்கள் பயிற்சி பெறுகின்றனர். தலைமை ஆசிரியரின் ஆணைகளுக் கிணங்கியே, அவரது உதவிகொண்டு சுதந்தரமாக இப்பல்வேறு காரியங்களையும் மாணவர்கள் நன்கு செய்து முடிக்கின்றனர். இப்பொதுச் செயல்களைத் தவிர குடிமைப் பயிற்சி வகுப்புகளிலும் (Citizenship training Classes) சில முறைகளை மாணவர் கற்கின்றனர். தனிப்பட்ட முறையிலும் மாணவ மாணவிகள் ஓய்வு நேரங்களைப் பயனுடையதாய்க் கழிக்கும் முறைகளையும் அறிகிறார்கள். இனி இவைகளைச் சிறிது விளங்க அறிவோம்.

பள்ளிகளில் பலதிறப்பட்ட மாணவர்கள் பயிலுகின்றார்கள். அவர்களது குணங்களும் விருப்பங்களும் பல திறப்பட்டன. ஏனைய மாணவர்களோடு பழகுங் காலங்களில் தம் விருப்பு வெறுப்புகளை மாணவர்கள் பாராட்டுதல் ஆகாது. ஒற்றுமை யுணர்வு அவர்கள் பால் நிலவுதல் வேண்டும். இவ்வுணர்வை மாணவர்கள் பெற, இப் பயிற்சியில் சில முறைகள் வகுக்கப் பட்டுள்ளன.

பள்ளிக் கூடங்களில் பல வகுப்புகள் இருக்கின்றன. ஒவ்வொரு வகுப்பும் பல பிரிவுகளைப் (Sections) பெற்றிருக்கின்றது. வகுப்பின் பிரிவுகளையும் இங்கு வகுப்புகளாகவே கொள்வோம். ஒவ்வொரு வகுப்பு மாணவர்களும் பல குழுக்களாகப் (Squads) பிரிக்கப் படுகின்றனர். ஒவ்வொரு குழுவிலும் அறுவர்க்குக் குறையாமலும் எண்மர்க்கு மேற்படாமலும் மாணவர்கள் இருக்கின்றனர். இக்குழு மாணவர்கள் தம் நண்பருள் தகுதியுடைய இருவரைத் தம் குழுத் தலைவ

ராகவும் (Squad leader) துணைத் தலைவராகவும் தேர்ந்து கொள்ளுகின்றனர். ஒரு வகுப்பின் பல குழுக்களையுஞ் சேர்ந்த மாணவர் பலரும் சேர்ந்து, வகுப்பு மாணவர் தலைவராக (Class pupil leader) த்திறமையும், அன்பும் உடைய தம்முள் ஒருவரைத் தேர்ந்தெடுக்கின்றார்கள். ஒவ்வொரு வகுப்பு மாணவிகளும், இங்ஙனமே குழுவாக அமைந்து தம் தலைவியரைத் தேர்ந்து கொள்ளுகின்றனர். பள்ளியின் எல்லா வகுப்புகளிலும் பயிலும் மாணவ மாணவிகள் அனைவரும் சேர்ந்து தம்முள் ஆற்றலும், அறிவும், இனிமையும் உடைய ஒருவரை 'பள்ளிக்கூட மாணவர் தலைவராக' (School Pupil Leader) த்தேர்தல் மூலம் பெறுகின்றனர்.

ஒவ்வொரு வகுப்பும் பல குழுக்களாகப் (Squads) பிரிக்கப்படும் என்பதை முன்பே அறிந்தோம். அக் குழுக்களுக்குச் சில வேலைகள் உண்டு. ஆசிரியரில்லாத வேளைகளில் வகுப்பறைகளில் அமைதி நிலவக் காத்தல், ஆசிரியர் பாட போதனைக்கு வேண்டும் உபகரணங்களைக் கொண்டுவருதல், ஆசிரியர் பார்வைக்குக் கொண்டு செல்லப் பயிற்சிப் புத்தகங்களை மாணவர்களிடம் சேகரித்தல், வகுப்பறையைத் தூய்மையுடன் வைத்துக் கொள்ளுதல், நூல் நிலையப் புத்தகங்களைத் தம் நண்பர்களுக்கு வழங்குதல், திரும்ப அவற்றை நூல் நிலையப் பாதுகாவலரிடம் (Librarian) சேர்ப்பித்தல், குறித்த காலங்களில் மணியடித்தல் முதலிய பல வேலைகளையும் பல குழுக்களும் தம்முள் பகிர்ந்து கொள்ளுகின்றன. ஒவ்வொரு குழு மாணவர்க்கும் இப்பணிகளிற் பயிற்சி ஏற்பட வகை செய்யப்படும். குழுக்கள் மலை, ஆறு, மலர், வீரர், நாட்டுத் தலைவர் பெயர்களிடப்பட்டு வழங்கப்பெறும்.

ஒவ்வொரு குழுத் தலைவரும் தம் குழுவிற்கு வழங்கப்பட்ட வேலை செவ்வன் நடை பெறுகின்றதா என்பதை அறிவர். வகுப்பு மாணவர் தலைவர் குழுக்களின் வேலைகளை மேற்பார்வை யிடுவார். குறைகாண நேர்ந்த பொழுது மாணவர் உள்ளம் நோகாத வகையில் எடுத்துக் காட்டுவர். மாணவர்களும், தங்கள் வேலைகளைத் திறம்படச் செய்து முடிப்பார்கள்; தம் குழுத் தலைவரையும் வகுப்பு மாணவர் தலைவரையும் வேண்டும் பொழுது நெருங்கி ஏற்ற ஆலோசனைகளை விருப்பத்தோடு பெறுவர். குழுவின் வேலைகளைச் செய்யும் பொழுது மாணவன் தன் நலத்தை மறக்கின்றான், 'நமக்கு வழங்கிய வேலைகளை நாம் செவ்வையாகச் செய்தல் வேண்டும்; நம் குழுவில் பிறர் குறை காணலாகாது.' என்ற எண்ணமே மிகுதலால் மாணவர்க்குக் 'குழு உணர்வு' (Squad Spirit) பிறக்கிறது. தொடர்ந்த பயிற்சியால் தன்நலத்தை மறந்து **பொதுநல ஆக்கத்திற்குப்** பாடுபடும் உயரிய பண்பாடு மாணவர்பால் அவர்களையறியாமலேயே வந்தமைகிறது; மேலும் பலதிறப்பட்ட மாணவர்களோடு வேறுபாடு கருதாது பழகும் பயிற்சி பிற்காலத்துப் பல்வேறு கொள்கைகளை யுடைய மக்களைக் கொண்ட சமூகத்தில் வாழும் வகையையும் கற்பிக்கின்றது. பொறுப் புணர்தல் தலைவர்க்குக் கீழ்ப் படிந்து நடத்தல் முதலிய உயர்ந்த பண்புகளும் இப் பயிற்சி மூலம் மாணவர் பெறுகின்றனர். பள்ளிக்கூட மாணவர் தலைவர், பள்ளியின் எல்லா வகுப்புக்களிலும், வழங்கப்பட்ட வேலைகள் திறம்படச் செய்து முடிக்கப் படுகின்றனவா என்பதை வகுப்பு மாணவர் தலைவரின் உதவிகொண்டு நாளும் அறிவார். பள்ளிக் கூட நிருவாகிகளின் உதவி தேவையாயின் தலைமை

யாசிரியர்க்கு அதனைப் பணிவோடு தெரிவிப்பார். மாணவர்கள் அனைவரும் இத்தகைய பணிகளைத் தாமே ஏற்று நடத்துதலால் அவர்களிடையே மகிழ்ச்சியும் உற்சாகமும் திகழும்.

பள்ளிகளில் வகுப்பு மாணவர் தலைவர்களைக் கொண்ட சபை யொன்றுண்டு. இதற்குப் **பள்ளிக்கூட ஆலோசனை சபை** (The School Council) என்று பெயர். பள்ளிக்கூட மாணவர் தலைவரே இச்சபையின் தலைவராவார். பள்ளிக்கூடத் தொடர்புடைய எல்லாவற்றையும் இச்சபை ஆலோசிக்கும். அவசியம் நேரும் பொழுது இச்சபையைப் பள்ளிக்கூட மாணவர் தலைவர் கூட்டுவார்.

அடுத்து, நாம் அறிந்து கொள்ள வேண்டியது **பள்ளிக்கூடப் பாராளுமன்றம்** (School Parliament) குடிமைப் பயிற்சிச் செயல் முறைகளில் பள்ளிக்கூடப் பாராளுமன்றம் சிறந்த இடத்தைப் பெறுவதாகும். பள்ளிக்கூட மாணவர் அனைவரும் இம் மன்ற உறுப்பினர் ஆவர். மாணவர்கள் தம்முள் இருவரைச் சபாநாயகராகவும், உதவிச் சபாநாயகராகவும் (Speaker and Deputy Speaker) தேர்ந்தெடுப்பர். பள்ளிக்கூட ஆலோசனை சபை இங்கு மந்திரி சபையாக அமரும். பள்ளிக்கூட மாணவர் தலைவரே முதன் மந்திரியாவார். பாராளுமன்ற முறைகளைப் பின்பற்றியே இங்கு எல்லா நடவடிக்கைகளும் நிகழும். பள்ளிக்கூட நலம், மாணவர் நலம் முதலிய பயனுள்ள செய்திகள் இப்பாராளுமன்றத்தில் விவாதிக்கப் பெறும். உறுப்பினர்கள் கேட்கும் கேள்விகட்கு மந்திரிசபை ஏற்ற விடை கூறும். மசோதாக்களும் கொண்டு

வரப்பட்டு மசோதாவின் பல அமிசங்களையும் விவாதித்த பின்னர் அவை நிறைவேற்றப்படும். பள்ளிக்கூடத் தலைமையாசிரியரும், பிற ஆசிரியர்களும் பாராளுமன்ற நடவடிக்கைகளைக் கவனித்து, வேண்டும் இடங்களில் மாணவர்க்கு உதவுவர். பாராளுமன்றம் நிறைவேற்றும் எவ்வகை முடிபுகளும் தலைமை ஆசிரியரின் அங்கீகாரத்தைப் பெறுதல் வேண்டும். பள்ளிக்கூட நலனுக்கு மாறுபட்ட நிலையில் பாராளுமன்ற முடிபு செல்லுமேல் அதற்கு அங்கீகாரம் அளிக்கா திருக்கத் தலைமை யாசிரியர்க்கு முழு உரிமையும் உண்டு. இந் நிலையில் தலைமை யாசிரியர் அரசாங்கக் கவர்னருக்கு (Governor of the state) உரிய தகுதியைப் பெறுகின்றார். பாராளுமன்றத்தின் நடவடிக்கைகளை யெல்லாம் சிலர் குறித்துக் கொள்வர். பாராளுமன்ற அமைப்பால் மாணவர் சொற்போர் (Debates) நிகழ்த்தும் சொல்வன்மை பெறுவதோடு பிரதி நிதித்வம் பெற்ற நிலையங்களைத் திறம்பட நிருவகிக்கும் ஆற்றலும் பெறுகின்றார்கள்.

குடிமைப் பயிற்சி வகுப்புகளில் பல்வேறுபட்ட செயல்களில் பயிற்சி யளிக்கப் படுகின்றன. தேசீயக் கொடியின் மாண்பறிதல், சாலைகளில் முறை யறிந்து நடத்தல், பொருள்களையும் செயல்களையும் கூர்ந்து அறிதல், வாழிட நிலைகளுக்கு ஏற்ப மக்களின் வாழ்க்கை முறைகள் மாறுபடுதலை அறிதல், முதலுதவி செய்ய அறிதல், மக்களுக்குத் தொண்டு புரியும் திறமறிதல், இயற்கை யழகுகளைக் கண்டு மகிழும் உணர்வு பெறுதல், இறைவனையும் அவன் உயிர்கள்பால்

கொண்டுள்ள பேரருளையும் போற்றுதல் முதலிய உயரிய பண்பாடுகளை மாணவர் பெறும் வகையில் ஏற்ற செயல்கள் இப்பகுதியில் சேர்க்கப் படுகின்றன. இத்தகைய பயிற்சிகளைப் பெறும் மாணவர்கள் ஆரோக்கியமும், இன்பமும், பிறர்க்கு உதவி செய்யுங் கருத்துமுடைய நல்ல குடிமக்க ளாகின்றனர். மேலும் நாட்டு மக்கள் அனைவரோடும் தோழமை கொள்ளும் உணர்வையும், தொண்டு புரியும் உயர்ந்த கொள்கையையும் அவர்கள் பெறுகிறார்கள். குடிமைப் பயிற்சி வகுப்புக்களில் மாணவர்களுக்குத் தேசியப் பாடல்களும், நாடோடிப் பாடல்களும் கற்பிக்கப் படுகின்றன. சிறிய நாடகங்களில் மாணவர் நடிப்பதற்கும் பயிற்சி யளிக்கப் படுகிறது. இவை மாணவரிடம் கலையுணர்வை வளர்க்கின்றன. மேலும் இவ்வகுப்பில் மாணவர்கள் பல்வகை முடிகளைப் (Knots) போட அறிவதோடு அவற்றின் உபயோகங்களையும் தெரிந்துகொள்ளுகின்றனர்.

மாணவர்கள் ஓய்வு வேளைகளில் தனித்திருக்கும் பொழுது தங்கள் விருப்பங்களுக் கேற்பச் சில கைத்தொழில்களைச் செய்யவும் அறிந்து கொள்ளுகிறார்கள். மாணவர்கள் ஓய்வு நேரங்களை வீணே கழிக்காது பயனுடையதாக ஆக்குகின்றனர். இவ்வேளைகளில் இவர்கள் செய்யும் இத்தகைய பொருள்களின் தகுதிப் பாடுணர்ந்து பள்ளி இவர்களுக்கு ஏற்ற சிறப்புகள் செய்கின்றது.

குடிமைப் பயிற்சியின் பொதுவான சில அமிசங்களே இங்குச் சுருக்கமாக எழுதப்பட்டன. இவற்றின் விளக்கங்களை உங்கள் ஆசிரியர்பால் அறிந்துகொள்

வீர்கள். பொழுது போக்காக இப்பயிற்சி வகுப்புகளைக் கருதாதீர்கள். பிற்கால வாழ்க்கைக்குத் தகுதியுடைய மக்களாகச் செய்யும் இப்பயிற்சிகளில் நீங்கள் கருத்தூன்றுங்கள். மனிதன் மனிதனுக வாழ அறிவதே கல்வியின் நோக்கம். இதனை முன்பே ஒரு பாடத்தில் அறிந்தோம். கல்வியின் இந்நோக்கத்தை யடைய இப் பல்வேறு பயிற்சிகளும் துணைபுரிவன வாகும். ஆற்றலும், அருங்குணங்களும், சமூக உணர்வும் உங்கள்பால் திகழட்டும்!

**அருஞ்சொற்பொருள்:**

கடப்பாடு – கடமை; உளங்கொண்டு – மனதிற்கொண்டு; அரும்புதல் - தோன்றுதல்; நல்க – கொடுக்க; பலதிறப்பட்டன - பலவகைப்பட்டன; பணி – தொண்டு; செவ்வன் - செம்மையாக; நோகாத – வருந்தாத. ஆக்கம் – மேன்மை; சொல்வன்மை – சொற்பொழிவு செய்யும் ஆற்றல்; திறம் அறிதல் - வகையறிதல்.

**1. வினாக்கள்:**

1. குடியரசாவது யாது? இவ்வாட்சி முறை யமைந்த நாடுகள் நான்கினைக் குறிப்பிடுக.

2, குடியரசு நாட்டில் அரசாங்கம், மக்கள் இவர்களின் தொடர்பையும் கடமைகளையும் புலப்படுத்துக.

3. 'குடியரசு நாட்டில் மாணவர் கடமை பெரிது'—இக்கூற்றை ஆராய்ந்து தெளிவு படுத்துக.

4. குடிமைப் பயிற்சி வகுப்பின் நோக்கத்தையும், பல்வேறு செயல்களையுங் குறிப்பிடுக.

5. பள்ளிக்கூட காரியங்களை மாணவர்களே ஏற்று நடத்த அவர்களுக்கு வழங்கப்படும் பயிற்சிகள் யாவை?

6. குழு, குழுத்தலைவர், வகுப்பு மாணவர் தலைவர், பள்ளிக்கூட மாணவர் தலைவர் — இவர்களைப் பற்றிச் சிறு குறிப்புகள் எழுதுக.

7. குழுக்களின் வேலைகளால் மாணவர் அடையும் உயரிய பண்பாடுகள் யாவை?

8. பள்ளிக்கூடப் பாராளு மன்றத்தின் வேலை முறைகளை யும் அவற்றால் மாணவர் அடையும் நலன்களையும் குறிப்பிடுக.

9. கலையுணர்வும், கட்டுக்கமும் (Creative instinct) மாணவர் பெறும் வகையில் அவர்களுக்கு வழங்கப்படும் பயிற்சிகள் யாவை?

2. கட்டுரை யாக்கம்:

1. உமது பள்ளிக்கூடத்தில் நடக்கும் குடிமைப் பயிற்சி வகுப்பின் செயல்களை விளக்கி வேற்று மாகாணத்திலிருக்கும் உமது நண்பனுக்கொரு கடிதம் எழுதுக.

2. பள்ளிக்கூட மாணவர் அரசாங்கத்தின் முதல் அமைச் சராக நீர் பதவி பெறுகின்றீர். பள்ளியின் ஒழுங்கையும் கட்டுப் பாடுகளையும் நிலை நிறுத்த ஒரு மசோதாவைப் பாராளு மன்றத்தில் கொண்டு வருகின்றீர். அம்மசோதாவின் விதி முறைகளையெல்லாம் ஷரத்து வாரியாகத் தொகுத்து இம்மசோதா வின் அவசியத்தை வற்புறுத்திப் பாராளு மன்றத்தில் சொற் பொழிவாற்றுவதுபோல ஒரு கட்டுரை எழுது.

3. 'தமது பொறுப்பையும் கடமைகளையும் நன்கு உணர்ந்து மாணவர்கள் திறம்படக் கல்வி பயில்வர்' என்று கருதி உங்கள் பள்ளிக்கூட அரசாங்கத்தின் கல்வி மந்திரி உயர்நிலை வகுப்பு மாணவர்களுக்குப் பரீட்சைகள் வேண்டுவதில்லை என்று ஒரு மசோதாவை உங்களது பாராளு மன்றத்தில் கொண்டுவரு கின்றார் — நீர் அரசாங்கத்தின் எதிர்க் கட்சித் தலைவராக அமை கின்றீர் — அத்தகைய மசோதா நிறைவேற்றப் படுமானால் விளையுந் தீங்குகளை விளக்கிக் கல்வி மந்திரியின் மசோதாவை நீர் எங்ஙனம் எதிர்ப்பீர் என்பதற்குரிய குறிப்புகளைத் தயார் செய்க.

3. மொழிப் பயிற்சி:

1. உமது வாக்கியங்களில் அமைத்து எழுதுக:— தேவை யுணர்ந்து, உருக்கொள்ளும், உளங்கொண்டு, வகையறிந்து

வாழும், அரும்புதல் வேண்டும், இன்பம் மலிந்த, திறம்பட, ஆணைகளுக் கிணங்கி, ஒற்றுமை யுணர்வு, நிலவுதல், தேர்ந்து கொள், அமைதி நிலவ, நோகாத, குழு உணர்வு, பொது நல ஆக்கம், சொல்வன்மை, **பிரதிநிதித்வம்.**

2. கீழே குறித்தபடி வாக்கியங்களை மாற்றி யமைக்கவும்:–

(அ) தம் சொற்பொழிவில் அவ்வறிஞர், 'மாணவர்களே! நீங்கள் மாணவ நிலையில் பெறும் குணம் செயல் களுக்கு ஏற்பவே உமது பிற்கால வாழ்வு உருக் கொள்ளுகின்றது' என்று குறிப்பிட்டார்.

(அயற் கூற்றாக மாற்றுக)

(ஆ) குடிமைப் பயிற்சி மாணவர்பால் அரசியல் அறிவை யும் இன்பம் மலிந்த சமூக வாழ்வையும் நல்க வல்லது. ('மாணவர்' என்று தொடங்கி வாக்கியத்தை ஏற்றவாறு மாற்றுக)

(இ) மாணவர் தொடர்புடைய காரியங்கள் அனைத்தும் மாணவ மாணவிகளாலேயே ஏற்று நடத்தப் படுகின்றன. (பொருள் மாறாது எதிர்மறை வாக்கி யமாக மாற்றுக)

(ஈ) பள்ளிக்கூட நலனுக்கு மாறுபட்ட நிலையில் பாராளு மன்ற முடிவு அமையுமேல் அதற்கு அங்கீ காரம் அளிக்காதிருக்கத் தலைமை யாசிரியருக்கு முழு உரிமையும் உண்டு. (தனி வாக்கியங்களாக மாற்றுக)

3. கீழே கொடுத்துள்ள சொற்களின் பொருள் வேறு பாட்டை யறிந்து அவற்றை உமது வாக்கியங்களில் அமைக்க:–

பொறுப்பு – பொருப்பு; பெரும் – பெறும்; அறிதல் – அரிதல்; அறை – அரை.

ஒழி – ஒலி – ஒளி; கழிக்கும் – கலிக்கும்; கொள்வோம் – கொல்வோம்; ஆள – ஆழ; வேளை – வேலை.

அவண் – அவன்; பணி – பனி; வண்மை – வன்மை.

# 13. தடுத்தாட் கொண்ட வரலாறு

[நாடகம்]

## காட்சி I

*[திரு நாவலூரரின் திருமண நாள். மங்கல வாத்தியங்களின் முழக்கம் எங்கும் நிறைந்துள்ளன. திருமணப் பந்தரைச் சுற்றி உறவினர்களும் நண்பர்களும் குழுமி யுள்ளனர். அவ்வமயம் உடல் தளர்ச்சியுற்ற வயது முதிர்ந்த அந்தணர் ஒருவர் கழியை ஊன்றிக்கொண்டு திருமணப் பந்தலுள் நுழைந்து நாவலூரர் முன்பு சென்று நின்று]*

**அந்தணர்:** சற்று அமைதி நிலவுக! பெரியவர்களே! நீங்கள் எல்லோரும் சிறிது நேரம் அமைதியாக இருந்து நான் கூறுவனவற்றைக் கேளுங்கள்.

**நாவலூரர்:** வேதம் உணர்ந்த வித்தகரே! வருக! அடியேங்கள் செய்த புண்ணியத்தின் பயனே தாங்கள் இவண் எழுந்தருளியது; அமர்ந்தருள வேண்டும்.

**கூட்டத்துட் சிலர்:** பெரியீர்! தாங்கள் ஏதோ சொல்ல வேண்டும் என்று முன்னர் அருளினீர்களே; நாங்கள் அறியலாமாயின் அதனைக் கூறியருள வேண்டும்.

**அந்தணர்:** ஏ! நாவலூர! உனக்கும் எனக்கும் ஒரு வழக்கு உள்ளது. அவ்வழக்கினை நம்முள் முடித்த பின்னரேயே நீ இத்திருமண மங்கல வினைகளை மேற்கொள்ள வேண்டும்.

**நாவலூரர்:** அருந்தவப் பெரியோரே! தாங்கள் அடியேன் பால் கொண்ட வழக்கினைக் கூறியருள்க. அவ் வழக்கினை முடித்தே நான் மணம் புரிவேன்; இஃது உறுதியே! தாங்கள் கூற விரும்புமவற்றை முழு வதுங் கூறி யருள்க.

**அந்தணர்:** மறையவர்களே! கேண்மின்; நாவலூரில் உள்ள இவன் என் அடியவன். இதுவே நான் கூற வந்தது.

**கூட்டத்தார்:** (பரிகாசக் குறிப்புத் தோன்ற) ஏ! ஏ! நன்று நன்று! பெரியவர் தம் சித்தம் கலங்கினர்போலும். மறை யுணர்ந்த இவரது மொழி நன்றாக இருக் கிறது. (கோபத்தோடு) இவர் எண்ணம் என்ன வாம்?

**அந்தணர்:** (நாவலூரரைப் பார்த்து) ஏ! நாவலூர! சிறுவ! அக்காலத்தில் உன் பாட்டன் எழுதித் தந்த அடிமையோலை இதோ என்னிடம் இருக் கிறது. இதனை நீ எள்ளி நகைத்த தேன்? உன் செயல் நன்று.

**நாவலூரர்:** (சிரிப்பொழிந்து) மறையவரே! அந்தணர் வேறோர் அந்தணர்க்கு அடிமையாதலை இதுவரை கண்டதில்லை; கேட்டதுமில்லை. இவ்வியத்தகு செய்தியை இன்று தாங்கள் கூறவே அறிந்தோம். தாம் பித்தரோ?

**அந்தணர்:** அப்பனே! நான் பித்தனே யாக! பேயன் ஆனாலும் அவ்வாறே யாகுக! முறையில்லாது இவ்வளவு கொடுமொழிகளைக் கூறினையே; இவற்றுக்

கெல்லாம் வெட்கி நான் பின் வாங்க மாட்டேன். என்னை இப்பொழுதும் அறிந்து கொண்டா யில்லை. சாமர்த்தியமாகப் பேசி விட்டோம் என் றெண்ணுதே! நீ எனக்குச் செய்ய வேண்டிய பணி களைச் செய்தே யாகவேண்டும்.

நாவலூரர்: (தன்னுள்) இப் பெரியவரைப் பார்க்கும் என்னுள்ளத்தில் அன்பு உணர்ச்சி தோன்றி மிகுகின்றதே! ஆனல் இவரது பித்த உரைகளோ (கோபத்தோடு) ஓலையொன் றிருப்பதாகக் கூறினரே! (அந்தணரைப் பார்த்து) ஐயா! நீர் கூறிய அவ்வோலையைக் காட்டும்.

அந்தணர்: ஏ சிறுவ! நீ அவ்வோலையைக் காணுந் தகுதி யுடையவனே? நீ அதனைக் காண்பதற்கு முன்பு எனக்குப் பணி புரிதல் வேண்டும்.

நாவலூரர்: (தன்னுள்) அந்தணர் என்னை அடியான் என்று கூறுதல் என்ன முறை? (இவ்வாறு கூறிப் பெரியவரைக் கோபத்துடன் நெருங்கி அவ்வோலை யைப் பற்றிக் கிழித் தெறிதல்)

அந்தணர்: ஐயோ இவன் செய்ததைக் காணீர்! இது முறையோ?

கூட்டத்துட் சிலர்: [கூட்டத்தை விலக்கி மறையவரை நெருங்கி] பெரியவரே! நீர் கூறுவது இவ்வுலகில் இதுவரை நிகழாத செயலாக அன்றே இருக் கிறது. இல்லாத தொரு வழக்கினைக் கொணர்ந்து இங்ஙனம் எம்மொடு பிணங்குகின்றீரே! நீர் எங்குளீர்? சொல்லும்.

**அந்தணர்:** இங்கு தான் இருக்கிறேன். நான் வாழிட மும் தொலைவிலுள்ள தன்று; திருவெண்ணெய்



நல்லூரே! அது கிடக்க; முறை யில்லாமல் இந் நாவலூரன் என்னொடு வன்மையாகப் போரிட்டு

என்கையிலுள்ள ஓலையையும் வலிதில் பறித்துக் கிழித் தெறிந் தனனே! இச் செயல்களால், தான் அடியவனே என்பதை நிரூபித்தன னல்லவோ?

**நாவலூரர்:** பெரியவரே! நீர் இருப்பது திருவெண் ணெய் நல்லூரே யானல் அவ்விடமே சென்று உமது வழக்கைப் பற்றிப் பேசுவோம். வருக.

**அந்தணர்:** நாவலூரர! வெண்ணெய் நல்லூருக்கு நீ வரினும் நன்றே. ஊர்ச் சபையார் முன் நம்மிடை யுள்ள வழக்கைக் கூறுவேன். உன் பாட்டன் கையெழுத்திட்ட மூல ஓலையைக் காட்டி நீ எனக்கு அடிமையாதலைச் சாதிப்பன்.

[இங்ஙனம் கூறி அந்தணர் கோலையூன்றி முன்னே செல்ல நாவலூரரும் பின்தொடர்ந்து செல்கிருர்]

**கூட்டத்திலிருந்த மக்கள்:** இந்நிகழ்ச்சிகள் விந்தையாக இருக்கின்றனவே! இது என்னும்?

## காட்சி II

[அந்தணரும் திருநாவலூரரும் திருவெண்ணெய் நல்லூர் வந்தடைந்தனர். வேதமுணர்ந்த பெரியோர்கள் விளங்கும் சபைமுன் சென்று]

**அந்தணர்:** அறிவுடைப் பெருமக்களே! இந் நாவலூர் ஆரூரன் எனக்கு அடியான்; அடிமை ஓலையைக் காட்டிய பொழுது அதனைப் பற்றிக் கிழித்தெறிந் தனன். இதுவே சபைமுன் நான் தெரிவித்துக் கொள்ளும் முறைப்பாடு.

**சபைத் தலைவர் :** ஐயா! அந்தணர் அடிமையாதல் இவ்வுலகில் இல்லாத செய்தி யன்றோ? நீர் எத்தகைய வார்த்தைகளைக் கூறினீர்!

**அந்தணர் ;** இவன் கிழித்த அவ்வோலை இவன் தந்தையின் தந்தை உடன்பட்டு எழுதித் தந்தது. வழக்கப்படியே இவனும் எனக்கு அடிமை வேலை செய்வது அன்றோ முறை; இது பொருத்தமுடையதல்லவோ? அடிமை யோலையைக் காட்டினால் அதனை வலிதில் பறித்துக் கிழிப்பதுதான் முறையோ?

**சபைத் தலைவர் :** நன்று; ஆரூரரே! உமது எண்ணம் என்ன ?

**நாவலூரர் :** நூலறிவு சான்ற பெரியோர்களே! நான் ஆதி சைவன் என்பதை நீங்கள் அறிவீர்கள். இப் பெரியவர் தனக்கும் நான் அடியவன் என்பரானால் இம்மாயை என்னால் கருத முடியவில்லை; இவரது வழக்கு என்னால் தெளிய ஒண்ணாது.

**சபைத் தலைவர்:** பெரியவரே! இந் நாவலூரரைத் தாங்கள் அடிமை என்று கூறுவதை நாங்கள் நம்புமாறு செய்யவேண்டும். உமது கூற்றின் உண்மையை வழக்கு, பத்திரம், சாட்சி இம்மூன்றனுள் ஒன்றால் தெளிவு படுத்த இயலுமோ?

**அந்தணர்:** ஆம்! இந் நாவலூரன் முன்னர் கிழித்த ஓலை படி யோலையாகும். அதன் மூல ஓலை என்னிடம் இருக்கிறது. சபையில் அதனைக் காட்டவே வைத்துள்ளேன்.

சபைத் தலைவர்: இயலுமாயின் அம்மூல ஓலையைக்காட்டுங்கள்.

அந்தணர்: இந் நாவலூரன் முன்போல் வலி செய்யாதவாறு காப்பீரேல் காட்டுவேன்.

சபைத் தலைவர்: உமக்கும் ஓலைக்கும் எவ்விதத் தீங்கும் நேராத வகையில் காப்போம்.

[அந்தணர் ஓலையைக் கொடுக்க, பணிவோடு கரணத்தானும் தொழுது வாங்கினன்]

சபைத் தலைவர்: வாசிக்க.

கரணத்தான்: (ஓலையை விரித்து வாசிக்கத் தொடங்குகிறான்) "நாவலூரில் வாழும் ஆரூரன் எழுதியது. திருவெண்ணெய் நல்லூர் பித்தனுக்கு யானும் என் வழி வரும் மரபினரும் வழி வழியாகத் தொண்டு செய்தற்கு உடன்பட்டு எழுதிவைத்தேன். இதற்கு இவை என் எழுத்து."

[சபையிலுள்ள பலரும் பத்திரத்தையும் அதில் இடப்பட்ட கையெழுத்தையும், சாட்சியாக வரையப்பட்ட கையெழுத்துக்களையும் கண்டு குற்றமில்லாதிருத்தலை அறிந்து தெளிந்தனர்]

அந்தணர்: பெரியவர்களே! இவனது பாட்டன் எழுத்துடைய வேறு ஓலைகள் இச்சபையில் இருக்குமேல் அதனோடு வைத்து ஒப்பு நோக்குங்கள். அவ்வாறு நோக்கி முடிவு அறிவியுங்கள்.

[சபைப் பாதுகாவலிலிருந்த வேறு ஓலைகளைக் கொண்டு வந்து அவற்றிலிருந்த நாவலூரரது கையெழுத்துக்களோடு இதனை ஒப்பிட்டனர்; இரு எழுத்துக்களும் ஒத்திருந்தன]

**சபைத் தலைவர்:** பழைய ஓலையிலுள்ள நம்பியாரூரது கையெழுத்தும் இவ்வந்தணர் கொடுத்த வோலையிலுள்ள கையெழுத்தும் ஒத்திருக்கின்றன. நம்பியாரூரரே! இம்மறை யுணரும் பெரியவருக்கு நீர் தோற்றீர்; முறைப்படி இவர்க்கு அடிமை வேலை செய்வதே உமக்குரிய கடமை.

**நம்பி ஆரூரர்:** விதி முறை இதுவாகுமானால், நான் இதற்கு உடன்படேன் என்பது பொருந்துமோ?

**சபையோர்:** பெரியவரே! நீர் காட்டிய ஓலையில் நீர் இவ்வூரில் வாழ்வதாகக் குறிப்பிடப் பட்டிருக்கிறதே! உமக்கு இவ்வூரில் உள்ள வீட்டைக் காட்டுவீர்.

**அந்தணர்:** பெரியவர்களே! என்னை உங்களுள் ஒருவரும் அறியீராயின் என்னொடு வருக! எனதில்லத்தைக் காட்டுகிறேன்.

*[அந்தணர் முன்னே செல்ல நம்பியாரூரரும் மற்றும் அங்கிருந்த பலரும் பின்தொடர்ந்து சென்றனர், வீதிகளைக் கடந்து அந்தணர் கோயிலுள் நுழைந்தார்; மற்றுமுள்ளோரும் தொடர்ந்தனர்; கோயிலுள் நுழைந்த அந்தணர் மறைந்தார்; பிறர் எல்லாம் அந்தணரைக் காணாது திகைத்து நின்றனர்.]*

**மறையவர்கள்:** ஆ! ஆ! இது என்ன? வியப்பாக இருக்கின்றதே! வந்த அந்தணர் நாவலூரரைத் தடுத்து ஆட்கொள்ள வந்த எம் இறைவனே போலும்! அடியாரை ஆண்டருளும் திறமைதான் என்னே!

*[நம்பியாரூரர் இறைவனது பெருங்கருணையை நினைந்து போற்றுகின்றார்.]*

*[காட்சி முடிவு]*

அருஞ்சொற்பொருள் :

பந்தர் – பந்தல் (போலி); குழுமி - கூடி; அமயம் - பொழுது; சித்தம் - அறிவு; மறை – வேதம்; எள்ளி - பரிகசித்து; பணி - தொண்டு; காணீர் - காண்பீர்; பிணங்குதல் – மாறுபடுதல்; ஒண்ணாது - முடியாது; படியோலை – மூல ஓலையைப் பார்த்தெழுதிய ஓலை; ஒப்பு நோக்குதல் - சரி பார்த்தல்.

வினாக்கள் :

1. அந்தணர் நம்பியாரூர ரிடத்து யாது கூறினர்?

2. நம்பியாரூரர் கூறிய கோப உரைகள் எவை?

3. ஊர்ச்சபையார் வழக்கினை விசாரித்த முறை யாது?

4. நம்பியாரூரர் அந்தணர்க்கு அடிமை வேலை செய்ய வேண்டுவதே என்பதைச் சபையார் எங்ஙனம் முடிவு செய்தனர்?

5. அந்தணர் ஆட்கொள்ளவந்த சிவபெருமானே என்பதை மறையவர்கள் எப்பொழுது உணர்ந்தனர்?

6. (1) 'பெரியவர் சித்தம் கலங்கினர் போலும்' (2) 'இக் கொடுமொழிகளுக்கு வெட்கிப் பின் வாங்கமாட்டேன்' – இவற்றிற்கு இடங்கூறிப் பொருள் விளக்குக.

7. கரணத்தான், படியோலை, ஊர்ச்சபை — இவற்றைப் பற்றிய சிறு குறிப்புகள் வரைக.

2. கட்டுரை யாக்கம் :

1. இப்பாடப் பொருளை நம்பியாரூர் கூறுவது போல அமைத்து ஒன்றரைப் பக்கத்தில் ஒரு கட்டுரை எழுது.

2. கீழ்வரும் தலைப்புகளில் கட்டுரை வரைக:—

(1) அந்தணர் நம்பியாரூரர்பால் கொண்ட வழக்கு.

(2) ஊர்ச்சபையார் வழக்கினை ஆராய்ந்த திறமும் முடிவும்.

3. மொழிப் பயிற்சி:

1. வாக்கியங்களில் அமைக்க:— மங்கல வாத்தியம், குழுமி, அமைதியாக, எழுந்தருளியது, அடியேங்கள், சித்தம் கலங்கினர், எள்ளி நகைத்தான், பிணங்குகின்றீர், தெளியவொண்ணது.

2. குறித்தபடி வாக்கியங்களை மாற்றுக:—

(அ) அந்தணர் நாவலூராரைப் பார்த்து, 'ஏ, சிறுவ! நீ அவ்வோலையைக் காணுவதற்குத் தகுதியுடையவனே? நீ இதனைக் காண்பதற்கு முன்பு எனக்குப் பணி புரிதல் வேண்டும்' என்று வெகுண்டுரைத்தார் (அயற்கூற்ருக மாற்றுக)

(ஆ) உன் பாட்டன் எழுதிய மூல ஓலையைக் காட்டி நீ அடிமையாதலைச் சாதிப்பேன். (செயப்பாட்டு வினை வாக்கியமாக)



ஹோமியோபதி பிரஸ், கும்பகோணம்.

# இன்பத் தமிழ் வாசகம்

*செய்யுட் பகுதி*

(மூன்றும் புத்தகம்)

## [இரண்டாம் பாகம்]

## I. வாழ்த்து

### 1. திருவாசகம்

அம்மையே! அப்பா! ஒப்பிலா மணியே
  அன்பினில் விளைந்தஆர் அமுதே!
பொய்ம்மையே பெருக்கிப் பொழுதினைச் சுருக்கும்
  புழுத்தலைப் புலையனேன் தனக்குச்
செம்மையே ஆய சிவபதம் அளித்த
  செல்வமே! சிவபெரு மானே!
இம்மையே உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
  எங்(கு)எழுந் தருளுவ(து) இனியே. 1

—மாணிக்க வாசகர்

### 2. சகல கலா வல்லி மாலை

தூக்கும் பனுவல் துறைதோய்ந்த
  கல்வியும் சொற்சுவைதோய்
வாக்கும் பெருகப் பணித்தருள்
  வாய்வட நூற்கடலும்
தேக்கும் செழுந்தமிழ்ச் செல்வமும்
  தொண்டர்செந் நாவினின்று
காக்குங் கருணைக் கடலே
  சகல கலாவல்லியே. 2

—குமர குருபரர்

## 3. மனோன் மணீயம்

பல்உயிரும் பலஉலகும் படைத்(து) அளித்துத் துடைக்கினும்ஓர்
எல்லைஅறு பரம்பொருள்முன் இருந்தபடி இருப்பதுபோல்
கன்னடமும் களிதெலுங்கும் கவின்மலையா ளமும் துளுவும்
உன்உதரத்(து) உதித்(து)எழுந்தே ஒன்றுபல ஆயிடினும்
ஆரியம்போல் உலகவழக்(கு) அழிந்தொழிந்து சிதையாவுன்
சீரிளமைத் திறம்வியந்து செயல்மறந்து வாழ்த்துதுமே 3

—தி. சுந்தரம்பிள்ளை M. A.

குறிப்புரை:

1. **திருவாசகம்:** *அழகிய சொற்களினாலாகிய நூல். இதனை இயற்றியவர் மாணிக்கவாசக சுவாமிகள். பாண்டிய நாட்டில் திருவாதவூரில் பிறந்தவர். அரிமர்த்தன பாண்டியனது அமைச்சராய்த் திகழ்ந்தார். அரசனுக்குக் குதிரை வாங்கச் சென்ற பொழுது திருப் பெருந் துறையில் சிவபெருமானால் குருந்த மர நிழலிலே திருவைந்தெழுத்து உபதேசம் பெற்றார். உபதேசம் பெற்ற பின்னர் பாடிய பாடல்களே திருவாசகம் எனப்படும். இது சைவத் திருமுறைகளில் 8-ந் திருமுறையைச் சேர்ந்த தாகும். காலம் கி. பி. எட்டாம் நூற்றாண்டு.*

அருஞ்சொற்பொருள் :

*பொய்ம்மையே - பொய் ஒழுக்கத்தையே; பொழுது – ஆயுட்காலம்: செம்மையே ஆய – வீடு பேறாகிய; இம்மை - இப்பிறப்பு; சிக்கென - உறுதியாக.*

குறிப்புரை:

2. **சகலகலாவல்லிமாலை:** *இப்பாடல் சகலகலாவல்லி மாலையைச் சார்ந்ததாகும். இதனை இயற்றியவர் குமர குருபர சுவாமிகள். இவர் திருநெல்வேலியில் ஸ்ரீ வைகுண்டத்தைச் சேர்ந்த கயிலாயபுரத்தில் சண்முக சிகாமணிக் கவிராயருக்கும் சிவகாமி அம்மையார்க்கும் பிறந்தவர். பிறந்த ஐந்தாண்டுகள் வரை ஊமையராய் இருந்து திருச்செந்தூர் முருகன் அருளால்*

பேசுந்தன்மையும் கவி பாடும் ஆற்றலும் பெற்றார். தலயாத்திரையாக மதுரை, திருவாரூர் முதலிய தலங்களுக்குச் சென்று தருமபுரம்அடைந்தார். தருமபுரத்தில் மகாசந்நிதானமாக எழுந்தருளியிருந்த மாசிலாமணி தேசிகரே இவர்களது குரு. அவர்களது ஆணைக்கிணங்கிக் காசி சென்று நவாபின் நன்மதிப்பைப் பெற்றுக் குமாரசுவாமி மடம் என்ற மடத்தைக் கட்டினார். இவர்களால் இயற்றப்பட்ட நூல்கள் நீதிநெறி விளக்கம், மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ், பண்டார மும்மணிக்கோவை முதலியன. குமரகுருபர சுவாமிகளின் வழியில் வந்தவர்களே திருப்பனந்தாளிலுள்ள காசி மடத்துத் தலைவர்கள். அவர்கள் தமிழ் மொழி வளர்ச்சிக்கெனச் செய்துவரும் தொண்டுகள் உலகறிந்தது. குமரகுருபரர் காலம் கி. பி. பதினேழாம் நூற்றாண்டு.

அருஞ்சொற் பொருள் :

தூக்கும் - ஆராயும்; பனுவல் துறை – தமிழ் நூல்களின் பாகுபாடு.

குறிப்புரை:

3. மனோன்மணீயம்: இந்நாடக நூலை இயற்றியவர் திருவனந்தபுரம் பல் கலைக் கழகப் பேராசிரியர் சுந்தரம் பிள்ளை அவர்கள் ஆவர். இவர் சென்ற நூற்றாண்டினர். ஞான சம்பந்தர் கால ஆராய்ச்சி முதலிய நூல்கள் இவரால் இயற்றப்பட்டனவாகும்.

அருஞ்சொற்பொருள்:

அளித்து - காப்பாற்றி; துடைத்தல் - அழித்தல்; எல்லை அறு பரம்பொருள் - காலம் கடந்த இறைவன்; உதரம் - வயிறு; உலக வழக்கு - பேச்சு வழக்கு (மற்றொன்று செய்யுள் வழக்கு)

## II. அறவுரை

### 1. நாலடியார்

#### துன்பம் அடையாதவர்

அறிவ(து) அறிந்(து)அடங்கி அஞ்சுவ(து) அஞ்சி
உறுவ(து) உலகுவப்பச் செய்து — பெறுவதனால்
இன்புற்று வாழும் இயல்புடையார் எஞ்ஞான்றும்
துன்புற்று வாழ்தல் அரிது. (1)

#### சான்றோர் மாண்பு

அங்கண் விசும்பின் அகல்நிலாப் பாரிக்கும்
திங்களும் சான்றோரும் ஒப்பர்மன் — திங்கள்
மறு(வு)ஆற்றும் சான்றோர்அ:(து) ஆற்றார் தெருமந்து
தேய்வர் ஒருமா(சு) உறின். (2)

#### பண்புடையாரது தன்மை

கல்லாது போகிய நாளும் பெரியவர்கள்
செல்லாது வைகிய வைகலும் — ஒல்வ
கொடாஅ(து) ஒழிந்த பகலும் உரைப்பின்
படாஅவாம் பண்புடையார் கண். (3)

#### இனம் அறிந்து சேர்தல்

ஒண்கதிர் வாண்மதியம் சேர்தலால் ஓங்கிய
அங்கண் விசும்பின் முயலும் தொழப்படூஉம்;
குன்றிய சீர்மைய ராயினும் சீர்பெறுவர்
குன்றன்னார் கேண்மை கொளின். (4)

மனத்தான் மறுவில ரேனுந்தாம் சேர்ந்த
இனத்தால் இகழப் படுவர் — புனத்து
வெறிகமழ் சந்தனமும் வேங்கையும் வேமே
எறிபுனம் தீப்பட்டக் கால். (5)

—சமண முனிவர்கள்

## 2. நீதி நெறி விளக்கம்

### தற்பெருமையின் குற்றம்

தன்னை வியப்பிப்பான் தற்புகழ்தல் தீச்சுடர்
நன்னீர் சொரிந்து வளர்த்தற்றால்;—தன்னை
வியவாமை யன்றே வியப்பாவ தின்பம்
நயவாமை யன்றே நலம். (1)

### அடைந்தாரைக் காத்தல்

களைகணுத் தம்மடைந்தார்க் குற்றுழியும் மற்றோர்
விளைவுன்னி வெற்றுடம்பு தாங்கார் — தளர்நடைய
தானுடம் பென்று புகழுடம் போம்புதற்கே
தானுடம் பட்டார்கள் தாம். (2)

### வினை செய்யுந் திறம்

கால மறிந்தாங் கிடமறிந்து செய்வினையின்
மூல மறிந்து விளைவறிந்து — மேலுந்தாம்
சூழ்வன சூழ்ந்து துணைமை வலிதெரிந்
தாள்வினை யாளப் படும். (3)

### பொருளீட்டுவோர் விலக்கத் தக்கவை

குலம்விற்றுக் கொள்ளும் வெறுக்கையும் வாய்மை
நலம்விற்றுக் கொள்ளும் திருவும் — தவம்விற்றூங்
கூனோம்பும் வாழ்வும் உரிமைவிற் றுண்பதூஉம்
தானோம்பிக் காத்தல் தலை. (4)

### இன்சொலின் இன்றி யமையாமை

ஈகை அரிதெனினும் இன்சொலினும் நல்கூர்தல்
ஓஒ கொடிது கொடிதம்மா; நாகொன்று
தீவினைக் கம்மியனல் வாய்ப்பூட் டிடப்படின்மற்
றுவா இவரென்செய் வார். (5)

—குமரகுருபர சுவாமிகள்

## 3. அறநெறிச் சாரம்

### அறம்

இன்சொல் விளைநிலமா ஈதலே வித்தாக
வன்சொற் களைகட்டு வாய்மை யெருவட்டி
அன்புநீர் பாய்ச்சி அறக்கதி ரீனவோர்
பைங்கூழ் சிறுகாலைச் செய். (1)

### வயிற்றுப்பாடு

போற்றியே போற்றியே யென்று புதுச்செல்வம்
தோற்றியார் கண்ணெல்லாம் தொண்டேபோல் — ஆற்றப்
பயிற்றிப் பயிற்றிப் பலவுரைப்ப தெல்லாம்
வயிற்றுப் பெருமான் பொருட்டு. (2)

### உண்மைச் சுற்றம்

நல்லறம் எந்தை; நிறையெம்மை; நன்குணரும்
கல்வியென் தோழன்; துணிவெம்பி;—அல்லாத
பொய்ச்சுற்றத் தாரும் பொருளோ பொருளாய
இச்சுற்றத் தாரின் எனக்கு. (3)

### ஆராய்ச்சியில் நடு நிலைமை

காய்த லுவத்த லகற்றி ஒருபொருட்கண்
ஆய்த லறிவுடையார் கண்ணதே — காய்வதன்கண்
உற்ற குணந்தோன்று தாகும் உவப்பதன்கண்
குற்றமும் தோன்று கெடும். (4)

### அடக்கம்

'பல கற்றோம் யாம்' என்று தற்புகழ வேண்டா
அலர் கதிர் ஞாயிற்றைக் கைக்குடையும் காக்கும்
சில கற்றார் கண்ணும் உளவாம் பல கற்றார்க்கு
அச்சாணி அன்னதோர் சொல் (5)

—முனைப்பாடியார்.

குறிப்புரை :

1. **நாலடியார்:** இதன் குறிப்பு முன்னர் கொடுக்கப் பட்டுள்ளது.

அருஞ்சொற்பொருள்:

1. அறிவது - அறிந்துகொள்ள வேண்டுவன; அடங்கி – அடக்கம் உடையவராய்; அஞ்சுவது - அஞ்சத் தக்க பழி பாவ மான காரியங்களுக்கு; உலகு உவப்ப - உலகில் உள்ள மக்கள் மகிழும்படியாக; எஞ்ஞான்றும் - ஒரு பொழுதும்; அரிது – இல்லை.

2. அங்கண் விசும்பு - இடமகன்ற ஆகாயம்; திங்கள் – சந்திரன்; சான்றோர் – சான்றாண்மைக் குணங்கள் உடையவர்; ஒப்பர் – ஒப்புமை உடையவராவார்; மறுவு - கறையாகிய குற்றம்; ஆற்றார் – பொறார்; தெருமந்து - வருந்தி; தேய்வர் - இறந்து படுவர்,

3. வைகல் - நாள்; பண்பு உடையார்கண் படாஅவாம் - பண்பு உடையவர்களிடத்து இல்லையாம்.

4. வாண் மதியம் - ஒளி மிகுந்த சந்திரன்; முயல் - முயல் வடிவாக இருக்கும் கறையைக் குறித்தது; தொழப்படும் – வணங்கப்படும்; சீர்மை குன்றியவன் என மாற்றுக; குன்று அன்னார் - நற்குணங்களால் மலை போன்ற பெருமையுடைய பெரியோர்; கேண்மை - நட்பு.

5. சேர்ந்த இனத்தால் - சேர்ந்த சிற்றினம் காரணமாக; வெறி கமழ் – மணம் வீசுகின்ற; வேம் - வெந்துபோகும்.

குறிப்புரை:

2. **நீதி நெறி விளக்கம்:** இந்நூல் குமரகுருபர சுவாமி களால் இயற்றப்பட்டது. ஆசிரியரைப் பற்றிய குறிப்புகள் முன்னர் எழுதப்பட்டுள்ளன.

அருஞ்சொற்பொருள் :

1. தம் புகழைத் தாமே எண்ணுதலினால் ஆகும் குற்றம் இச் செய்யுளில் சொல்லப்படுகிறது. வியப்பிப்பான் - பிறரைக் கொண்டு தன்னை வியக்கும்படி செய்பவன்; தீச்சுடர் - விளக்கு; வளர்த்தல் அற்று - வளர்த்தல் போல்வது; நலம் – இன்பம்.

2. களைகண் ஆ – பற்றுக்கோடாக; உற்றுழி – வேண்டும் இடத்து; உன்னி - கருதி; மற்று ஓர் விளைவு - உடம்பால் அடையத் தக்க வேறு தாழ்வான பயன்கள்; வெறுமை+உடம்பு வெற்றுடம்பு - பிறர்க்குப் பயன்படாத உடம்பு; தளர் நடையது - அழியுந்தன்மையது; புகழ் உடம்பு – புகழாகிய உடம்பு.

3. காலம் - ஏற்ற காலம்; இடம் - வெற்றி பெறுவதற்கு உரிய இடம்; மூலம் - காரணம்; விளைவு – பயன்; சூழ்வன - ஆராய வேண்டுவன; துணைமை - வினைக்குத் துணை செய்யும் நண்பர்கள்; ஆள்வினை - முயற்சி.

4. குலம் - குலத்திற்கு உரிய ஒழுக்கம்; வெறுக்கை – செல்வம்; நலம் - நன்மை; திரு - செல்வம்; தவம் விற்று - தவத்தினை அழித்து; ஊன் – உடல்; உரிமை - தனக்கு உரியாள் - மனைவி; ஓம்பிக் காத்தல் – வராதபடி குறிப்பொடு காத்தல்.

5. நல்கூர்தல் - வறுமை யுடையவ ராதல்; கொடிது கொடிது - அடுக்குத்தொடர்: நாகொன்று - நாவினை வருத்தி; தீவினைக் கம்மியன் - தீவினையாகிய கம்மியன்; ஆவா - இரக்கப் பொருளைக் காட்டும் இடைச்சொல்.

குறிப்புரை:

3. அறநெறிச்சாரம்: இந்நூலை இயற்றியவர் முனைப்பாடியார் ஆவர். தென் ஆர்க்காடு ஜில்லாவில் முனைப்பாடி என்ற ஊரில் பிறந்தவர். இருநூற்று நாற்பத்தாறு வெண்பாக்களைக் கொண்ட இந்நூல் காட்சி, ஞானம், ஒழுக்கம் என்ற பகுப்புகளைப் பெற்றுள்ளது.

1. இன் சொல் - இனிய சொற்களைக் கூறுதலே; ஈதல் - வறியோர்க்கு ஒன்றினைக் கொடுத்தல்; கட்டு - நீக்கி; எருவு+அட்டி – எருவட்டி: அட்டி - சேர்த்து; பசுமை+கூழ் - பைங்கூழ்; சிறுகாலே - இளமைப்பருவத்திலேயே.

2. போற்றியே - பாதுகாப்பாயாக; தொண்டு - அடிமை; ஆற்ற - மிகவும்.

3. என்+தந்தை - எந்தை; என்+அம்மை - எம்மை; எம்பி - என் தம்பி; பொருளாய சுற்றம் - உண்மைச் சுற்றம்.

4. காய்தல் - வெறுத்தல்; ஆய்தல் - ஆராய்தல்; உற்ற - பொருந்திய; கெடும் - மறையும்.

5. ஞாயிறு - சூரியன், அச்சாணி அன்னதோர் சொல் - அச்சாணி போன்ற உறுதியான (அவசியமான) சொல்.

# III. கதை

## 1. சீகாளத்திப் புராணம்

### கண்ணப்ப நாயனாரின் பக்தி

செய்யகண் ணீர ரும்பச்
    செறிமயிர் பொடிப்ப "வாதன்
கையகப் பட்ட தெய்வக்
    கதிர்விடு மணி'யி னுயேற்
கையன்வந் தகப்பட் டா"னென்
    றணியெயி றிலங்க நக்கு
மெய்யெலாம் மெய்யன் பாய
    விடலைமற் றின்ன சொல்வான். 1

"யானையும் புலியும் எண்கும்
    யாளியும் முளவும் கூர்ங்கோட்
டேனமுந் திரியுங் காட்டுள்
    எந்தை!நீ துணையு மின்றிக்
கூனல்விற் றடக்கை வேடர்
    குலமென இருப்ப தென்ன?
ஊனுண வுனக்கி யாவர்
    உண்கெனத் தருவர்? அந்தோ! 2

"சாமி!நீ தனியே யீண்டுத்
    தங்குதல் தரித்த லாற்றேன்!
ஏமநல் லுடுப்பூர்க் கின்னே
    என்னொடு வருதல் வேண்டும்;
நீமன மிரங்காய் எந்தாய்!"
    எனப்பல நிகழ்த்தி னுன்அக்
கார்மழை யனையான் அற்புக்
    கடலினுக் கெல்லை யுண்டோ? 3

மறுமொழி இறைவ னென்றும்
வழங்கல விருப்ப, மீளி
"இறைதிரு உளத்தி னெண்ணம்
இவ்வயி னிருத்தல் போலும்
சிறியனேன் இனியித் தெய்வ
சிகாமணி தன்னை நீங்கில்
உறுவனோ?உயிரி னோ"டென்
றுரைத்தனன் நின்றான் ஆங்கே. 4

பின்புவேட் டுவர்தங் கோமான்,
"பெரும்பக லாயிற் றன்றோ?
என்பெருந் துணையாய் நின்ற
இறைவனார் மிகப்ப சித்தார்;
இன்சுவை யூன்கொ ணர்ந்திங்
கிடல்வேண்டும் என்ன நீங்கில்
கொன்சின விலங்கின் ஈட்டம்
குறுகியென் செயுமோ?கெட்டேன்" 5

என்றுசா லவும்இ ரங்கி,
'எரிபசி மிகாத முன்னம்
சென்றொரு கணத்துட் கொண்டு
திரும்புவ' மெனத்து ணிந்து
"குன்றிடை யெனக்கு வாய்த்த
குலமணி விளக்கே! யெந்தாய்!
உன்தழற் பசித ணிப்ப
உறுசுவை யிறைச்சி கொண்டே. 6

"உழுந்துருள் பொழுதின் மீள்வேன்;
ஒருகண மேனுந் தாழேன்;
வழங்குறு கொடுவி லங்கு
வருமென அஞ்சேல் ஐய!
எழுந்துமேல் வந்த தாயின்
என்னைஒய்! எனக்கூ" வென்று
குழைந்தவிற் றடக்கை கூப்பிக்
குறவர்கோன் அரிதின் நீங்கி. 7

கடிக்கடி மனையுள் நின்ற
'கன்றகல் புனிற்றுப் போல'
அடிக்கடி திரும்பி நின்றே
ஐயர்தந் தனிமைக் கேங்க
வடிக்கடி யம்பு பட்டு
மழைமுகில் எனக்கி டக்கும்
கிடிக்கடி வேட்டைக் கானங்
கிளர்கடுங் காலிற் சென்றான் 8

[திண்ணனார் இறைவனுக்கு வேண்டும் உணவு கொண்டு விரைந்து வந்தார். திண்ணனாரது பேரன்பைச் சிவகோசரி யாருக்குக் காட்டக் காளத்தியப்பர் தமது வலது கண்ணில் இரத்தம் ஒழுக இருந்தார். இதனைக் கண்டார் திண்ணனார்]

"மலையிடை எனக்கு வாய்த்த
மரகத மணியே! செம்பொன்
இலகொளிக் குன்றே! எந்தாய்!
எம்பிரான்! நின்கண் புண்ணீர்
கலுழ்தரற் கென்னை கொல்லோ
காரணம்! திருவாய் சற்றும்!
அலர்கிலை என்கொல்?" என்றான்
ஆவிசோர்ந் தருகு சென்றான். 9

"யானினி இதற்கென் செய்வேன்?"
எனஎண்ணி நிற்ப 'ஊனுக்
கூனிடல் வேண்டும்' என்னும்
உரைகண்டு தன்கண் வாங்கி
வானவன் தடங்கண் இட்டால்
மாறுமென் றுளம்வ லித்துக்
கானவர் பெருமான் தன்கண்
கணையினால் இடந்திட் டானால். 10

இடந்ததன் கண்ணை அண்ணல்
இறைகண்ணில் அப்பச் சோரி
மடந்தையோர் பாகன் ஆங்கே
மாற்றினன் அதனைக் கண்டான்
அடங்கரு மகிழ்ச்சி என்னும்
ஆழ்கடல் அதனுள் தாழ்ந்து
முடங்குளை மடங்கல் அன்னன்
முழவுத்தோள் கொட்டி யார்த்தான் 11

இன்னணம் உவகை வெள்ளத்
திடையவன் உலாவும் வேலை
முன்னவன் பின்னும் அன்னன்
முதிர்ந்தபேர் அன்பு காட்டச்
செந்நிறக் குருதி மற்றைத்
திருவிழி யினுஞ்சேர் வித்தார்
அன்னது மைந்தன் ஆர்வ
ஆர்கலி குடித்த தன்றே. 12

"இன்னமோர் கண்ணெ னக்குண்
டாதலின் இதற்கஞ் சே"னென்
றன்னது களைந்த காலை
ஐயர்கண் அறிதற் காகத்
தன்னொரு செருப்புக் காலைத்
தம்பிரான் கண்ணி லூன்றிப்
பின்அடு கணைகண் வைத்தான்;
பிரானது பொறுக்க லாற்றான். 13

மறைமொழி பிறந்த தம்வாய்
மலர்திறந் தருட்பே ராழி
இறைவர் "**கண் ணப்ப நிற்க**"
எனமுக்கால் மொழிந்து கொண்டே
கறையணற் கங்க ணத்த
கையினாற் பிடித்தார் செங்கை
உறுநறைப் பொலம்பூ மாரி
உம்பர்மண் புதையப் பெய்தார். 14

—**சிவப்பிரகாச சுவாமிகள்**

குறிப்புரை :

சீகாளத்திப் புராணம்: இப்பகுதியில் கண்ணப்ப நாயனரது வரலாறு சொல்லப்படுகின்றது. இந்நூலை இயற்றியவர் சிவப் பிரகாச சுவாமிகள் ஆவார்; வீரசைவர்; இற்றைக்குச் சற்றேறக் குறைய 300 ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்தவர். நன்னெறி, பிரபு லிங்க லீலை, பழமலையந்தாதி முதலியன இவரியற்றிய வேறு நூல்களாம்.

அருஞ்சொற்பொருள்:

1. மயிர்பொடிப்ப - மயிர்க்கூச் செறிய; ஐயன் - தலைவனாகிய இறைவன்; நக்கு - சிரித்து: விடலை - கண்ணப்பன் (திண்ணனார்); ஆதன் - குருடன்.

2. எண்கு - கரடி; ஏனம் - பன்றி; கூனல் வில் – வளைந்த வில்; வில்+தடக்கை - விற்றடக்கை; உனக்கு யாவர் - உனக்கி யாவர் ('இ' குற்றியலிகரம்)

3. ஈண்டு - இவ்விடம்; ஏமம் – பாதுகாவலையுடைய; இன்னே - இப்பொழுதே; அற்பு - அன்பு.

4. வழங்கலன் இருப்ப - கூறாது இருக்கவே; மீளி - வலியுடைய திண்ணனார்; இவ்வயின் - இவ்விடம்.

5. கொணர்ந்து - கொண்டுவந்து; (கொணு - பகுதி) நீங்கில் - நீங்குவோமானல்; ஈட்டம் - கூட்டம்.

6. சாலவும் - மிகவும் (உரிச்சொல்); திரும்புவம் - திரும்பி விடுவோம் (தன்மையிடத்து வினைச்சொல்); தழல் பசி - மிக்க பசி;

7. உழுந்து உருள் பொழுது - மிகக் குறுகிய நேரத்தில்; தாழேன் – காலந் தாழ்த்த மாட்டேன்; அஞ்சேல் - பயப்படாதிர்; கூவு - அழையும்; குழைந்த வில் - வளையு மியல்புடைய வில்.

8. ஐயர் - தலைவனாகிய சிவபெருமான்; கடுங் காலிற் சென்றான் – விரைந்து சென்றான்.

9. புண்ணீர் - இரத்தம்; கலுழ்தரற்கு - ஒழுகுவதற்கு; திருவாய் சாற்றும் - கூறியருளும்; நின்கண் புண்ணீர் கலுழ் தரற்குக் காரணம் என்னை கொலோ என்று சேர்க்க.

10. உரை – மொழி; வாங்கி - எடுத்து; வானவன் – இறைவன்; உளம் வலித்து - மனந்துணிந்து.

11. அண்ணல் - பெருமைக் குணம் உடையவன்; மடந்தை ஓர் பாகன் - உமை யம்மையை ஒரு பாகத்தே கொண்ட சிவ பிரான்; சோரி மாற்றினன் எனச் சேர்க்க; முடங்கு உளை மடங்கல் அன்னான் – வளைந்த பிடரி மயிரினையுடைய சிங் கத்தையொத்த வலிமையுடைய திண்ணன்; ஆர்த்தான் - ஆர வாரஞ் செய்தான்.

12. இன்னணம் - இவ்வாறு; முன்னவன் - இறைவன்; சோர்வித்தார் - ஒழுகவிட்டார்.

13. களைந்த காலை - நீக்கிய பொழுது; செருப்புக்கால் – செருப் பணிந்த பாதம்; தம்பிரான் - சிவபிரான்; அடு கணை - காய்ச்சப் பட்ட அம்பு; பொறுக்கல் ஆற்றான் – பொறுக்க முடி யாதவனாய்.

14. மறை - வேதம்; கங்கணத்த - கங்கணம் கட்டப் பெற்ற; உம்பர் – தேவர்.

---

# IV. வருணனை

## தென்றல்

பொங்கரி னுழைந்து வாவி புகுந்துபங் கயம்து ழாவிப்
பைங்கடி மயிலே முல்லை மல்லிகைப் பந்தர் தாவிக்
கொங்கலர் மணங்கூட் டுண்டு குளிர்ந்துமெல் லென்று தென்றல்
அங்கங்கே கலைகள் தேரும் அறிவன்போ லியங்கு மன்றே. 1

—பரஞ்சோதி முனிவர்

## ஆய்ச்சியர் தயிர் கடைதல்

தோயும் வெண்டயிர் மத்தொலி துள்ளவும்
ஆய வெள்வளை வாய்விட் டரற்றவும்
தேயு நுண்ணிடை சென்று வணங்கவும்
ஆய மங்கைய ரங்கை வருந்துவார். 2

—கம்பர்

## ஊஞ்சல்

ஒரைவர் ஈரைம் பதின்மர் உடன்றெழுந்த
போரிற் பெருஞ்சோறு போற்றாது தானளித்த
சேரன் பொறையன் மலையன் திறம்பாடிக்
கார்செய் குழலாட ஆடாமோ ஊசல்
கடம்பெறிந்த வாபாடி யாடாமோ வூசல். 3

—இளங்கோவடிகள்

குறிப்பு

1. **தென்றல்:** இதன் ஆசிரியர் பரஞ்சோதி முனிவர். இவர் திருமறைக் காட்டிலே சைவ வேளாளர் குலத்திலே தோன்றியவர். காலம் கி. பி. 17-ம் நூற்றுண்டு.

அருஞ்சொற்பொருள் :

பொங்கர் – சோலை; வாவி – குளம்; பங்கயம் - தாமரை; துழாவி – அலைத்து; கடி – மணம்; கொங்கு – தேன்; கலைகள் – நூல்கள்

2. **ஆய்ச்சியர் தயிர் கடைதல்:** இதன் ஆசிரியர் கம்பர். இவர் சோழநாட்டிலே தேரெழுந்தூரிலே உவச்சர் குலத்திலே தோன்றியவர். காளியின் அருள் பெற்றவர்; இவர் கால அரசன் அநபாயன். காலம்: கி. பி. 12-ம் நூற்றுண்டு.

அருஞ்சொற்பொருள் :

துள்ளவும் – ஒலிக்கவும்: வளை – சங்கு; அரற்றவும் - ஒலிக்கவும்; அங்கை – அழகிய கை.

3. **ஊஞ்சல்:** இதன் ஆசிரியர் இளங்கோவடிகள். இவர் சேர அரசர் பரம்பரையைச் சேர்ந்தவர். காலம் கி. பி. இரண்டாம் நூற்றுண்டு.

அருஞ்சொற்பொருள் :

உடன்று – மாறுபட்டு; திறம் – வலிமை; குழல் – கூந்தல்.

---

## V. பல் சுவை

### இலக்கிய மும்மணிகள்

வள்ளுவர் தந்த திருமறையைத் — தமிழ்
மாதின் இனிய உயிர்நிலையை
உள்ளம் தெளிவுறப் போற்றுவமே — என்றும்
உத்தம ராகி யொழுகுவமே 1

பாவின் சுவைக்கட லுண்டெழுந்து — கம்பன்
பாரிற் பொழிந்ததீம் பாற்கடலை
நாவி னினிக்கப் பருகுவமே — நூலின்
நன்னய முற்றுந் தெளிகுவமே 2

தேனிலே ஊறிய செந்தமிழின் — சுவை
தேரும் சிலப்பதி காரமதை
ஊனிலே எம்முயிர் உள்ளளவும் — நிதம்
ஓதி யுணர்ந்தின் புறுவோமே 3

**—தேசிக விநாயகம் பிள்ளை**

### சீதக்காதி இறந்தபோது பாடியன

தேட்டாளன் காயல் துரைசீதக் காதி சிறந்தவச்ர
நாட்டான் புகழ்க்கம்பம் நாட்டிவைத் தான்தமிழ் நாவலரை
ஓட்டாண்டி யாக்கி அவர்கள்தம் வாயில் ஒருபிடிமண்
போட்டான் அவனும் ஒளித்தான் சமாதிக் குழிபுகுந்தே. 4

**—படிக்காசுப் புலவர்**

## தமிழ்த் தாய்

இயற்கையிலே கருத்தாங்கி இனிமையிலே வடிவெடுத்துச்
செயற்கைகடந் தியலிசையில் செய்நடமே வாழியரோ 5
தமிழென்ற போதினிலே தாலூறல் உண்மையதே
அமிழ்தாகி உயிரினுக்கும் யாக்கைநிலை செழிப்புறுமே 6
பழந்தமிழர் வீரஒளி படர்ந்தீண்டில் இந்நாளே
இழிந்தோடும் இடர்ப்பிணிகள் எழுந்தாயின் தமிழ்நடமே. 7
சாதிமதச் சண்டையெலாம் தமிழின்ப நுகரார்க்கே
ஆதியிலே சண்டையிலை அருந்தமிழை அருந்தினரால். 8
பன்மொழியி லுளகலைகள் பசுந்தமிழி லுருக்கொள்ள
நன்முயற்சி யெழவேண்டும் நலமுறுவள் தமிழ்த்தாயே. 9

—திரு. வி. கலியாணசுந்தர முதலியார்

குறிப்பு:

1. இலக்கிய மும்மணிகள்: இதன் ஆசிரியர் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை ஆவார். இவர் தற்சமயம் நாகர் கோயிலை அடுத்த புத்தேரியில் வசித்து வருகிறார்.

அருஞ்சொற்பொருள்:

*மறை - வேதம், பாவின் - பாக்களின், தீம் - இனிய, பருகுவம் - குடிப்போம், நயம் - நீதி, ஓதி - காற்று.*

2. *இதன் ஆசிரியர் படிக்காசுப் புலவர். சீதக்காதியின் காலத்தவர்.*

அஞ்சொற்பொருள்:

*புகழ்க் கம்பம்-வெற்றித்தூண், நாட்டி -நிலைபெறச்செய்து.*

3 தமிழ்த் தாய்: *இதன் ஆசிரியர் திரு. வி. கலியாண சுந்தர முதலியார் ஆவார். இவர் தற்சமயம் சென்னையில் வாழ்ந்து வருகிறார். பழுத்த தேசத் தொண்டர். சமரச நோக்குடையார். பெண்கள் உயர்வுக்குப் பாடுபடுபவர். பல உரைநடை நூல்களும், செய்யுள் நூல்களும் எழுதியுள்ளார்.*

அருஞ்சொற்பொருள்:

*தாலூறல் - நாக்கு நீர்ஊறுதல், அமிழ்தாகி - இனிமையாகி, இடர் - துன்பம், நலமுறுவள் - நன்மையடைவாள்.*

உரை நடைப் பகுதி

## 1. பாரதியார்

திருநெல்வேலியைச் சார்ந்த எட்டய புரத்தில் ஆயிரத்து எண்ணூற்று எண்பத்து இரண்டாம் ஆண்டு நவம்பர் திங்களில் சி. சுப்பிரமணிய பாரதியார் பிறந்தார். அவர் தந்தையார் பெயர் சின்னசாமி அய்யர் என்பது. தாயார் பெயர் இலட்சுமி என்பதாகும். தனது ஐந்தாவது வயதிலேயே பாரதியார் அன்னையை இழந்தார். மறு மணம் செய்து கொண்ட சின்னசாமி ஐயருக்கு ஓர் ஆண் குழந்தையும், ஒரு பெண் குழந்தையும் பிறந்தன.

"விளையும் பயிர் முளையிலே தெரியும்" என்பதற் கொப்பப் பாரதியார் இளமையிலேயே தமிழ்ப்பற்று மிக்கவராகத் திகழ்ந்தார். திருவள்ளுவர், இளங்கோ, கம்பர், தாயுமானவர் முதலிய புலவர்களின் இலக்கி யங்களைத் தந்தை கற்பிக்கச் சுவையுடன் அவற்றைக் கற்றார். அளவு கடந்த பற்றும் இவருக்கு இவர்களின் இலக்கியங்களில் இளமையிலேயே ஏற்பட்டது. இப்புலவர்களைப் போலவே தாமும் ஆகவேண்டு மென்று எண்ணினாரோ என்னவோ? இவரும் இளமை முதலே கவிகள் புனையத் தொடங்கி விட்டார்! இவர் எப்பொழுதும் எதுகை மோனைகளாக ஏதாவது சொல்லிக் கொண்டே இருப்பாராம். "என்னடா விழிக்கிறாய்? என்று ஆசிரியர் கேட்டால், 'விழி, குழி, பழி, வழி, பிழி, கழி, சுழி, மழி' என்று உள்ளத்துள் அடுக்கிக்கொண்டே செல்வார். உரக்கவும் இதைப் போல் சில வேளைகளில் உரைத்ததும் உண்டு. இவரது பேரறிவைக் கண்டு வியந்தோர் சிலர். ஒன்றுகூடி

ஒரு சிறப்பான விழா நடத்தி, 'பாரதி' என்ற பட்டத்தை இவருக்குச் சூட்டி மகிழ்ந்தனர். இவர்



பாரதியார்

திருநெல்வேலி இந்துஉயர் நிலைப் பள்ளியில் பத்தாவது வகுப்பு வரை படித்தார்.

பாரதியாரின் பதினைந்தாவது வயதிலேயே (1897)-ல் அவருக்குத் திருமணம் நடந்தது. இவரது மனைவியான செல்லம்மாளுக்கு அப்பொழுது ஏழு வயதே ஆகியிருந்தது. இதன் பின் ஒரு ஆண்டே இவர் தந்தை வாழ்ந்தார். தந்தையின் மறைவுக்குப் பின் பாரதியார் காசிக்குத் தன் அத்தை வீட்டுக்குச் சென்றார். அலகாபாத் பல்கலைக் கழகத்தில் வடமொழி

யில் புகுமுக வகுப்புத் தேர்வில் (Entrance) முதல்வ ராய்த் தேறினர். இதுதான் அவர் எழுதிய உயர்ந்த தேர்வு; இதுவே இவர் ஒழுங்காகக் கற்ற பள்ளிப் படிப்பு மாகும்.

எட்டயபுரம் ஜமீன்தாரின் அழைப்பிற் கிணங்கி ஏறக்குறைய நான்கு ஆண்டுகள் ஜமீனில் அலுவல் பார்த்தார். இந்நாளிலும், பாரதியாரின் தமிழ்ப் பற்றும், நாட்டுப் பற்றும் வளர்ந்தே வந்தன. பிறகு 'சுதேச மித்திரன்' என்னும் நாள்தாளில் வேலைக் கமர்ந்தார். விடுதலையையும், தன் போக்கான சுரு சுருப்பையும் விரும்பும் கவியுள்ளம் படைத்த இவர் இயந்திரம் போன்ற இத் தொழிலில் இரண்டரை ஆண்டுகட்கு மேல் நிலைத்திருக்க வில்லை.

பிறகு, திருவல்லிக்கேணி திருமலாச்சாரியார் என்பவரது அச்சகத்தில் '**இந்தியா**' என்னும் வாரப் பத்திரிகையைத் தொடங்கினர். தமிழ் நாடெங்கும் பாரதியாரின் புகழ் அப்பொழுதுதான் பரவியது. அவரது கட்டுரைகளும், கவிதைகளும், கதைகளும் நாட்டுப்பற்றையும், மொழிப்பற்றையும், சீர்திருத்தத் தையும் உண்டாக்கி மக்களை விழிப்படையச் செய்தன. வங்காளப் பிரிவினையால் வளர்ந்த கிளர்ச்சி பாரதி யாரால் மேலும் வளர்ச்சி யடைந்தது. கப்பலோட்டிய தமிழன் வ. உ. சிதம்பரனர் வீறிட்டு எழுந்த காலம் அது. திலகர் தலைமையில் திரண்டவர் கட்கும், மற்றவர் கட்கும் ஏற்பட்ட பிளவால் "சூரத் காங்கிரஸ்" குழப்பத்தில் முடிந்தது. அச்சமயத்தில் பாரதியார் பாடிய பாடல்கள் அக்கால நிலையை விளக்கியதோடு மக்களுக்கு வீர உணர்ச்சியையும் ஊட்டின.

'இந்தியா' பத்திரிகையினால், ஆங்கில ஆட்சிக்கு எதிராகக் கிளர்ச்சி செய்ததாகப் பாரதியாரை எந்த நேரத்திலும் கைது செய்யலாம், என்ற சூழ்நிலை ஏற்பட்டது. சிறை சென்று வாழ்வதை விட ஆங்கில ஆட்சியினின்றும் அயலார் ஆட்சிக்குச் செல்வது நலமெனக் கவிஞர் முடிவு செய்தார். புதுச்சேரி சென்றார் புதுமைக் கவி பாரதியார். ஆங்கில அரசினராலும், வறுமையாலும் அவர் அங்கும் தொல்லைப்பட நேர்ந்தது. பாரதியாரின் விடுதலைக்கான முயற்சியில் ஈடுபட்டவர்கள் அவரை மன்னிப்புக் கேட்டுக் கொள்ளுமாறு வேண்டினார்கள். பாரதியார் அதற்குச் சிறிதும் விழைய வில்லை. திரும்பவும் புதுவையிலிருந்து பாரதியாரின் 'இந்தியா' வெளிவந்தது. ஆங்கில எல்லையில் அதற்கும் தடை விதித்ததால் அது நின்றே விட்டது. பல தொல்லைகள் சூழ்ந்த பொழுதும் நண்பர்களின் கூட்டுறவும் சுதேசமித்திரன் தாளும் பாரதியாருக்குச் சிறிது ஆறுதல் அளித்து வந்தன.

இக் காலத்தில்தான் பாரதியாருக்குப் பல நெருங்கிய நண்பர்கள் ஏற்பட்டனர். அண்மையில் காலஞ்சென்ற வ. ரா. அவர்களுள் ஒருவர்; வ. உ. சிதம்பரனார் மற்றவர். புதுவையில் வாழ்ந்து வருகிற இன்றைய புரட்சிக் கவிஞரான பாரதிதாசன் மற்றொருவர். அரவிந்தர், வ. வெ. சு. ஐயர் முதலியோரும் இவரோடு தோழமை பூண்டொழுகினர். பாரதியாரின் உற்ற துணைவர்களாக இருந்து பண உதவி செய்தவர்களையும் இங்குக் குறிப்பிட வேண்டும். முதல்வர் 'முத்தியாலுப் பேட்டை கிருட்டிணன்' எனப்படும்

திரு. வெ. கிருட்டிணசாமிச் செட்டியார் அவர்கள். இரண்டாமவர் திரு. சுந்தரேசையர் அவர்கள் ஆவர். இவர்களிடம் பாரதியாருக்கு அன்பும் மிகுந்த நன்றியும் உண்டு.

பாரதியார் ஆங்கில ஆட்சிக்குள் வந்தார். அவரை அரசாங்கத்தார் கைது செய்தனர். தக்க குற்றம் இன்மையால் பின்னர் விடுதலை செய்தனர். பிறகு கீழ்க் கடையம் சென்று அச்சிற்றூரில் வாழ்ந்தார். அங்குப் பாரதியார் எல்லாச் சாதியின ருடனும் சேர்ந்து உண்டதால், குடும்பத்திலிருந்தே சாதியினரால் பிரிக்கப் பட்டார். அப்பொழுது அந்த உயர்ந்த பண்பட்ட உள்ளம் என்ன எண்ணி யிருக்கும்? இத் தொல்லை களுக் கெல்லாம் காரணம் மக்களின் அறிவின்மை யன்றோ? இதற்கெல்லாம் அவர் அஞ்சி வாழவில்லை. தனது உள்ளத்திற்கு எது நல்லது என்று தோன்றி யதோ, அதையே பாரதியார் சொன்னார்; செய்யவும் செய்தார். உயர் நெறிகள் எல்லாம் ஏட்டளவில் இனிக்கும் இனிப்பை மட்டும் அவர் விரும்பவில்லை. வாழ்விலும் அவை களிநடம் புரியக் காண வேண்டும் என்பது அவரது பேரவா. ஆதலால் அவர் அக்காலத் திய சமூகத்துடன் வாழினும், நெருங்கிய அன்புத் தொடர்பு கொண்டிருப்பினும், போக்கால் ஒரு தனி நற்பண்புள்ள மனிதராகவும், புரிந்துகொள்ள இயலாத இயல்புடையவராகவும் வாழ்ந்தார் எனலாம்.

மீண்டும் ஆயிரத்துத் தொள்ளாயிரத்து இருபதாம் ஆண்டில் சென்னை அடைந்து "சுதேசமித்திரன்" செய்தித் தாளின் துணை ஆசிரியராக அமர்ந்து தொண்டாற்றினார். அன்பு நிறைந்த அக்கவிஞர்

உள்ளம், கண்ட உயிர்களிடத்தெல்லாம் அன்பு செலுத்தியது. திருவல்லிக்கேணி பார்த்தசாரதி கோவில் யானையும் பரந்த அவரது அன்பில் இடம் பெற்று விட்டது. நாளும் ஆலயம் செல்லும் பொழுது யானைக்குத் தேங்காய், பழம் முதலியவற்றை அளித்துச் செல்வர். ஒரு நாள் மதங் கொண்ட அந்த யானை தன் துதிக்கையால் அவரைத் தள்ளி விட்டது. மெலிந்த உடல் இதைத் தாங்காது அல்லலுற்றது. ஆயிரத்துத் தொள்ளாயிரத்து இருபத் தொன்றும் ஆண்டு செப்டம்பர் மாதம் பதினொன்றும் நாள் இரவு அவர் புகழுடல் எய்தினர்.

மேல்நாட்டுக் கலைகள் அனைத்தும் தமிழில் தந்து சிறப்பிக்க வேண்டுமென்பது அவரது நோக்கம். பாரதியார் அயலாரைக் கண்டு அஞ்சித் தனது மதிப்பை இழந்து அவரிடம் கைகட்டி வாய் பொத்தி வாழும் அடிமை வாழ்வை வெறுத்தார். தன் மொழியில் பேசுவதையும், எழுதுவதையும் இழுக்கு என்று கருதித் தனது உள்ளத்தில் வீரமின்மையால், "மொழியில் ஒன்றுமில்லை' என்று சொன்னவர்களை ஆங்காங்கே எள்ளி நகையாடினர். மொழிக்கு அவர் செய்த தொண்டு மிகச் சிறந்ததாகும். அது நாட்டில் விழிப்பை உண்டாக்கி ஒரு எழுச்சியைத் தந்தது.

பாரதியாருக்கு ஏறக்குறைய பதினன்கு மொழிகள் தெரியும். அவரது உரைநடையிலும், பாட்டிலும் ஒரு உயிர்ப்பைக் காணலாம். உரைநடையின் போக்கு அக்கால நிலையை நோக்கச் சிறந்த ஒன்று என்றுதான் கூறவேண்டும். அவரது மொழி பெயர்ப்பில் தனிச் சிறப்பு மிளிர்வதைக் காணலாம். பேரிலக்கியமாக

அவர் நூல் செய்யாம லிருப்பினும் அவரது புலமை அவ்வகை இலக்கியத்தை விடச் சிறந்த பயனை நாட்டிற்குத் தந்தது. நாட்டின் ஏக்கந் தீரவும், ஆக்க வழிகளில் மக்கள் செல்லவும் ஏற்ற வழிகளை அவரது பாடல்களிலும் உரைநடையிலும் பரக்கக் காணலாம். அவரின், "பள்ளி யெழுச்சி" நாட்டை எழுப்புகிறது. "பாப்பா பாட்டு" பண்பை வளர்த்து அன்பைப் பெருக்குகிறது. பாரதியாரின் பாஞ்சாலி, தனது சபதத்தில் ("பாஞ்சாலிசபதம்") பெண்மை விடுதலை கூறி வீரம் பேசிப் பாரதத் தாயின் பண்பை விளக்கி விடுதலை வீரமுழக்கம் செய்கிறாள். 'முரசு" முன்னேற்றத்தை அறைகிறது.

நம் நாட்டின் எதிர்காலம் குறித்து அவர் அன்று கூறிய எல்லாம் இன்று நடந்தும், நிறைவேறிக் கொண்டும் வருகின்றன. புத்தம் புதுக் கருத்துகளைத் தந்து புதுமை நாட்டை வளமாக்க அவர் கூறியவற்றை நன்கறிந்து, தெளிந்து வாழ்தல் அன்றோ நாம் அவருக்குச் செய்யும் நன்றியாகும்! வாழ்க பாரதி இதயம்!

அருஞ் சொற் பொருள் :

பற்று - அன்பு; புனைய – இயற்ற; வியந்தோர் - ஆச்சரியப் பட்டவர்கள்; அலுவல் – வேலை; நாள்தாள் – தினப்பத்திரிகை; வீறு – வேகம்; விழைதல் – விரும்புதல்; உற்ற துணைவர் – நெருங்கிய நண்பினர்; பேரவா – மிகுந்த ஆசை; நாளும் – ஒவ்வொரு நாளும்; அல்லல் – துன்பம்.

1. வினாக்கள் :

1. பாரதியார் பெற்றோரைக் குறித்து எழுதுக.

2. பாரதியாரின் கல்விப் பயிற்சியைப் பற்றி நீர் அறிவதென்ன ?

3. இவர்க்குப் 'பாரதி' என்ற பெயர் எதனுல் ஏற்பட்டது?

4. பாரதியார் 'இந்தியா' என்னும் பத்திரிகையால் செய்த தொண்டுகள் யாவை?

5. பாரதியார் புதுச்சேரியில் சென்று வாழக் காரணம் யாது? அங்கு அவரொடு பழகிய நண்பினர்கள் யாவர்?

6. 'சுதேசமித்திரன்' துணை ஆசிரியராக இவர் ஆற்றிய தொண்டு யாது?

7. பாரதியாரின் இறுதிக்கால வாழ்வைக் குறித்துச் சுருக்கி எழுதுக.

8. பாரதியாரின் நூல்கள் சிலவற்றைக் குறிப்பிடு.

2. கட்டுரை யாக்கம் :

கீழே கொடுத்துள்ள தலைப்புகளில் கட்டுரைகள் எழுதுக:— (ஒவ்வொன்றும் ஒரு பக்கத்தின் மேற்படுத லாகாது)-

1. பாரதியாரின் இளமைப் பருவம்.
2. பத்திரிகை ஆசிரியராகப் பாரதியார் ஆற்றிய தொண்டுகள்.
3. பாரதியாரின் குண நலனும், கொள்கைகளும்.
4. பாரதி நூல்கள்.

3. மொழிப் பயிற்சி :

1. இவற்றை உமது வாக்கியங்களில் அமைத்து எழுதுக:- புனைய, அழைப்பிற்கிணங்கி, விழையவில்லை, விளையும் பயிர் முளையிலே தெரியும், தோழமை பூண்டு, களி நடம்புரிய, பேரவா, ஆங்காங்கே மிளிர்வது.

2. கீழே குறித்தபடி வாக்கியங்களை மாற்றுக:—

 1. இவரது பேரறிவைக் கண்டு வியந்தோர் சிலர் ஒன்று கூடி ஒரு சிறப்பான விழா நடத்திப் பாரதி என்ற பட்டத்தை இவர்க்குச் சூட்டி மகிழ்ந்தனர்.

 (தனி வாக்கியங்களாக)

2. பாரதியாரின் கவிதைகளும் கட்டுரைகளும் நாட்டுப் பற்றை வளர்த்து மக்களை விழிப்படையச் செய்தன.

(பொருள் மாறாது எதிர்மறை வாக்கியங்களாக)

3. பல தொல்லைகள் சூழ்ந்த பொழுதும் நண்பர்களின் கூட்டுறவும் சுதேசமித்திரனும் பாரதியார்க்குச் சிறிது ஆறுதல் அளித்தன

('பாரதியார்' என்று வாக்கியத்தைத் தொடங்குக)

4. பாரதியார் எல்லாச் சாதியினரொடும் சேர்ந்து உண்ட தால் குடும்பத்திலிருந்தே சாதியினரால் பிரிக்கப் பட்டார்.

(செய்வினை வாக்கியமாக மாற்றுக)

5. நமது நாட்டை வளமாக்கப் பாரதியார் கூறியவற்றை நன்கறிந்து, தெளிந்து வாழ்தல் அன்றோ நாம் அவர்க்குச் செய்யும் நன்றியாகும்!

(இக்கருத்தை வேறுவகையில் அமைத்தெழுதுக)

---

## 2. கங்கை கொண்ட சோழபுரம்

"படைப்புக் காலந்தொட்டு மேம்பட்டு வரும் பழங்குடியினர் சேர சோழ பாண்டியர்" என்று பரிமேலழகரால் பாராட்டப்படும் பெருமை வாய்ந்த குடியைச் சேர்ந்தவர் சோழவரசராவர். சோழர் என்னும் பெயர், குடிப் பெயரே எனலை

"குடிப் பெயராவன கூறுங் காலைச்
சேரன் சோழன் பாண்டியன் என்றிப்
போல் வன பிறவும் பொருத்தங் கொளலே"

என்னும் பன்னிரு பாட்டியற் சூத்திரமும் வலியுறுத்தும்.

இத்தகைய பழம் பெருமை வாய்ந்த சோழர் குடியுள், சோழன் கரிகாலன் இமயம் வரை படையெடுத்துச் சென்று, வடநாட்டரசர் பலரை வெற்றி பெற்று வந்து, நாட்டைச் சிறப்புற ஆண்டான். பிற்காலச் சோழருள், முதல் இராஜ ராஜன் என்பான் சோழநாட்டை விரிவாக்கி அரசாண்டான். கி. பி. 1012-ல் முடிசூட்டிக் கொண்ட இராஜேந்திரனே சோணாட்டரசை மேலும் விரிவடையச் செய்து, சோழ சக்கிரவர்த்தியாக விளங்கினான்.

இராஜேந்திரன் முடிசூட்டிக் கொண்டதும், சோழ நாட்டோடு, துங்கபத்திரை, கிருஷ்ணா நதிகளைச் சார்ந்த இடத்தையும், வடக்கே ஒட்டரநாடு, வேங்கி, கலிங்கம் என்னும் இவற்றையும் வெற்றி பெற்று அரசாண்டான். இத்துடன் கடற்போர் செய்து இலங்கையையும் வென்றான்.

இவ் வெற்றியோடு அமைவு பெருத இவன், வட நாட்டின் மீது படையெடுத்துச் சென்ருன்; வடநாடு செல்லும் பொழுது இடையில் உள்ள நாடுகளாகிய, ஒரிஸா, வங்காளம், மத்திய மாகாணம் முதலிய இடங்களிலுள்ள அரசர்களை எல்லாம் வென்று கங்கைக் கரையை அடைந்தான். இவ்வாறு வெற்றி பெற்ற அரசர்கள் தலைமீது கங்கைநீரைக் குடங்களில் ஏற்றித் தன்னுடாகிய சோழநாடு மீண்டான். இவ்வெற்றியி லிருந்து இராஜேந்திரனுக்குக் கங்கை கொண்ட சோழன் என்னும் ஒரு புதிய சிறப்புப் பெயர் ஏற்பட்டது.

இராஜ ராஜன் தன்னுடைய வெற்றிக்குப் பின்னர் எவ்வாறு தஞ்சை இராஜராஜேச் சுரத்தைக் கட்டி அழியாப் புகழ் பெற்ருனே அவ்வாறே இவனும் ஒரு கோயில் கட்டத் தீர்மானித்தான். அதற்கு ஏற்ற இடமாகத் திருச்சிராப்பள்ளி ஜில்லா, உடையார் பாளையந் தாலுகாவில் ஒரு பரந்த இடத்தைத் தேர்ந்து கொண்டான். அந்த இடத்திலேயே தன் கங்கை வெற்றியை நிலை நாட்ட எண்ணினன். அவ்வாறு வெற்றி நாட்டி உண்டாக்கிய நகரமே கங்கை கொண்ட சோழபுரம் என்பது. இப்பொழுது அது ஒரு சிற்றூராகக் காட்சி யளிக்கிறது. ஒரு காலத்தில் இவ்வூர் ஒரு பெரிய நகரமாக விளங்கியது என்பதை இதைப் பார்ப்பவர் எவரும் எளிதில் தெரிந்து கொள்ளுதல் கூடும். அக்காலத்தில் இவ் வூருக்கு அருகிலுள்ள பல சிற்றூர்களுக்கும், பெரிய நகரத்தின் பல பாகங்கட்கும் இடப்பட்டிருந்த பெயர் களே இப்பொழுதும் வழங்கி வருகின்றன. பிற்காலத் தில் கவனிப்பாரற்று இந்நகரம் சீர்கெட்டு விட்டது.

இப்பொழுது, இவ்வூர் காடும், செடியும் வளர்ந்து பாழாய்க் கிடக்கின்றது.

இராஜேந்திரன் நிர்மாணித்த இந்நகர எல்லையில் இப்பொழுது காணப்படுபவை, பெரிய சிவன் கோயிலும், ஏரியுமே ஆகும். இவன் கட்டிய கங்கை கொண்ட சோழபுரக் கோயில், ஆறு கோபுரங்களைப்



"கங்கை கொண்ட சோழீச்சுரம்"

பெற்றுப் பெரிதாக அமைந்திருந்தது. இக்கோயிலின் அமைப்பு முற்றிலும், தஞ்சைப் பெரிய கோயிலைப் போன்றதேயாம். இக்கோயிலின் பெயர் கங்கை கொண்ட சோழீச்சுரம் என்பது. தஞ்சைப் பெரிய கோவிலை விட, சிற்ப வேலைப்பாடு சிறக்க அமைந்துள்ளது. ஆனால், அக்கோவிலின் பெரும் பகுதி இப்பொழுது இடிந்து உரு மாறிக் காணப்படுகிறது.

வெளிப் புறத்து மதில்களே காணப்படவில்லை. கிழக்குக் கோபுரமும் இலமாகவே காட்சி அளிக்கிறது. இப்பொழுது ஓரளவு காணக் கூடிய நிலையில் உள்ளவை



"கங்கை கொண்ட சோழீச்சுரம்" (விமானத் தோற்றம்)

கர்ப்பக் கிரஹமும், அதனைச் சுற்றியுள்ள பிராகாரமுமே ஆகும்.

இக்கோயில் விமானம் வெகு அழகாகத் தஞ்சைப் பெரிய கோயில் விமானத்தைப் போலவே கட்டப் பட்டுள்ளது. இது நூறு அடிச் சதுரம் கொண்டது; ஒன்பது அடுக்குகளைப் பெற்றுள்ளது. முதல் இரண்டு அடுக்குகள் ஒன்றன்மேல் ஒன்றாக நிமிர்ந்து நிற்பது போல் காணப்படுகின்றன. மற்ற அடுக்குகள் மேலே போகப் போகச் சிறுத்துக் குறுகிக் காணப்படுகின்றன. விமானத்தின் நான்கு புறங்களிலும் வாசல்களும், மாடங்களும் உள்ளன. விமானத்தை அழகிய வேலைப்பாடமைந்த பதுமைகள் அலங்கரிக்கின்றன. உச்சி தஞ்சைக் கோயிலைப் போன்று ஒரே கல்லாலான சிகரத்தை உடையது. இந்த விமானம் மட்டில் நூற்று எழுபது அடி உயரம் உடையது. சிறிது காலத்துக்கு முன்பு இடியினால் விழுந்த கலசத்தை, மீட்டும் உச்சியில் வைத்துள்ளார்கள்.

கோயிலில் உள்ள மூல லிங்கம் மிகப் பெரியது. அது ஒரே கல்லால் அமைக்கப் பட்டது. அஃது இப்பொழுது உச்சியில் இரண்டாகப் பிளவுபட்டுக் காணப்படுகிறது. இடியால் பிளவுபட்டு விட்டதென்று அவ்வூர் மக்கள் சொல்லுகிறார்கள். தஞ்சைப் பெரிய கோயிலைப் பாடிச் சிறப்பித்த "கருவூர்த் தேவர்" என்னும் பெரியார் இக் கோயிற் பெருமானையும் ஒரு பதிகத்தால் போற்றியுள்ளார். அப்பதிகம் திருவிசைப்பா என்னும் அருட்பாடலில் உள்ளது. இது சைவத் திருமுறைகளுள் ஒன்பதாவது திருமுறையைச் சார்ந்ததாகும்.

இராஜேந்திரன் வெட்டுவித்த ஏரி 'சோழகங்கம்' என்னும் பெயருடையது. அது இப்பொழுது பொன்னேரி என்று வழங்கப்பட்டு வருகிறது. இது கங்கை கொண்ட சோழபுரத்துக்கு வடக்கே மணல் கொண்டு மேடாகக் காட்சி யளிக்கிறது. இது தெற்கு வடக்காக 16 மைல் நீளமுள்ளதாக இருந்தது; பலம் பொருந்திய கரையையும் உடையதாக இருந்தது. இதற்குத் தண்ணீர் வருவதற்கென்று தென்புறத்தில் கொள்ளிடத்திலிருந்து 60 மைல் நீளத்திற்கு ஒரு கால்வாய் வெட்டப் பட்டிருந்தது. வடக்கே வெள்ளாற்றிலிருந்தும் ஒரு கால்வாய் வெட்டப் பட்டிருந்தது. அக் கால்வாய்களின் கரைகள் இன்றும் காணக்கூடிய நிலையில் உள்ளன. மேட்டுப் பாங்கான இவ்விடத்தில் இவ்வளவு பெரிய ஏரியை அமைத்துப் பலமான கரைகளையும் கட்டிப் பள்ளத்திலிருந்து இதற்குத் தண்ணீர் கொண்டு வந்த சோழனின் ஆற்றல் பொறித் துறை வல்லாரும் அதிசயிக்கக் கூடிய ஒரு செயலன்றோ? தென்னார்க்காடு ஜில்லாவில் உள்ள வீரநாரணன் ஏரியே இப்பொன்னேரியின் வடிகாலாக இருந்ததாம்.

இவ்வேரி நல்ல நிலைமையில் இருந்த அக்காலத்தில், சோழ நாட்டின் ஒரு பகுதியாகிய, திருச்சிராப்பள்ளி ஜில்லா அடைந்திருந்த வளப்பத்தினை யாரே அளவிட்டுரைக்க வல்லார்? ஆனால் இன்று அது பொட்டலாகக் காட்சி யளிக்கின்றது.

இந்தியர்களால் நீர்ப்பாசனத்திற்கு அமைக்கப் பட்ட ஏரிகளுள், வடநாட்டுப் போஜபுரத்து ஏரியே மிகச் சிறந்ததென்பர். ஆயினும் இராஜேந்திரனால் அமைக்கப்பட்ட இப் பொன்னேரியை நன்கு கவனித்

தவர்கள் போஜபுரத்து ஏரியினும் இதுவே மிக்க சிறப்பினை உடையது என்னும் உண்மையை உணர்வார்கள்.

இராஜேந்திரன் இவ்வாறு கங்கை கொண்ட சோழபுரத்தை நிருமாணித்துக் கோயிலை எடுப்பித்தானே யன்றி, அரண்மனை முதலியன கட்டி அதனை நிரந்தரத் தலைநகரமாக ஆக்கிக் கொண்டதாக அறிய முடிய வில்லை. ஆனால், கோயிலுக்கு அரை மைல் தூரத்தில் மாளிகை மேடு என்று வழங்கப் படும் திடர் ஒன்று இருக்கிறது. சோழ மன்னர்களுடைய அரண்மனை அத் திடரில்தான் இருந்தது என்று இன்றைக்கும் அவ்வூர் மக்கள் கூறுகிறார்கள். அரண்மனையின் சிற்சில பாகங்கள் இருந்த இடங்களையும் அவர்கள் சுட்டிக் காண்பிக்கிறார்கள். அந்த மாளிகை மேட்டின் அடியில் கட்டிடத்தின் பாகங்களும், அவற்றின் அடையாளங்களும் இப்பொழுதும் காட்சி அளித்துக் கொண்டிருக்கின்றன.

இத்தகைய அறிவாற்றலோடு புதிய நகரத்தை நிருமாணித்து, அதற்கு வேண்டிய பலவித வசதிகளையும் ஏற்படுத்தி வைத்த இராஜேந்திரனது புகழ் இவ்வுலகம் உள்ளவரை நிலைத்திருக்கும் என்பது உறுதி.

**அருஞ்சொற் பொருள் :**

வலியுறுத்தும் – உறுதிப்படுத்தும், அமைவு பெறாத–மனம் அடங்குதல் அடையாத, பரந்த – அதிகமான, நிர்மாணித்த – புதிதாக உண்டு பண்ணிய, சிலமாக – சிதைந்ததாக, பொறித்துறை வல்லர் – இன்சினியர், வீரநாரணன் ஏரி – தற்காலம்

வீராணத்து ஏரி என வழங்கப்படுகிறது. பொட்டலாக-வெறும் திடலாக.

வினுக்கள் :

1. சோழர்களின் பழமை யாது? அப்பெயர் குடிப்பெயராவது எவ்வாறு?

2. இராஜேந்திரன்காலத்திய சோழஅரசியலைக் குறிப்பிடு.

3. வெற்றி அடையாளமாகப் பழங்கால அரசர்கள் மேற்கொண்ட செயல்கள் யாவை?

4. கங்கை கொண்ட சோழபுரம் எங்கு உளது?

5. அங்கு இன்று காணப்படுவன எவை?

6. கங்கை கொண்ட சோழன் என்னும் பெயர்க் காரணத்தை விவரி.

7. 'சோழகங்கம்' என்ருல் என்ன? அதன் சிறப்பென்ன?

8. மாளிகை மேட்டில் காணப்படுவன யாவை?

9. இராஜேந்திரன் சிறப்புக்கள் யாவை?

கட்டுரை பயிற்சி :

1. கங்கைகொண்ட சோழபுரத்தின் அமைப்பைப் பற்றிப் பத்துவரிகளில் எழுதுக.

2. 'சோழ அரசர்கள் வெற்றி நினைவு' என்பது பற்றிப் பதினைந்து வரிகள் எழுதுக.

3. சோழகங்கம், போஜபுரத்து ஏரி, வீரநாரணன் ஏரி, இராஜேந்திரன் வடநாட்டு வெற்றி—இப்பொருள்கள் பற்றித் தனித்தனியே குறிப்பெழுதுக.

மொழிப் பயிற்சி

1. கீழ் வருவனவற்றைச் சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுதுக:

நிர்மாணித்த, இமயம்வரை, சிற்பங்கள், நாடுகளாகிய, அருட்பாடலில், பள்ளத்திலிருந்து, நினைவுச் சின்னங்கள்.

2. எதிர்ச் சொற்கள் எழுதுக:

வடநாடு × சிற்றூர் ×
தென்பால் × உண்மை ×
பள்ளம் × சிறந்தது ×

3. பிரித்து எழுதுக:

பழங்குடியினர், கடற்போர், நாடுகளாகிய, இந்நாடு, அரசாண்டான்.

4. இராஜேந்திரன் முடி சூட்டிக் கொண்டதும் சோழ நாட்டோடு துங்கபத்திரை கிருஷ்ணா நதிகளைச் சார்ந்த இடத்தையும் வடக்கே ஒட்டர நாடு வேங்கி கலிங்கம் என்னும் இவற்றையும் வெற்றி பெற்று அரசாண்டான்—நிறுத்தக்குறிகளை ஏற்ற இடங்களில் அமைத்து எழுதுக.

5. இப்பாடத்திலிருந்து செய்வினை வாக்கியம், செயப்பாட்டு வினை வாக்கியம், எதிர் மறை வாக்கியம், விதி வாக்கியம் இவைகட்கு ஒவ்வோர் உதாரணம் எடுத்து எழுதுக.

---

# 3. நமது அரசியல் நிருவாகம்

நூற்றைம்பது ஆண்டுகளுக்கு மேலாக நடந்த போராட்டங்களின் பயனால், இப்பொழுது நம் நாட்டை நாமே ஆளும் உரிமை பெற்றுள்ளோம். நம் தமிழ கத்தில் பிறந்த வீர பாண்டியக் கட்டபொம்மன் சுதந்தரப் போருக்கு வித்திட்டவன்; சுதந்தரக் கொடி யைப் பாஞ்சாலங் குறிச்சிக் கோட்டையில் ஏற்றுவித்த வனும் அப்பெரு வீரனே. அக்கொடியே இன்று நம் தலைநகரில் ஒளிகொண்டு பறக்கிறது, நாட்டு மக்களின் உரிமைகளுக்கும் அறமுறையில் அமையும் நேரிய ஆளுகைக்கும் இக்கொடியே ஏற்ற சின்னமாகத் திகழ்கின்றது. இந்நாட்டு மன்னர்களாகிய நீங்கள் நாட்டு நிருவாக முறைகளை அறிதல் இன்றியமை யாதது அல்லவா? நமது நிருவாக அமைப்பின் பொது இயல்புகளை இப்பாடத்துள் அறிவோம்.

இந்தியா பல இராஜ்யங்களைக் கொண்ட ஓர் பெருநாடு. கவர்னர்கள் ஆளும் அரசாங்கப் (State) பகுதிகள், இராஜப்பிரமுகர்கள் ஆளுகைக்கு உட்பட்ட பகுதிகள், கமிஷனர் ஆளும் பகுதிகள் என்ற முப் பகுப்புகளின் ஐக்கிய அமைப்பாக இந்தியா விளங்கு கின்றது. நாட்டின் இப்பல்வகைப் பிரிவுகளிடையே யும் ஐக்கியம் வலுவாக இருந்தால்தான் இந்தியா வலுவுள்ள நாடாக விளங்க இயலும். இதனை மனதிற் கொண்டே நமது அரசியல் திட்டம் வகுக்கப் பட்டுள்ளது. நாட்டின் பொதுநலத்தையும் ஐக்கியத் தையும் காப்பதே மத்திய அரசாங்கத்தாரின் பெரும் பொறுப்பாகும்.

பொது மக்களால் தேர்ந்தெடுக்கப்படும் மக்கள் சபை, அரசாங்க சபை, ஜனாதிபதிப் பதவி என்ற இம்மூன்றும் இந்தியப் பாராளுமன்றத்தின் உறுப்புகளாகும். நாட்டிலுள்ள வயது வந்த வாக்காளர்களால் தேர்ந்தெடுக்கப்படும் உறுப்பினர்களைக் கொண்ட சபையே **மக்கள் சபை** எனப்படும். இச் சபையில்



பாராளுமன்றம்

500-க்கு மேற்படாத உறுப்பினர்கள் இருப்பர். **அரசாங்க சபையில்** 250 உறுப்பினர்கள் இருப்பர். இவர்களுள் 15 பேர்களை ஜனாதிபதி நியமனம் செய்வார். ஏனையோரை அரசாங்கங்கள் தேர்ந்தெடுக்கும். மக்கள் சபை கீழ்ச் சபை எனவும், அரசாங்க சபை மேல் சபை எனவும் வழங்கப்படும்.

நமது மக்களால் தேர்ந்தெடுக்கப் பட்ட மக்கள் சபை உறுப்பினர்கள் ஐந்து ஆண்டுகள் பதவி வகிப்பர். மேல் சபை உறுப்பினர்களுள் மூன்றில் ஒரு பகுதியினர்

இரண்டு ஆண்டுகட்கு ஒருமுறை, தாம் வகித்த பதவியை விட்டு விலகுவார்கள். அவ்வாறு விலகியவர்களின் இடங்களுக்குத் தேர்தல் நடக்கும். எனவே, இச்சபை கலைக்கப் படுவதில்லை. சபையின் நடவடிக்கைகளுக்குத் தலைமை வகிப்பவர் அரசாங்க சபையில் உதவி ஜனாதிபதியும் மக்கள் சபையில் சபாநாயகரும் (Speaker) ஆவர்.

மக்கள் சபையின் பெரும் பான்மைக் கட்சியினர் தம்முள் ஒரு தலைவரைத் தேர்ந்தெடுப்பர். அவர் குறித்த அக்கட்சியின் தலைவர் ஆவதோடு நாட்டின் பிரதம மந்திரியும் ஆவார். ஜனாதிபதி அவரை யழைத்து மந்திரி சபையை அமைக்கும்படி கூறுவார். அவர் சபையின் உறுப்பினர்களுள் தகுதி யுடையவர்களைத் தேர்ந்து மந்திரி சபையை அமைப்பார். அவ்வாறு தேர்ந்து எடுக்கப்பட்ட மந்திரிகளுக்குப் பல்வேறு இலாகாக்களின் நிருவாகப் பொறுப்பு வழங்கப்படும். வெளி நாட்டுத் தொடர்பு, பொது நல அரசு உறவு (Commonwealth relations), உள் நாட்டு நிருவாகம், பொருளாதாரம், பாதுகாப்பு, வாணிபம், கல்வி, போக்குவரவு, தபால், தந்தி, கைத்தொழில், பொருள் விநியோகம் (Supplies), மராமத்து வேலை முதலிய இலாகாக்கள் அம் மந்திரிகளுக்குள் பகிர்ந்து கொள்ளப்படும். இம் மந்திரி சபையினர் மக்கள் சபைக்குப் பொறுப்பு உடையவர்கள் ஆவார்கள், நிருவாக சம்பந்தமாக சபையின் உறுப்பினர்கள் கேட்கும் கேள்விகளுக்கு மந்திரிகள் விடை யளித்தல் வேண்டும். மந்திரிகள் கூட்டுப் பொறுப்பு வாய்ந்தவர்கள்.

நம் நாட்டின் நிருவாகத்தை ஏற்று நடத்துவோர் பிரதம மந்திரியும், ஏனைய மந்திரிகளுமே யானாலும்

சட்ட பூர்வமான அரசியல் தலைவர் ஜனாதிபதியே ஆவர். பொதுமக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட அரசாங்க சட்ட சபை உறுப்பினர், மத்திய சட்டசபை உறுப்பினர் ஆகிய இவர்களால் ஜனாதிபதி தேர்ந்தெடுக்கப் படுகிறார். பாராளு மன்றங்களைக் கூட்டவும், சில காலங்களுக்கு ஒத்தி வைக்கவும், வெண்டாத பொழுது கலைக்கவும் ஜனாதிபதிக்கு உரிமையுண்டு. நாட்டிற்கான சட்டங்களை வகுப்பது பாராளுமன்றமே. எனினும் அது கூடாத அவசர காலங்களில் சட்டங்களைச் செய்யவும், சட்டங்களின் குறிப்பிட்ட சில பகுதிகளை அமுலுக்குக் கொண்டு வராது இருக்கவும் ஜனாதிபதிக்கு உரிமை யுண்டு. நீதி மன்றங்கள் வழங்கிய தண்டனைகளைக் குறைத்தல், ரத்து செய்தல், முதலிய விசேஷ உரிமைகளும் ஜனாதிபதிக்கு உண்டு.

ஜனாதிபதியின் பதவிக் காலம் ஐந்து ஆண்டுகளாகும். ஒரு முறை ஜனாதிபதியாக இருந்தவர் மற்றுமோர் முறை அப்பதவிக்கு நடக்கும் தேர்தலில் போட்டியிடலாம். ஜனாதிபதி நாட்டு அரசியல் அமைப்பிற்கு மாறுபட்டு நடப்பாரானால் அவரைப் பதவியி னின்றும் விலக்குவதற்கு உரிய தகுதியை மக்கள் சபை பெற்றுள்ளது.

அருஞ்சொற்பொருள்:

ஆளுகை - ஆட்சி; விடையளித்தல் - விடை கூறுதல்; வித்திடுதல் - ஆரம்பித்து வைத்தல்; பகுப்பு - பிரிவு.

1. வினாக்கள்:

1. நமது நாட்டு அரசியல் எவ்வகையைச் சேர்ந்தது?

2. இந்தியாவிலுள்ள பகுப்புகள் யாவை?

3. மக்கள் சபை, அரசாங்க சபை — இவைகளைப் பற்றிய சிறு குறிப்பெழுதுக.

4. மந்திரி சபை அமைக்கப்படும் முறையைக் குறித்தெழுதுக.

5. 'மந்திரி சபையினர் மக்கள் சபைக்குப் பொறுப்புடையவராவார்' என்பதன் கருத்தென்ன? விளக்குக.

6. மந்திரிகளின் அதிகாரத்தில் இருக்கும் இலாகாக்களைக் குறிப்பிடுக. மத்திய சர்க்காரின் தனியதிகாரத்தில் இருக்கும் இலாகாக்கள் யாவை?

7. ஜனாதிபதி தேர்ந்தெடுக்கப்படும் முறையையும் அவரது அதிகார எல்லைகளையும் எழுதுக.

8. 'இந்தியா பலம் பொருந்திய நாடாகத் திகழ வலு மிக்க மத்திய அரசாங்கம் இன்றியமையாதது' — இக்கருத்தை விளக்குக.

2. கட்டுரை யாக்கம் :

1. இந்தியப் பாராளுமன்றம்.

2. மந்திரி சபையும் நாட்டு நிருவாகமும்.

3. மந்திரி சபையும் ஜனாதிபதியும்.

4. இந்தியக் குடியரசு—இத்தலைப்புகளில் கட்டுரைகள் எழுதுக. (ஒவ்வொரு பக்கம்)

3. மொழிப் பயிற்சி:

1. குறித்தபடி வாக்கியங்களை மாற்றி எழுதுக:—

(1) நாட்டின் நிருவாகத்தை ஏற்று நடத்துவோர் பிரதம மந்திரியும். ஏனைய மந்திரிகளுமே யானாலும் சட்ட பூர்வமான அரசியல் தலைவர் ஜனாதிபதியே.

(தனி வாக்கியங்களாக)

(2) நாட்டிற்கான சட்டங்களை வகுப்பது பாராளுமன்றமே. எனினும் அது கூடாதஅவசர காலங்களில் சட்டங்களியற்றும் உரிமை ஜனாதிபதிக்கு உண்டு. (தொடர்வாக்கியமாக)

## 4. தேனீ வளர்ப்பு முறை

"முயற்சி திருவினை ஆக்கும்"

நமது கிராமப் பொருளாதாரத் துறையி லுள்ள குறைகளை நீக்கச் சில கைத் தொழில்களை அபிவிருத்தி செய்ய வேண்டும். அவ்வாறு தொழில் களைப் பெருக்குவதால் கிராம மக்கள் பணத் தட்டின்றி வாழ வழி யேற்படலாம். அத்தகைய கிராமக் கைத் தொழில்கள் யாவை? அத் தொழில்களை மக்கள் எவ்வாறு மேற் கொள்வது? அவ்வாறு மேற்கொள்வ தால் அவர்கள் அடையும் நன்மைகள் யாவை? என்பதே இக் கட்டுரையின் நோக்கம்.

பண்டைக் காலத்தில் கிராமங்கள் தொழில் வள முடையதாய்ப் பெருஞ் சிறப்புடன் விளங்கிற்று. அவர்கள் பண்டு, கோழிப் பண்ணை, மாட்டுப் பண்ணை, குதிரைப் பண்ணை, தேனீ வளர்த்தல், ஆடுசேர்த்தல் முதலிய பல கூட்டுறவு முறையில் உள்ள தொழில்களை மேற் கொண்டிருந்தார்கள். அப் பல திறப் பண்ணைகளுள், தேனீ வளர்த்துத் தேன் சேகரிக்கும் தொழிலை மட்டும் இங்கு விரிவாகக் காண்போம்.

கிராம மக்கள் மட்டும் தேனை எவ்வாறு சேகரிக்கக் கூடும் என்று எண்ணக் கூடும். இது எண்ணக்கூடிய அவ்வளவு ஆச்சரியமான தொழிலன்று. "தொடங்குங் கால் துன்பமாய்ப் பிற்பயக்கும் இன்பம்" என்பது போல் இத் தொழில் தொடங்குகையில் துன்பத்தையும், பழகிய பின் பெரிதும் இன்பத்தையும் தருவதேயாம். சாதாரண மாக இத் தொழிலைப் பண்டு நம் நாட்டில் வேடர்கள்

மேற்கொண்டு வந்துள்ளார்கள். ஆனால் அவர்கள் புழு, முட்டை, அடை இவை யாவற்றையும் ஒன்று சேர்த்துக் கசக்கிப் பிழிகின்றனர். இவ்வாறு சேர்க்கப் பட்ட தேன் உடலுக்குப் பெரிதும் துன்பத்தையே தரும். முறைப்படி தேனீக்களை வளர்த்துத் தேனைப் பிழிந்தெடுக்க வேண்டும்.

தேன், மலர்கள் நிறைந்துள்ள **தோட்டங்கள், காடுகள், வயல்கள், செடி, கொடிகள்** இவைகள் மிகுந்து உள்ள இடங்களிலேயே நிறைந்திருக்கும். அவைகளை அவற்றி னின்று பிரிப்பது தேனீயே யாகும். அத் தேனீக் களுக்கு வாழிடங்களை நாம் அமைத்துத் தரவேண்டும். தேன் சேகரிக்கும் போது ஈ, புழு, முட்டை இவை கட்கு எவ்விதத் தீமையும் நேரிடாது கவனமாகப் பார்த் துக் கொள்ள வேண்டும். இவ்வாறு தேனீக்களை வளர்ப்பதற்குக் கைப்பொருள் தேவையில்லை. மக்க ளின் கவனிப்பே போதுமானது. மக்களின் கவனிப்பு எவ்வளவுக்கெவ்வளவு அதிகப் படுகிறதோ, அவ்வளவுக் கவ்வளவு இத்தொழிலில் மிக்க இலாபம் பெறலாம். இயற்கையாக மலர்களில் நிறைந்து உள்ள தேனை நாம் கவனத்துடன் எடுத்தால் எத்துணையோ நலன்களை அடையலாம்.

தேனீக்களில் நான்கு வகைகள் உண்டு. அவை **மலைத்தேனீ, அடுக்குத்தேனீ, கொம்புத்தேனீ, கொசுத்தேனீ** என்பனவாம்; இவைகள் உலகின் பற்பல பாகங்களில் காணப்படும்.

**மலைத் தேனீ :** இது நால் வகைத் தேனீக்களுள் மிகப் பெரியது. இத்தேனீ மலைகள் அடர்ந்துள்ள பிர

தேசங்களில் காணப்படுகிறது. இந்த ஈ தேனைச் சேர்ப்பது போல் வேறு எந்த ஈக்களும் சேர்ப்பதில்லை. இது மிகப் பெரிய அடையாகக் கட்டும். மலைப் பாறைகளில் தான் பெரும்பாலும் கூடு கட்டும். இத்தகைய பெரிய தேனடைகளைத் திருக் குற்றாலத்தின் மலை மேலுள்ள தேனருவி என்ற இடத்தில் மிகுதியாகக் காணலாம். தேனருவியில் தண்ணீரும் தேன் போன்றே யிருக்கிறது. இம்மலைத் தேனீயினால் காட்டிலாகாவிற்கு ஆண்டு தோறும் பெரும் பொருள்கள் சேருகின்றன. இதற்கு விஷம் நிரம்பிய கொடுக்குண்டு. இடம் பெயர்ந்து வாழும் இயல்பு இத்தேனீகளுக்கு உண்டு.

**அடுக்குத் தேனீ :** இது நமது மாகாணத்தில் மிகுதியும் காணப்படும். இத்தேனீ அடைகளை அடுக்கடுக்காகக் கட்டுவதால் இப்பெயர் பெற்றது. இதுவும் மரப் பொந்து, பாறை, வீட்டின் பின் புறமுள்ள மாடங்கள் முதலிய இடங்களில் தன் கூட்டினை அமைக்கும். இதுவும் மிகுதியான தேனைக் கொடுக்கும். ஆனால் இது மலைத் தேனீயை விடச் சாதுவான குணமுடையது. அதனால் செயற்கை முறையில் தேனீ வளர்ப்போர் இதனையே பெரிதும் விரும்புவர். நம் நாட்டில் தேன் பெட்டியில் வைத்து வளர்க்கும் ஈக்கள் இவைகளே. இவைகளைத் தான் எளிதாகப் பிடித்துப் பெட்டிகளில் அடைக்க முடியும்.

**கொம்புத் தேனீ :** இது பெரும்பாலும் மரத்தின் கிளைகளிலும், வீட்டின் மேல் கூரைகளிலும், கண்ணுக்குத் தெரியாத மறைவிடங்களிலும் கூடுகட்டி வாழும். கட்டிடங்கட்குள்ளே கூட இத்தேனீ வாழும். ஆனால் இத்தேனீயின் அடையைச் சிரமப்பட்டு அடைந்தாலும்,

கிடைக்கும் தேன் மிகக் குறைவே. ஆனது பற்றி மக்கள் கொம்புத் தேனீயை வளர்ப்பதற்கு ஒருப்படு தல் இல்லை,

**கொசுத் தேனீ :** இதுவே உருவத்தில் மிகச் சிறிய ஈ. கொசுவைப் போன்று இருக்கும். இது மேலே கூறியுள்ள மூவகை ஈக்களைப் போன்று மெழுகினுல் தன் கூட்டை அமைக்காது. மரத்தில் உள்ள பிசின் களைக் கொண்டே கூடு அமைக்கும். ஆனுல் இப்பிசின் மிகுந்த உபயோகமா யிருக்கும். இக் கொசுத் தேனீ சேர்க்கும் தேன் மிகவும் குறைவாகவே யிருக்கும். ஆனுல் மருந்துகட்கு உபயோகப்படும்.

மேலே கூறிய நான்கு வகையான தேனீக்களும் நமது நாட்டில் இருப்பவைகளே. இவைகளுள் அடுக் குத் தேனீயே மக்கட்குப் பெரிதும் உதவியா யிருப்பது என்று முன்னரே கூறியுள்ளோம்.

அடுக்குத் தேனீ எங்கு கூட்டை அமைத்தாலும், கூட்டம் கூட்டமாகவே அமைத்து வாழும். சிறந்த தேனடையில் முப்பதினுயிரம், நாற்பதினுயிரம் தேனீக் கள் கூட இருக்கலாம். இவ்வாறு பெருத்த அளவின தாக வாழும் இத் தேனீக் குடும்பம், **இராணித் தேனீ, ஆண் தேனீ, உழைப்பாளித் தேனீ** என்னும் மூன்று வகை யினை உடையதாக இருக்கும். உழைப்பாளித் தேனீக் கள் இவற்றுள் பெரும் பங்கு இருக்கும். அவ் வீக்களின் வயிற்றிடை மெழுகு அடுக்கடுக்காக அமைந்திருக்கும். அம்மெழுகு தேன் உண்பதால் உண்டாவதேயாம். மலர் மிகுந்து தேன் பெருகும் பருவ காலத்தில், அவ்வீக்க ளின் அடி வயிற்றி லிருந்து மெழுகு மிகுதியாக உண்டா

கிறது. அவ்வாறு உண்டாகி வெளியேறும் மெழுகு களைக் கால்களின் மூலமாக வாய்க்குக் கொண்டு சென்று, நன்ருகப் பக்குவப் படுத்தி உமிழும். அவ்வாறு உமிழ்ந்த மெழுகு காற்றினுல் கெட்டிப் படும். அவ்வாறு கெட்டிப் பட்ட மெழுகினுற்ருன் உழைப்பாளி ஈக்கள் தேன் கூட்டைக் கட்டுகின்றன.

உழைப்பாளித் தேனீக்களுக்கே இடை விடாது வேலை யிருக்கும். இராணித் தேனீ அடிக்கடி முட்டை யிட்டுக் கொண்டே யிருக்கும். முட்டைகளி லிருந்து புழுக்கள் வெளிப்பட்ட பின்னர், உழைப்பாளித் தேனீ புழுக்கட்கு உணவு கொடுக்க வேண்டும். சில சமயம் கூட்டில் சூடு குறையும். அப்பொழுது உழைப்பாளி ஈக்கள் நெருக்கமாக உட்கார்ந்து சூடு உண்டாக்க வேண்டும். சூடு மிகுதிப் பட்டாலும் அவை தங்களுடைய இறக்கைகளால் விசிறித் தணிவிக்கும். வேறு தேனீக்கள் தங்கள் கூட்டை நாடாமலும், பகையான பூச்சிகளால் தீமை உண்டாகாமலும் காக்க வேண்டும். தேன் கூட்டில் உள்ள அழுக்கு முதலிய பொருள்களை அப்புறப் படுத்துவதும், தேன்கூட்டை மெழுகினுலும், பிசினுலும் அடைத்துத் தேனைக் கெடாமல் காப்பதும் உழைப்பாளி ஈக்களின் வேலையே. இவ்வுழைப்பாளி ஈக்கள் தேன் கூட்டில், மகரந்தம், தண்ணீர், தேன், இவற்றைக் கொண்டு வந்து சேர்க்கும். இராணித் தேனீக்குச் சிறந்த உணவைக் கொண்டு வந்து கொடுக்கும். இவைகளை நோக்கினுல், உழைப்பாளித் தேனீக்களே மற்றைய இரண்டினும் சிறந்தது. என்பதை உணரலாம். ஆண் தேனீக்களோ உழைப் பாளி ஈக்கள் கொடுக்கும் உணவை உண்டு, ஒரு வேலை யும் இன்றிக் கூட்டில் வாளா விருக்கும்.

தேனடை மெழுகு என்னும் ஒரு வகைப் பொருளால் ஆனது. இவ்வடையைத் தேன்கூடு என்று சொல்லுவதும் உண்டு. தேனடையில் பல வகையான அறைகள் இரு பக்கங்களிலும் இருக்கும். ஆண் தேனீக்கள் பெரிய அறைகளில் வாழும். சிறிய அறைகளில் உழைப்பாளி ஈக்கள் வாழும். தேனீக்கள் மலர்களில் உள்ள ஒருவகை அமிர்தத்தைத் தங்களுடைய உறிஞ்சு குழாயினல் இழுத்துப் பருகும். அவ்வாறு இழுக்கப்பட்ட அமிர்தம் தேனீக்களின் தேன் பையில் தங்குவதால் ஒருவித மாறுபாடடைந்து தேனுக மாற்றமடைகிறது. அவ்வாறு மாற்றமடைந்த தேனையே தேனீக்கள் அடையில் உள்ள அறைகளில் சேர்க்கின்றன.

நமது நாட்டில் ஜனவரி முதல் எட்டு மாதங்கள் தேன் சேர்ப்பதற்கு ஏற்ற காலமாகும். அவ்வெட்டு மாத காலங்களையே 'தேன் மிகு காலம்' என்கின்ருேம். இக்காலத்தேதான் இராணித் தேனீக்களும் மிகுதியான உழைப்புத் தேனீக்களை உண்டாக்குகின்றன. உழைப்புத் தேனீக்களும் அக்காலத்திலேதான் மிகுதியான தேனை அடைகளில் கொண்டுவந்து சேர்க்கின்றன.

படத்தில் காட்டியுள்ளது போல் தேனீ வளர்க்கும் பெட்டியானது அமைந்திருக்க வேண்டும். அப்பெட்டிகளில் தேனீக்கள் தாராளமாக வெளியே வரவும், உள்ளே செல்லவும் வழிகள் அமைத்திருக்கவேண்டும். மேல் பெட்டியில் சட்டங்கள் பொருத்தி யிருக்க வேண்டும். சட்டங்கள் பொருத்தும் போது இடைவெளி விட்டுப் பொருத்துதல் ஏற்றது. இவ்விடை




தேன் எடுத்தல்

வெளி, தேனீக்கள் இடையூறு இன்றி உள்வந்து போவதற்கே யொழிய வேறெதற்கு மன்று. பெட்டியின் அடிப்பாகப் பலகை, பெட்டியின் அளவுக்கு மேல் சிறிது முன்னால் நீட்டிக் கொண்டிருக்க வேண்டும். இவ்வாறு அமைக்கப்பட்டுள்ள பெட்டிகளில்தான் நம் நாட்டு மக்கள் தேனீக்களை வளர்த்துத் தேனைச் சேகரிக்கிறார்கள்.

இப்பெட்டிகளில் முதன் முதலாக ஈக்களை எப்படிச் சேர்ப்பது? அடுக்குத் தேனீக்கள், மரப் பொந்துகளில் கூடு கட்டி வாழும் என்று முன்னரே கூறி யுள்ளோம். அப்பொந்துக்கு அடுத்தாற்போல் மரத்தைத் துளைத்து இத்துளையில் ஒரு பெட்டியைப் பொருத்திப் பின் பக்கம் நன்றாக மூடவேண்டும். ஆனால் மூடும் போது காற்று செல்லுமாறு மூடுதலே ஏற்றது. பின்னர் தேனீக்கள் கூடு கட்டியுள்ள மரத்தை மூடிப் புகை வைத்து ஊதினால், தேனீக்கள் புகையினால் செல்லுமிடம் அறியாது மயங்கி, நாம் முன்னரே பொருத்தி வைத்துள்ள பெட்டியில் வந்து சேரும். பின்னர் நாம் அப்பெட்டியைத் துணியினால் மூடி எடுத்து வந்து, முன்னரே அடை கட்டி தொங்க விட்டுள்ள பெட்டியிற் செலுத்த வேண்டும். இவ்வாறு செலுத்தப்பட்ட ஈக்கள் வழக்கம்போல் வேலை செய்யத் தொடங்கி விடும்.

இவ்வாறு உழைப்பாளி ஈக்கள் வஞ்சனை யின்றி வேலை செய்யத் தொடங்கிய பின், பெட்டியில் அடிக்கடி நாம் கவனம் செலுத்துதல் வேண்டும். சட்டங்களை அடிக்கடி வெளியே எடுத்து அழுக்குக்களைப் போக்கி வைக்க வேண்டும். ஆனால் எடுத்து வைக்கும்

போது சட்டங்களின் வரிசை மாறுபடாமல் பார்த்துக் கொள்ளுதல் வேண்டும். சட்டங்களில் தேனடைகள் நிறைந்துவிட்டது என்பது தெரிந்ததும் தேனை எடுத்து விட வேண்டும். படத்தில் காட்டியுள்ளவாறு தேன் எடுக்கும் கருவியால், தேனடை நிறைந்துள்ள சட்டத்தை வைத்துச் சுற்றித் தேனை எடுக்க வேண்டும். அவ்வாறு எடுக்கப்பட்ட தேன் தான் குற்றமற்றது; இனிப்புடையது; எல்லோரும் ஏற்கக் கூடியது.

தேனில் பலவித மலர்களின் சருக்கரைகளும், மகரந்தங்களும் சேர்ந்துள்ளன. ஆனால் அவைகளால் நாம் எவ்விதக் கெடுதியும் அடைவதில்லை. தேன் நமது உணவுக்கும், மருந்துக்கும் ஏற்றது; உடலுக்கு வலுவைக் கொடுக்கும் உயர்ந்த பொருள்களுள் தேனும் ஒரு வலுவுள்ள சிறந்த பொருளாகும் என்பது திண்ணம். இது எல்லோருக்கும் ஒப்ப முடிந்த உண்மையாகும்.

**அருஞ்சொற்பொருள் :**

பண்டு - முன்பு; பயக்கும் - கொடுக்கும்; அமைத்து - உண்டாக்கி; திருவினை - செல்வத்தினை; அடர்ந்துள்ள - நிறைந்துள்ள; மாடங்கள் - சாளரங்கள்: தீமை - கெடுதி; பொருத்தி - சேர்த்து வைத்து; வாளா - பயனின்றி.

**1 வினாக்கள்:**

1. கிராமக் கைத்தொழில்களின் இன்றியமையாமை யாவை?
2. தேனீக்களில் உள்ள மூன்று வகைகள் யாவை?
3. அடுக்குத் தேனீ என்றால் என்ன?
4. உழைப்பாளி ஈக்களின் வேலைகள் யாவை?
5. தேனீ வளர்க்கும் பெட்டி எவ்வாறு அமைந்திருத்தல் வேண்டும்?
6. தேனினால் நாம் அடையும் பயன்கள் யாவை?
7. தேனீக்கள் எத்தனை வகைப்படும்?

2. கட்டுரை யாக்கம்:

1. கீழ் வருவனவற்றைப் பற்றிக் கைத்தொழிற் கட்டுரைகள் எழுதுக:— (ஒவ்வொன்றும் பத்து வரிகளுக்குள் இருத்தல் வேண்டும்)

1. சோப்பு செய்தல்
2. கோழிப் பண்ணை
3. காய் கறி, பழம், பூந்தோட்டம்
4. தென்னை, பனை என்பவற்றிலிருந்து கிடைக்கும் பொருள்களால் செய்யக்கூடிய கைத்தொழில்கள்.
5. மாடு வளர்த்தல்

2. பின் வருபவைகளைக் குறித்துக் குறிப்பு தயார் செய்க:—

(10 நிமிடப் பேச்சுக்கு)

1. கிராமக் கூட்டுறவு இயக்கம்.
2. கல்வி, சுகாதாரம்

3. மொழிப் பயிற்சி:

1. இப்பாடத்திலிருந்து செய்வினை, செயப்பாட்டுவினை வாக்கியங்கட்கு இரண்டு உதாரணங்கள் எழுதுக.

2. வேண்டுமிடத்து நிறுத்தக் குறிகளை யிடுக:—

தேனில் பலவித மலர்களின் சர்க்கரைகளும் மகரந்தங் களும் சேர்ந்துள்ளன ஆனல் அவைகளால் நாம் எவ்விதக் கெடுதியும் அடைவதில்லை தேன் நமது உணவுக்கும் மருந்துக்கும் ஏற்றவை உடலுக்கு வலுவைக் கொடுக்கும் உயர்ந்த பொருள் களுள் தேனும் ஒரு வலுவுள்ள சிறந்தபொருளாகும் என்பது திண்ணம் இது எல்லோருக்கும் ஒப்பமுடிந்த உண்மையுமாகும்.

## 5. மனோன்மணி

முன்னொரு காலத்தில் மதுரையில் **ஜீவக வழுதி** என்ற மன்னன் ஒருவன் பாண்டி நாட்டை ஆண்டு வந்தான். ஜீவகன் சூது வாது அறியாத வெள்ளை யுள்ளம் படைத்தவன். அரச நிருவாக காரியங்கள் அனைத்திற்கும் அவன், தன் அமைச்சன் **குடிலன்** என்பானையே முழுதும் நம்பி யிருந்தான். ஜீவகனுக்கு **மனோன்மணி** என்ற பெண்ணைத் தவிர வேறு குழந்தை கள் இல்லை. மனோன்மணியும் திருமகளை யொத்த அழகும், நல்ல பல குணங்களும், அறிவும் உடையவ ளாய் விளங்கினாள். தாயை இளமையிலேயே இழந்த மனோன்மணியை ஜீவகன் கண்ணுங் கருத்துமாக வளர்த்து வந்தான்.

குடிலனும் அமைச்சருக்கு உரிய சூழ்ச்சித் திறமெல் லாம் உடையவன்; என்றாலும் தன்னலத்தில் மிகுந்த கருத்துடையவனாய் இருந்தான். தன்னை உண்மை யுள்ள ஊழியன் என்று அரசன் நம்புமாறு நடித்து, ஜீவகனைத் தன்மனம் போனவாறெல்லாம் ஆட்டுவித்து வந்தனன். மன்னர்பால் பேரன்பு கொண்ட மக்கள் பலர் வாழும் மதுரையில் தனது எண்ணங்களை நிறை வேற்றிக் கொள்ள இயலாது என்பதை யறிவுடைய அவ்வமைச்சன் அறிந்து தலைநகரைத் திருநெல்வேலிக்கு மாற்ற முனைந்தனன். அமைச்சனது வஞ்சக எண்ணங் களை யுணராத அரசனும் தன் தலைநகரைத் திருநெல் வேலிக்கு மாற்றிக் கொண்டான்.

குடிலனது வஞ்சக எண்ணங்களை யுணர்ந்த **சுந்தர முனிவர்** என்னும் பெரியார் ஒருவர் மதுரையில் வாழ்ந்து

வந்தார். அவர் ஜீவகன் குலகுரு ஆவார். ஜீவகன் பால் பேரன்பு கொண்ட அப்பெரியார் திருநெல்வேலியில் மன்னர்க்கு யாது விளையுமோ என அஞ்சித் திருநெல் வேலிக் கடுத்து ஓர் ஆசிரமத்தை ஏற்படுத்தி அதில் வந்து தங்கினர்.

தன் குலகுருவாகிய சுந்தர முனிவரின் வருகையை அறிந்த ஜீவகன் அவரைத் தன் அரண்மனைக்கு அழைத்து, வேண்டும் உபசாரங்களை யெல்லாம் செய் தான். தான் எடுப்பித்த கோட்டைகளை முனிவர்க்குக் காட்டினன். முனிவர் இவைகளை யெல்லாங் கண்டு மகிழ்ந் தவர் போல அரசனை நோக்கி, 'ஜீவக! புதிதாகக் கட்டப் பட்டிருப்பதால் இக்கோட்டைக்கும், உன் குடும்பத்திற் கும் எவ்வகைத் தீங்குகளும் நேராது காக்கச் சில கிரியை கள் செய்யவேண்டும். அதற்கு இக்கோட்டை அறை களுள் ஒன்றை என் வசம் விடுதல் அவசியமாகும்' என்றார். பாண்டியனும் முனிவரது விருப்பத்திற்கு இசைந்து கோட்டை அறையொன்றின் சாவியை அவ ரிடம் சேர்ப்பித்தான். முனிவரும் தமது ஆசிரமம் சென்றடைந்தார்.

மனோன்மணி, தன் இளமைப் பருவந் தொட்டே **வாணி** என்னும் நற்குணம் வாய்ந்த நங்கை யொருத்தி யொடு நெருங்கிய தோழமை கொண்டிருந்தாள். திரு நெல்வேலியிலும் வாணியொடு மனோன்மணி மகிழ்ந்து காலங் கழித்து வந்தாள். இங்ஙனம் வாழ்ந்து வந்த மனோன்மணி நோயினால் வருந்துபவள் போல் பொலி விழந்து காணப்பட்டாள். அரசன் இதனை அறிந்து, சுந்தரமுனிவரை யழைத்துத் தன் பெண்ணின் நிலை குறித்து அவரோடு உரையாடினன். சுந்தர முனிவரும்

மனோன்மணியின் நிலையைக் கூர்ந்து அறிந்து, அவளுக்கு விரைவில் மணம் முடிக்கவும், அவளுக்கு ஏற்ற கணவன் சேரநாட்டு அரசனும் பெருவீரனுமாகிய புருடோத்தமனே என்பதையும் ஜீவகனுக்கு உணர்த்தி நீங்கினர்.

தன் பெண்ணின் திருமணச் செய்தியை ஜீவகன் குடிலனோடு கலந்து பேசினன். குடிலனோ, சேர வேந்தனாகிய புருடோத்தமன் பாண்டியன் மகளை மணப்பானேல் தனது செல்வாக்குக் குறைந்து விடுமே என்றெண்ணினன்; இதற்குத் தான் உடன்படின் தனது நீண்ட நாள் வஞ்சக எண்ணங்களை நிறைவேற்ற இயலாது போகுமே என்ற ஏக்கமும் குடிலனுக்கு ஏற்பட்டது.

எனினும், குடிலன் தனது மனக் கருத்தை வெளிக் காட்டாது அரசனது விருப்பத்திற்கு உடன்படுவான் போல, "அரசே! இச்செய்தி எனக்கு மிகுந்த மகிழ்ச்சியை அளிக்கிறது. அடியேன் இவ்வாறு பலமுறை எண்ணியதுண்டு. சேரனும் நமது அரச குமாரிக்கு ஏற்ற தகுதியுடையவன் என்பதை நான் கேள்விப் பட்டுள்ளேன். எனினும், இம்மண விஷயம் பேச நாமாக அவனிடம் செல்லுதல் முறையன்று. சேர நாட்டில் **நன்செய்நாடு** என்ற பகுதி, பண்டு நமது பாண்டிய நாட்டையே சார்ந்திருந்தது. சென்ற சில காலங்களாகவே சேரன் அதனை ஆளுகின்றனன். நமக்கு உரியதாகிய அப்பகுதியை நம்மிடம் விடும்படி தூதர் மூலம் செய்தி அனுப்புவோம். சேரன் நம் கோட்டை வலி முதலிய கருதிப் போர் செய்ய அஞ்சி நம்மொடு சமாதானம் ஆகிவிடுவான். அச்சமயத்தில்

மணச் செய்தியைக் குறிப்பாகப் புலப்படுத்தின் அவன் மறுப்பனே? பெரும! இதுவே செய்யத் தக்கது" என்றனன்.

குடிலனது இவ்வுரைகளைக் கேட்ட ஜீவகன் அவனைப் பெரிதும் பாராட்டினன். குடிலன் மகனாகிய பலதேவனைச் சேர நாட்டிற்குத் தூதுவனாக அனுப்புவது என்று முடிவு செய்யப் பட்டது. குடிலன், தன் நீண்ட நாள் கருத்தை முடித்துக் கொள்வதற்கு ஏற்ற வகையில் பலதேவனுக்குச் சேரமன்னனிடத்தில் சொல்ல வேண்டிய செய்திகளைக் கற்பித்து அவனைச் சேர நாடு நோக்கிச் செல்ல அனுப்பினன்.

சேர மன்னனிடம் தூதுவனாகச் சென்ற பலதேவன், "நன்செய் நாட்டைப் பழமைபோல பாண்டியனுக்கு உரிமைப் படுத்துக. இன்றேல், பாண்டியன் மகளை மணந்து அதன் மூலமாக அந்நாட்டைப் பெறுக. இம்முறைகளுக்கு உடன் பாடில்லையேல் போருக்கு எழுக" என்று கூறினன். இவ்வுரைகளைக் கேட்ட உண்மை வீரமுடைய புருடோத்தமன் வெகுண்டெழுந்தான். தன் படைத் தலைவர்களுக்கு ஆணை யிட்டுப் படைகளைத் திரட்டிக் கொண்டு பாண்டிய நாட்டின் மீது படையெடுத்து வந்தான்,

சேரமன்னன் படையெடுத்து வருதலை யறிந்த பாண்டியன் தன் படைகளைத் திரட்டிப் போருக்கு ஆயத்தம் ஆனன். இரு படைகளும் கைகலந்தன. பாண்டிய மன்னனும் படைத் தலைமை தாங்கி எதிரிகளைத் தாக்கினன். இங்ஙனம், போர் நிகழ்ந்து

கொண்டிருக்கும் பொழுது பலதேவன்பால் வஞ்சங் கொண்ட பாண்டிய நாட்டுப் போர் வீரன் ஒருவன் அவனை வேலால் தாக்கினன். பலதேவனும் இத்தாக் குதலைத் தாங்காது மூர்ச்சித்துக் கீழே விழுந்தான். அமைச்சரது மகனைத் தாக்கிய அவ்வீரனை அருகில் இருந்த வீரர்கள் உண்மை யறியாது கொன்றனர். இவற்றால் பாண்டியப் படையில் பெருங் குழப்பம் ஏற்பட்டது. குழப்பம் வரவரப் பெருகிப் படை வீரர்கள் சிதறுண் டோடினர். ஜீவகன் உயிர் பிழைக்க முடியாத நிலையில் சிக்குண்டான். நாராயணன் என்ற உண்மை வீரமுடையவனது உதவி அவ்வமயம் இல்லா திருக்குமேல் ஜீவகன் இறந்திருப்பான்.

போர்க் களங்களில் வெற்றியைத் தவிர வேறு அறியாத பாண்டியன், தனக்கு அன்று ஏற்பட்ட இழிவை எண்ணி உயிர் வாழ விரும்பாது தற்கொலை செய்து கொள்ள முனைந்தான். இச் சமயத்திலும் நாரா யணன் தோன்றி மனோன்மணியின் ஆதரவற்ற நிலையை எடுத்துக் கூறித் தடுத்தான்.

குடிலனது சூழ்ச்சிகளில் அகப்பட்டுத் துன்புறும் ஜீவக வழுதியைக் காப்பாற்றுங் கருத்தோடு சுந்தர முனிவர் அப்பொழுது அவ்விடம் வந்தடைந்தார். முன்பு மன்னனிடம் தாம் பெற்ற அறைக்கும், கோட் டைக்கு வெளியே இருந்த தமது ஆசிரமத்திற்கும் இடையே ஓர் சுருங்கை வழியைச் சுந்தர முனிவர் அமைத்திருந்தார். அச் சுருங்கை வழியாக மன்னனையும் அவன் மகளையும் அழைத்துச் செல்லவே முனிவர் அப்பொழுது அங்கு வந்தார். தமது கருத்தை முனிவர் அரசனுக்கு அறிவிக்கப் பாண்டியனும் தன் மகளை

மட்டும் அவரது ஆசிரமத்திற்கு அனுப்ப உடன் பட்டான்.

கெடுவான் கேடு நினைப்பான் அல்லவா? ஜீவகனுக்கு முனிவர் கூற்றிலும் ஐயந் தோன்றியது. முனிவர் கருத்தைத் தன் அமைச்சனிடம் தெரிவித்தான். தனது விருப்பத்தை நிறைவேற்றிக் கொள்வதற்கு அதுவே ஏற்ற தருணம் என்று துணிந்து அப்பாதகனும், 'அரசர் பெருந்தகையே! அரசிளங்குமரி இப்பொழுது வேற்றிடத்தில் சென்று இருத்தல் நலமுடையதே. எனினும் மணமாகாத பெண்ணை அவ்வாறு அனுப்புவது பிறர் பழிப்பதற்கு இடமாகும் அல்லவா? இதற்கென் செய்வது?' என்றனன். இதனைக் கேட்ட மன்னன் மனங் கலங்கினான். பின்னர் ஒருவாறு தேர்ந்து மனோன்மணியைப் பலதேவனுக்கு அன்றிரவே மணம் செய்து வைக்கவும் உடன் பட்டனன். தான் கருதிய வண்ணமே யாவும் நிகழ்தலை உணர்ந்து பெருமகிழ்ச்சி கொண்டு குடிலன் அவ்விடத்தை விட்டு நீங்கினான்.

பின்னர், ஜீவகன் மனோன்மணியை அழைத்து, பலதேவனுக்கு அவளை மணம் முடிக்கத் தான் இசைந்துள்ள செய்தியைத் தெரிவித்தான். இதனைக் கேட்டு மனோன்மணி திடுக்குற்றாள். தன் தந்தையின் உரைகள் மனோன்மணியின் காதுகளுக்குக் காய்ச்சின நாராசம் போன்றிருந்தன. எனினும் என்செய்வாள்? மனோன்மணி, தன் தந்தையின் ஆபத்தான நிலையை அறிந்து, அவனது மனங் கலங்காதவாறு நடந்து கொள்வதே தனக்குரிய கடமையாகும் என்று தெளிந்து அம்மணவினைக்கு உடன்பட்டாள்.

குடிலனோ, இச்சமயத்தில் முனிவர் கட்டிய சுரங்க வழியைக் கண்டறிய அவரது அறைக்குச் சென்றான்; சுரங்கவழியைக் கண்டான். அவ்வழியே புகுந்து சென்ற குடிலனைக் கோட்டைக்கு வெளியேயுள்ள சேர மன்னனது பாசறைகள் இருக்கும் இடத்தில் அவ்வழி கொண்டு செலுத்தியது. சேர மன்னனது பாசறைகளைக் கண்ட குடிலன், பலவாறு எண்ணத் தலைப்பட்டான். 'இன்றைய போரில் நாம் வகுத்தபடி பாண்டியனைக் கொல்ல இயலாது போயிற்றே; இன்று நம் மகனைப் போர்க்களத்தில் கொல்ல சில போர் வீரர் மோசடி செய்தது போல, நாளை நமக்கும் ஆபத்து நேரின் என் செய்வது? முடிவு செய்தபடி பலதேவன் இன்றே மனோன்மணியை மணந்துவிடுவன்; எனவே ஜீவகனது உதவியை இனியும் நான் எதிர்பார்த்திருப்பானேன்? சேர மன்னனை நெருங்கி, அவனுக்கு இச் சுரங்க வழியை நான் காட்டுவேனாயின் அவனும் இவ் வழியே அரண்மனையுள் நுழைந்து பாண்டியனைக் கொன்று பாண்டி நாட்டையுங் கைக்கொள்வான். கோட்டைகளையும் பாண்டிய அரசாட்சியையும் தனக்கு எளிதில் கிடைக்குமாறு செய்த எனக்குச் சேரன் சிறப்புகள் செய்யாது ஒழிவனோ? எனக்கே முடி சூட்டிச் செல்வன் அல்லவா? நான் இனிச் செய்யத் தக்கது இதுவே' என இவ்வாறு குடிலன் சிந்தித்துத் தெளிந்து சேரனது பாசறையை நெருங்கினான்.

அந்நள்ளிரவிலும் சேர மன்னன் உறங்காதவனாய் பாசறையின் வெளியில் உலாவிக்கொண்டு நின்றான். குடிலன் புருடோத்தமனை நெருங்கிப் பணிந்து, தனது வஞ்சக எண்ணங்களை வெளியிட்டான். தன்னலம் பேணாத் தகைமையாளனாகிய சேரனோ, "எமக்குப்போரில்

வெற்றி பெறுவது மட்டும் நோக்கமன்று. உம்மைப் போன்ற இராஜத் துரோகிகளைப் பாண்டியர்க்குக் காட்டிக் கொடுத்து அவரைக் காப்பேன். வேண்டுமாயின் மீண்டும் போராடி அங்கு என் வீரத்தை நாட்டுவேன். சுரங்க வழியைக் காட்டுக" என வீர உரை பகர்ந்து குடிலனுக்கு விலங்கிட ஆணை பிறப்பித்தனன்.

குடிலனோ, இடியொலி கேட்ட பாம்பு போல ஆனான். சேர வீரர்கள் குடிலனுக்கு விலங்கிட்டனர். குடிலன் சுரங்க வழியைக் காண்பித்துக் கொண்டு முன்னே செல்லச் சேரன் பின்தொடர்ந்தான்.

அப்பொழுது அரண்மனையினுள், மனோன்மணியின் திருமணத்திற்கான காரியங்கள் நடைபெறலாயின. குடிலனை யொழிந்த மற்றவர்கள் எல்லாம் மணவறையைச் சூழ்ந்திருந்தனர். குறித்த வேளை வரவே மணச் சடங்குகள் தொடங்கப் பெற்றன. பலதேவன் மனோன்மணிக்கு மாலையிடும் நேரமும் நெருங்கிற்று. இச்சமயத்தில், திருமணம் நிகழும் அவ்விடத்தின் அண்மையிலுள்ள சுந்தர முனிவர் அறையிலிருந்து, விலங்கிடப்பட்ட குடிலன் வழிகாட்ட சேர மன்னன் புருடோத்தமன் வெளி வந்தான். அங்கு நிகழ்வனவற்றைச் சேரன் நோக்கினான். கூட்டத்தின் நடுவே மனோன்மணி நிற்றலைக் கண்டு அவள் முன் சென்று நின்றனன். மனோன்மணியும் சேரனைக் கண்டு பெருமகிழ்ச்சி கொண்டவளாய்த் தன் கையிற்கொண்ட மண மாலையை அவன் கழுத்தில் இட்டாள். இந்நிகழ்ச்சிகளைக் கண்டு ஜீவகன் முதலியோர் பெரு வியப்புற்றனர்.

புருஷோத்தமன் பாண்டியனிடம் குடிலன் தனக்குக் கூறிய வஞ்சக எண்ணங்களையும் அவற்றிற்குத் தான் உடன்படாது விலங்கிட்டுக் கொண்டு வந்த செய்தியையும் விளக்கிக் கூறினான். குடிலனது வஞ்சகச் செயல்களை இப்பொழுதே ஜீவகன் அறிந்தனன். ஜீவகனும் சுந்தர முனிவரும் மனோன்மணியையும் புருடோத்தமனையும் வாழ்த்தினர்.

இவ்வரலாறு **மனோன்மணீயம்** என்ற நூலுள் விளக்கமாகச் சொல்லப்படும். இந்நூலை நாடக வடிவில் திருவனந்தபுரம் மகாராஜா கல்லூரி அறிவு நூற் பேராசிரியராய்த் திகழ்ந்த **சுந்தரம் பிள்ளை** அவர்கள் இயற்றி யுள்ளார்கள்.

**அருஞ்சொற்பொருள்:**

சூழ்ச்சித்திறம் - ஆலோசனை கூறும் வன்மை; இசைந்து - உடன்பட்டு; நங்கை - பெண்களுள் சிறந்தவள் (ஆண்பால் – நம்பி); பொலிவு - அழகு; பண்டு - முன்பு; வெகுண்டு - கோபித்து; அமயம் - பொழுது; சுருங்கை – கள்ளவழி; பேணு - காவாத; வியப்பு - ஆச்சரியம்.

**1. வினாக்கள்:**

1. குடிலன் பாண்டிய நாட்டுத் தலைநகரை மதுரைக்கு மாற்றியதன் கருத்தென்ன?

2. சுந்தர முனிவர் என்பவர் யார்? கோட்டை யறையொன்றை இவர் பெற்றதேன்?

3. வாணி, பலதேவன், ஜீவகன் — இவர்களைப் பற்றிய சிறு குறிப்பு எழுதுக.

4. பலதேவன் சேரமன்னனிடம் கூறிய தூதுப் பொருள்கள் யாவை?

5, பாண்டியனுக்கும் சேரனுக்கும் நடந்த போரின் நிகழ்ச்சிகளைக் குறித்தெழுதுக.

6. "மணமாகாத பெண்ணை வேற்றிடத்திற்கு அனுப்புவது பிறர் பழிப்பதற்கு இடமாகும் அல்லவா?" இவ்வாறு கூறியோர் யாவர்? கூறப்பட்ட சந்தர்ப்பம் யாது? விளக்குக.

7, குடிலனது நீண்ட நாள் விருப்பம் யாது? அதனை எவ்வாறு நிறைவேற்றிக் கொண்டான்?

8. சுருங்கை வழியாகச் சென்று சேரனது பாசறையைக் கண்டபொழுது குடிலன் எண்ணிய எண்ணங்கள் யாவை?

9, சேரன் முன் குடிலன் எங்ஙனம் நடந்து கொண்டான்?

10. மனோன்மணி புருடோத்தமனை மணந்த வரலாறு யாது?

11. குடிலனது வஞ்சக எண்ணங்களைப் பாண்டியன் எவ்வாறு உணர்ந்தான்?

2. கட்டுரை யாக்கம்

1. கீழ்வரும் தலைப்புகள் ஒவ்வொன்றையும் குறித்து ஒரு பக்கத்தில் கட்டுரை வரைக:—

1. ஜீவகனது குண நலம்.
2. குடிலன் இயல்பும் பாண்டி நாட்டைக் கவர அவன் செய்த சூழ்ச்சிகளும்.
3. புருடோத்தமன் குண நலம்.
4. சுந்தர முனிவர் பாண்டியனைக் காக்க மேற்கொண்ட செயல்கள்.

2. இக்கதை நிகழ்ச்சிகளை மனோன்மணி கூறுவதுபோல் அமைத்து எழுதுக.

3. மொழிப் பயிற்சி :

1. இவற்றை உமது வாக்கியங்களில் அமைத்து எழுதுக:— சூது வாது, சூழ்ச்சித் திறம், பொலிவிழந்து, வஞ்சங் கொண்டு, கெடுவான் கேடு நினைப்பான், இசைந்துள்ள, செவியிற் புகுத்திய காய்ச்சின நாராசம் போல, வெகுண் டெழுந்தான், ஆயத்தமானான், அவ்வமயம், ஐயம், பழிப்புரை, கண்ணுங் கருத்துமாக. இடியொலி கேட்ட நாகம்போல.

2. குறித்தபடி வாக்கியங்களை மாற்றுக:—

1. குடிலன் அமைச்சர்க் குரிய சூழ்ச்சித் திறமெல்லாம் உடையவன். என்றாலும் தன்னலத்தில் மிகுந்த கருத்துடையவனாய் இருந்தான். (ஒரே வாக்கியமாக மாற்றுக)

2. சுந்தர முனிவர் குடிலனது வஞ்சகச் செயல்கள் அனைத்தையும் அறிவார். (பொருள் மாறாது எதிர் மறை வாக்கியமாக மாற்றுக)

3. முனிவர் ஜீவகனை நோக்கி, "ஜீவக! புதியதாகக் கட்டப்பட்டு இருப்பதால் இக்கோட்டைக்கும் உன் குடும்பத்திற்கும் எவ்வகைத் தீங்குகளும் நேராது காக்கச் சில கிரியைகள் செய்யவேண்டும். இதற்கு இக்கோட்டை அறைகளுள் ஒன்றை என் வசம் விடுவாயாக" என்று கூறினார். (அயற்கூற்றாக மாற்றுக)

4. தாயை இளமையிலேயே இழந்த மனோன்மணியை ஜீவகன் கண்ணும் கருத்துமாக வளர்த்துவந்தான்.

(செயப்பாட்டுவினை வாக்கியமாக)

5. தந்தையின் உரைகள் மனோன்மணியின் காது களுக்குக் காய்ச்சின நாராசம் போல் விழுந்தன.

[அணியை நீக்கிச் செய்தி வாக்கியமாக மாற்றுக]

6. ஜீவகனது உதவியைக் குடிலன் இன்னும் எதிர் பார்ப்பானேன்? (செயப்பாட்டு வினை வாக்கியமாக)

7. கோட்டைகளையும் பாண்டிய அரசாட்சியையும் எளிதில் கிடைக்குமாறு செய்த குடிலனுக்குச் சேர வேந்தன் சிறப்புகள் செய்யாது ஒழிவனோ? (குடிலன் என்று தொடங்கி வாக்கியத்தை ஏற்ற படி மாற்றுக)

3. பின்வரும் சொற்களின் பொருள் வேறுபாட்டை அறிக:—

1. உணர்ந்தான் – உணர்த்தினான்; கற்றான் – கற்பித்தான்; நீங்கினான் - நீக்கினான்; சூடினான் - சூட்டினான்; கலங்கினான் - கலக்கினான்.

2. களம் - கலம்; மணம் - மனம்; பொலிவு - பொழிவு; உரைகள் – உறைகள்.

---

## 6. அமெரிக்கா

"தள்ளா விளையுளும் தக்காரும் தாழ்விலாச்
செல்வரும் சேர்வது நாடு"

அமெரிக்கா செல்வங் கொழிக்கும் சிறந்த நாடுகளுள் சிறந்த ஒன்று. இயற்கையின் இனிய வளமும் செயற்கையின் செழிப்பும் சேர்ந்து அமெரிக்காவை ஒரு நல்ல நாடாக ஆக்கியுள்ளன. இந்நாடு முப்பது நூறாயிரம் சதுர மைல் பரப்புள்ளது. நம் நாட்டின் பரப்பு பதினேழரை நூறாயிரம் சதுரமைல்தான் என்பது இங்கு நோக்கத் தக்கது! கிழக்கு மேற்காக இரண்டாயிரத்து ஐந்நூறு மைலும், தென் வடலாக ஏறக்குறைய ஆயிரம் மைலும் உள்ள இந்நாட்டின் மக்கள் தொகை நம் நாட்டின் மக்கள் தொகையில் மூன்றில் ஒரு பகுதியே ஆகும்.

இந்நாட்டின் இயற்கை வளத்தைச் செவ்வனே செயல் படுத்தி வளம் படுத்திய திறமையுள்ளவர் இந்நாட்டின் மக்கள். இந்நாட்டினர் ஒற்றுமை மிக்கவர். இங்கு ஆங்கிலேயர், பிரெஞ்சுக்காரர், சர்மானியர், போலந்தியர் முதலிய பல வகையினர் இருக்கின்றனர். அமெரிக்காவில் குடியேறியவர்களாக இருப்பினும் இவர்கள், தங்களை 'அமெரிக்கர்' என்று பெருமையோடு சொல்லிக் கொள்கின்றனர்; காரணம் இந்நாட்டின் மக்கள் எல்லோரும் நாட்டின் பகுதிக்கும், பிரிவுக்கும் முதன்மை தந்து தங்களுக்குள் உயர்வு தாழ்வு கற்பித்துக் கொள்ளாமையே ஆகும். அரசியலிலும் எல்லோரும் சமமாகவே வாழ்கின்றனர். இந்நாட்டின் பொது

மொழியாக இவர்கள் ஆங்கிலத்தையே ஏற்றுக் கொண்டுள்ளனர். பழக்க வழக்கங்களும் நாடு முழுமையும்




அமெரிக்காவிலுள்ள மாளிகைகள்

ஒன்றே. ஆனல் இம்மக்கள் தங்களுக்குள் பேசிக் கொள்ளும் பொழுது தம்தம் மொழியிலேயே பேசிக் கொள்கின்றனர். மக்கள் ஒருவரை ஒருவர் சரிசமானமாக மதித்து நடப்பவர். இதுவே இவர்களின் ஒற்று

மைக்குக் காரணம். இவைகளை நோக்க அமெரிக்க ஐக்கிய நாடு உண்மையாகவே ஐக்கிய நாடுதான் என்று கூறுவதில் மிகை யொன்று மில்லை.

ஏறக்குறைய முப்பத்து ஏழு நகரங்கள் இந்நாட்டில் உள்ளன. மிக உயர்ந்த நூறு மாடிகள் உள்ள அழகிய கட்டிடங்களை இந் நகர்களில் காணலாம். தெருக்கள் எல்லாம் வரிசை வரிசையாகவும், ஒழுங்காகவும் நேராக வும் அமைந்திருப்பதால் எவ்விடத்தையும் எளிதில் கண்டு கொள்ளலாம். தெருக்கள் எல்லாம் அகர வரிசையில் அமைக்கப்பட்டிருக்கின்றன. ஒவ்வொரு நகரத்திலும் பல பூங்காக்கள், சுண்காட்சிச் சாலைகள், வாசகசாலைகள், சினிமாக் கட்டிடங்கள், பெரும் நூல் நிலையங்கள் முதலியவை இருக்கின்றன.

அமெரிக்காவின் தலைநகர் **வாஷிங்டன்.** இது கொலம் பிய சில்லாவில் உள்ளது. இது அமெரிக்காவின் முதல் தலைவராகிய **'ஜார்ஜ் வாஷிங்டனி'ன்** நினைவாக நிறுவப் பட்ட நகரம். அழகான பல பூங்காக்களும், வானளா விய பல உயர்ந்த கட்டிடங்களும் அணி செய்யும் இந் நகர் ஏறக்குறைய எழுபது சதுரமைல் பரப்புள்ளது. இங்குதான் அமெரிக்கத் தலைவரின் மாளிகையுள்ளது. இது **'வெள்ளை மாளிகை'** என்று அழைக்கப்படுகிறது.

**நியூ யார்க்:** அமெரிக்காவிலேயே இங்குதான் அதிக மக்கள் வசிக்கின்றனர். பெரிய பல கட்டிடங்கள் இந் நகரை எழில் செய்கின்றன. இது பெரிய துறைமுகப் பட்டினம். இந்நகரில் தான் ஏறக்குறைய முந்நூறு அடி உயரமுள்ள விடுதலைச் சிலை உள்ளது. வெளி நாட்டிலிருந்து கப்பலில் செல்வோர் ஹட்சன் ஆற்றில்

நுழையும் பொழுதே இச் சிலையைக் காணலாம். இச் சிலைதான் அமெரிக்காவின் உயிர்நாடி. அமெரிக்கா தன்னாட்சி பெற்ற நாடு என்பதை இச்சிலை இங்கு வருவோருக்கும் போவோருக்கும் நினைவுறுத்துகிறது.

உலகப் புகழ் பெற்ற **ஹாலிவுட் நகர்** கலிபோர்னியா நாட்டில் உள்ளது. அண்மையில் எழுந்த அழகிய இந்நகரை "சினிமா நகர்" என்று சிறப்புடன் அழைக்கின்றனர் அமெரிக்கர். இந்நகரில் படப் பிடிப்பும், படத் தொழிலும் செய்யும் மக்களே நிறைந்துள்ளனர். அடுத்திருக்கும் நகரிலும் பல சினிமாத் தொழிற் சாலைகள் உள்ளன. ஹாலிவுட் படங்களும், நடிக நடிகைகளும் சினிமாத் தொழிலில் சிறப்பாகப் போற்றப் படுகின்றனர். இத்தொழில் நுணுக்கம் தெரிந்தோர் பலரும் இங்குக் குழுமி யுள்ளனர். இயற்கை வண்ணப் படங்களைப் பல நுணுக்கங்களுடன் முதன் முதல் எடுத்தது இந்நகரில்தான். ஆகையால் இதை சினிமா நகர் என்று அழைப்பது மிகவும் பொருந்தும்.

**சிகாகோ** என்னும் சிறந்த நகர் பல தொழிற்சாலைகள் நிறைந்த பெரிய நகரமாகும். இங்கு எப்பொழுதும் புகையைக் கக்கிக் கொண்டிருக்கும் தொழிற் சாலைகள் மிகுந்திருத்தலைக் காணலாம். இந் நகரினின்றும் அமெரிக்காவின் பல பகுதிகட்கும் இருப்புப் பாதைகள் செல்கின்றன. இங்குதான் சிகாகோ நகரப் பல்கலைக் கழகமும் உள்ளது. நம் நாட்டுத் தத்துவ நூற்கலை (Philosophy) யின் உயர்வை **விவேகானந்த அடிகள்** முதன் முதல் உலகறிய விளக்கியதும் இந்நகரில் தான் என்பது நாம் நினைவிற் கொள்ளவேண்டியதாகும்.

அடுத்ததாக இந்நாட்டின் அரசியலைச் சிறிது நோக்குவோம். இந்நாடு கூட்டாட்சி (Federal) அரசியல் அமைப்பைச் சேர்ந்ததாகும். பருவமடைந்த ஒவ்வொருவருக்கும் வாக்குரிமை உண்டு. தனியாகச் சில அதிகாரங்கள் அரசாங்கங்களுக்கு (States) உள்ளன. ஒவ்வொரு அரசாங்கத்திற்கும் ஒரு கவர்னர் (Governor) உண்டு. காங்கிரஸ் என்னும் அவையும், பிரதிநிதிகள அவையும் உண்டு. பிரதிநிதிகள் அவையில் உறுப்பினரின் காலம் இரண்டாண்டுகளாகும்.

அமெரிக்கத் தலைவர் (President) தேர்தல் நான்கு ஆண்டுகட்கு ஒரு முறை நடக்கும். துணைத்தலைவரும் உண்டு. அவரது பதவிக்காலம் ஆறு ஆண்டுகள் ஆகும். அவையுடன் தலைவர் இயங்குவர். அயல் நாட்டைப் பற்றியும் உள்நாட்டைப்பற்றியும் சில சிறப்பான அதிகாரங்களும் தலைவருக்கு அளிக்கப்படுகின்றன.

அமெரிக்க நாடுகளில் பதினாறு வயது வரை கட்டாயப் படிப்பு, முறையாக உள்ளது, அதாவது உயர்நிலைப் பள்ளி இறுதி வகுப்பு வரை மாணவர்களிடம் கட்டணம் பெறாமல் அரசாங்கத்தார் அவர்களுக்கு இலவசக் கல்வி அளிக்கின்றனர். பல அலுவலில் உள்ளோரும் ஓய்வு நேரங்களில் படிக்கப் பல வசதிகள் உள்ளன. பல பல்கலைக் கழகங்கள் பல கலைகளையும் கற்பிக்கின்றன. தொழிற் கல்வி வகுப்பு முதல் மேடைச் சொற் பொழிவு வகுப்புவரை பல வகுப்புகள் இங்கு நடத்தப் படுகின்றன. பெண்களும். ஆண்களும் சேர்ந்து பயிலும் முறை (Co-education) இங்கு அமுலில் உள்ளது.

அமெரிக்காவில் கோதுமை வயல்கள் நிறைந்த பகுதிகளையும், பழத்தோட்டங்களையும், வெட்ட வெளிகளையும் நிறையக் காணலாம். மலைகளில் அழகிய நீர்வீழ்ச்சிகளும், மலைச்சரிவுகளில் அழகிய சாலைகளும் காணப்படும். சாலைகளில் கார்கள் எப்பொழுதும் சென்று கொண்டே யிருக்கும். ஏனெனில் அமெரிக்காவில் ஐவருக்கு ஒருவர் வீதம் கார் பெற்றுள்ளார்கள். பெரிய அணைக்கட்டுகள் பல உண்டு. சாலைகளிலும் அணைக்கட்டுகளிலும் வேலை செய்து செப்பனிடுவதெல்லாம் இயந்திரங்களே! கடின வேலைகளை மனிதர் செய்வதைக் காணவே முடியாது.

அமெரிக்கர் பண்ணைகள் வைத்தே வேளாண்மை செய்கின்றனர். பண்ணைகள் ஒவ்வொன்றும் ஏறக்குறைய நாற்பது ஏகர் பரப்புள்ளது. இப் பண்ணைகளின் நடுவிலேயே அவர்கள் தனியான வீட்டில் வாழ்கிறார்கள். தனித்திருப்பினும் வானொலியையும் தொலைப் பேசியையும் தங்கள் வீட்டில் வைத்துக் கொண்டு தனிமையைப் போக்கிக் கொள்ளும்-வளமை அவர்களிடம் உள்ளது. துணைத் தொழிலாக மாடுகள், கோழிகள், தேனீக்கள் முதலியவைகளை வளர்க்கிறார்கள். அவர்கள் செல்வர்களாகவும், மகிழ்ச்சியுடனும் வாழ்கின்றனர். ஐம்பது கல் தொலைவில் நடக்கும் விருந்துக்கும் அவர்கள் காரில் செல்வதற்கு அஞ்சுவதில்லை. ஓய்வு நாட்களில் அவர்கள் மிகவும் விரைவாக உல்லாசப் பிரயாணங்கள் செய்துகொண்டிருப்பர். அகண்ட அட்லாண்டிக் கடலும், பசிபிக் கடலும் இல்லையெனின் அமெரிக்கர் ஓய்வு நாட்களில் உலகின் ஒரு பகுதியிலேயே காணப்படுவர். அவ்வளவு போக்கு வரவு வசதிகள் அவர்களிடம் உள்ளன, புகை வண்டியும், கார்களும்

அமெரிக்கரின் சுருசுருப்பைக் காட்டுவனபோல் மிகவும் விரைவாகவே செல்வதைக் காணலாம். ஆகாய விமானச் செலவும் அங்கு பெருகி வருகின்றது.

சில நூற்றுண்டுகட்கு முன் குடியேற்ற நாடாக விளங்கிப் பிறகு போராடி உரிமை பெற்ற இந்நாட்டின் நிலை இவ்வளவு விரைவாக முன்னேற்றமடைய மக்களின் சலியா உழைப்பும், அரசியல் போக்குமே காரணம். இயற்கை நல்ல விளைவைக் கொடுக்கிறது. மக்களும் தக்கவர். செல்வரும் நிறைந்திருக்கின்றனர். இவை இந்நாட்டை வள்ளுவர் கூறிய உண்மை நாடாக்கி யுள்ளன. இயற்கை வளமுள்ள நாட்டில் உழைப்பும், அதில் களிப்பும் சேர்ந்தால் இவ்வளம் பெறுவது எளிதல்லவா? இவற்றை நாம் அமெரிக்கரிடம் கற்று முன்னேறுவோ மாக!

**அருஞ்சொற்பொருள்:**

மிகை - மிகுதி; பூங்கா - பூஞ்சோலை; எழில் - அழகு; நுணுக்கம் - நுட்பம்; அவை - சபை; செலவு - பிரயாணம்.

1. **வினாக்கள் :**

1. அமெரிக்கா எங்குள்ளது? அங்கு வாழும் மக்கள் தொகையையும் குறிப்பிடுக.

2. "அமெரிக்க ஐக்கிய நாடு உண்மையாகவே ஐக்கிய நாடுதான் என்று கூறுவதில் மிகையொன்றுமில்லை.''—இவ்வாறு கூறப்பட்டதன் கருத்தை நன்கு விளக்குக.

3. அமெரிக்க நாட்டின் தலை நகர் யாது? அந்நகரின் அமைப்பை எழுதுக.

4. நியூ யார்க், ஹாலிவுட் நகர், சிகாகோ-இந்நகரங்களைப் பற்றிய சிறு குறிப்புகள் வரைக.

5. அமெரிக்காவின் அரசியல் அமைப்பு குறித்தெழுதுக.

6. அமெரிக்க மக்களின் கல்விப் பயிற்சியைப் பற்றி நீர் அறிவ தென்ன?

7. அமெரிக்கர் மேற்கொள்ளும் தொழில்கள், பொழுது போக்குகள் யாவை?

8. அமெரிக்க நாட்டின் முன்னேற்றத்திற்குக் காரணம் என்ன?

9. அமெரிக்கரிடம் நாம் அறிந்து கொள்ள வேண்டுவது யாது?

2. கட்டுரை யாக்கம் :

பின்வரும் தலைப்புகள் ஒவ்வொன்றையும் குறித்து ஒரு பக்கத்திற்கு மேற்படாமல் கட்டுரைகள் எழுதுக:—

1. அமெரிக்க நாட்டின் இயற்கை அமைப்பும் மக்கள் தொழில்களும்.
2. அமெரிக்கப் பெரு நகரங்கள்.
3. அமெரிக்க மக்களின் வாழ்க்கை.

3. மொழிப் பயிற்சி:

1. கீழே காணப்படும் வாக்கியங்கள் பிழையுடையன; அவற்றைத் திருத்தமுடன் அமைக்க:—

(1) இயற்கையின் இனிய வளமும் செயற்கையின் செழிப்பும் அமெரிக்காவை ஒரு நல்ல நாடாக ஆக்கி யுள்ளது.

(2) நியூயார்க் பெரிய துறைமுகப் பட்டணம்; இன்னகரில் முந்நூறு அடி உயரமுள்ள விடுதலைச் செலை உள்ளது.

(3) அண்மையில் எழுந்த அழகிய இந்நகரை சினிமா நகரம் என்றழைக்கப்படுகிறது.

2. சொற்றொடர்களைப் பிரித்து எழுதுக:— நூறுயிரம், முப்பது, அமைந்திருந்தது, நினைவுறுத்துகிறது, நிறைந்துள்ளது, நினைவிற்கொண்டான், தொழிற்கல்வி, ஏனெனில், மக்கட்டொகை, தனித்திருத்தல்.

3. கீழே குறித்தபடி வாக்கியங்களை மாற்றுக:—

(1) இயற்கையின் இனிய வளமும், செயற்கையின் செழிப்பும் சேர்ந்து அமெரிக்காவை ஒரு நல்ல நாடாக ஆக்கியுள்ளன. ('அமெரிக்கா' என்று வாக்கியத்தைத் தொடங்குக)

(2) இந்நாட்டின் பொது மொழியாக அமெரிக்கர்கள் ஆங்கிலத்தையே ஏற்றுக்கொண்டுள்ளனர்.

(செயப்பாட்டு வினை வாக்கியமாக)

(3) வாஷிங்டனில் அமெரிக்கத் தலைவரின் மாளிகையுள்ளது. இது வெள்ளை மாளிகை என அழைக்கப்படுகிறது. (ஒரே வாக்கியமாக)

(4) ஹாலிவுட் படங்களையும், நடிக நடிகைகளையும் சினிமாத் தொழிலில் சிறப்பாகப் போற்றுகின்றனர். (கருத்து மாறாது எதிர்மறை வாக்கியமாக)

(5) இயற்கை வளமுள்ள நாட்டில் உழைப்பும் அதில் களிப்பும் சேர்ந்தால் இவ்வளம் பெறுவது எளிதல்லவா? (இது எவ்வகை வாக்கியமாகும்? செய்தி வாக்கியமாக மாற்றுக)

---

ஹோமியோபதி பிரஸ், கும்பகோணம்.

# INBA TAMIL VACHAKAM

( In Tamil )

Book III for Form III

**PART II**

By

Vidwan. Pon. SUBRAMANYAM,

Pulavar B. MAHALINGAM.

**GENERAL BOOK COMPANY,**

**KUMBAKONAM.**

 **1951** **[Price 0-8-0**